# என் எண்ணங்கள் . . .

க. ப. அறவாணன், M.A., B.O.L., P.O.L.,
துணைத் தமிழ்ப் பேராசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

நாம் இந்துவா என்றால், இல்லை: சமணனா என்றால், அதுவும் இல்லை: கிறித்தவனா என்றால் அப்படியும் இல்லை. நான் ஓர் ஆராய்ச்சியாளன். இந்தப் பார்வைதான் என்னைப் 'பந்தப் பார்வை' யினின்று விடுவிக்க முடியும் விடுவிக்கிறது. திரு. மு. தெய்வநாயகம் எழுதிய 'சான்றோர் யார்?' என்ற நூலை இந்தச் சமநிலை நோக்கோடுதான் நான் பார்க்கிறேன். பார்க்கவைக்கிறேன்.

சங்க இலக்கியத்துள்ளும், இடைக்காலப் பிற்கால இலக்கியத்துள்ளும் ஆளப்பெறும் சான்றோர் யார்? கிறித்தவ அடியாரே! கிறித்தவ அடியார் ஆன்மையுடன் ஏகபெருமானாகிய ஐந்தவித்தானுக்குச் சான்று கூறும் இயல்தான் சான்றாண்மை!- என்ற இவரது முடிவுகள் (பக்-126) சிந்தனைக்குரியன. சிலரது நிந்தனைக்கும் உரியன. இந்த முடிவுக்காக ஆசிரியர் காட்டும் இலக்கியச் சான்றுகள், (பக்-13, 14) உரைகோள்கள் (பக்-46, 83) வரலாற்றுப் பின்புலங்கள் (பக். 85, 120) இவரது அரிய உழைப்பை அறிவிக்கின்றன.

சங்க காலத்தில் வைதீக, பௌத்த, சமண சமயங்கள் தமிழகத்தில் இருந்தன. இவை தவிர, கிறித்தவ சமயமும் அக்காலத்தில் இருந்திருத்தல் வேண்டும் (பக். 83) எனும் இவரது முடிவு தருக்க நெறிக்கு உட்பட்டதுதான்,

நூலைப் படித்து வரும்போது, நூலாசிரியர் ஓர் ஆய்வாளர் என்பதைவிட ஒரு சமயச் சார்பாளர், சாய்வாளர் என்ற எண்ணம் யாரையேனும் உறுத்துமானால், அவர்கள் இந்தப் பகுதியைப் பன்முறை படிக்கட்டும்!

''சங்க காலக் கிறித்தவர்கள் தமிழ்ப் பண்பாடு சிறிதும் மாருத நற்றமிழர்கள் (பக். 131). இக் காலக் கிறித்தவர்கள் உடலால் தமிழர்களேயன்றி உள்ளத்தாலும், பண்பாட்டிலும் அன்னியர்களே. (பக். 133)''

இவ்வரிகள் திருவள்ளுவத் தெய்வநாயகத்தின் நடுநிலை நெஞ்சைப் பிளந்து அளந்து காட்டுகின்றன.

சான்ருேர் எனுந் தொடரே காலப்போக்கில் சானர் என மருவியது. சானர் எனும் பெயர் 'நாடார்' என்ற சாதியர்க்கு வழங்கும் பிறிதொரு பெயர் (பக். 29) என்று இவர் எடுத்துக் காட்டும் கருத்து களிப்புக்குரியது.

சான்ருேர்=சானர் என்ற செய்தியை முதன் முதலாக 1871ல் தவத்திரு. எச். மார்ட்டின் வின்ஃபிரட் (Rev. H. Martyn Winfred) என்ற பாதிரியார் 'சான்ருேர் மரபு' (Shandror Antiquity) என்ற நூலில் எடுத்துக்காட்டினர். இவருக்குப்பின் இவரை ஒட்டி, இவரது தந்தையார் திரு. எச். வின்ஃபிரட் 'சான்ருேர் குல மரபுக் கட்டளை' எனும் நூலை எழுதினர். இதனுள் சான்ருேராகிய நாடார், பாண்டிய நாட்டு மன்னர் மரபினர் என்பதை நிறுவிக் காட்டினர். 1880 இல், செங்கற்பட்டு மாவட்டத்தில் துணைப் பதிவாளராக இருந்த திரு. சாமுவேல் சர்குணர், 'திராவிட க்ஷத்திரியர்' எனும் துண்டு வெளியீட்டை வெளியிட்டார். இவ்வெளியீட்டில்

'சான்றோர்' எனும் சொல், சாணுரைத்தான் குறித்தது என நிறுவினர். 1891 இல் பொறுப்பில் இருந்த கணக்கெடுப்பு மேலாளர் (Census Superintendent) ஒருவர் சாணர் என்பதனை சான் + நார் = சாணர் எனப் பிரித்துப் பொருத்தி உரைத்தார். இச்சொல் மூலத்தைப்பற்றிய குறிப்புக்களும் மறுப்புக்களும் தொடர்ந்தன. இவ்வாதப் பிரதிவாதத்தில் திராவிட ஒப்பியல் தந்தை கால்டுவெல் 'The Tinnevelly Shanars' என்ற ஆய்வுரை மூலம் கலந்துகொண்டார். சாணர் எனும் சொல்லை முற்ற முழுக்கச் 'சான்றோர்' என்ற பழைய இலக்கியத் தொடர்ப் பொருளோடு இணைத்துரைப்பதை மறுதலித்தார். கால்டுவெல் அவர்களின் கருத்துரைகளுக்கு நாடார் சமூகத்திலிருந்து மாற்று அம்புகள் தொடுக்கப்பட்டன. முன்னே குறித்த திரு. சாமுவேல் சர்குண நாடார், 'Bishop Caldwell and the Tinnevelly Shanars' (1883) எனும் கண்டனக் குறிப்பை வெளியிட்டார். இக்காலத்தில் வெளிவந்த 'Madras Times', 'Madras Mail' என்ற ஆங்கில ஏடுகளில் ஏற்றும், எதிர்த்தும் பல கடிதங்கள் வெளியிடப்பட்டன. அம்மட்டுமன்றி புராட்டஸ்டண்டு கிறித்தவத் தலைமைப் பீடத்திற்கும், பேராயர்க்கும் (Arch Bishop) பிரித்தானியத் தலைமையமைச்சர்க்கும் கால்டுவெல்லைப் பற்றிப் புகார் கடிதங்கள் பல எழுதப்பட்டன.

இச்சூழலில் இலங்கையினின்று திரு செந்தில்நாத அய்யர் கால்டுவெல்லுக்கு ஆதரவாக, சாமுவேல் சற்குணர்க்கு எதிராக 'Shanars Not Kshatriyas' என்ற துண்டு வெளியீட்டை வெளியிட்டார். இவருக்கும் பலத்த எதிர்ப்புக்கள் தொடர்ந்தன. 'செந்தில்நாதனுக்குச் செருப்பு அடி' எனும் தலைப்பில் எதிர்த்துண்டு ஏசும் மொழியில் வெளியிடப்பட்டது, இதனைத் தொடர்ந்து 'மான நட்ட வழக்கு' ஒன்று திரு செந்தில்நாதனால் தொடரப்பட்டது. இவ்வழக்

கில், சாமுவேல் சற்குணர்க்குச் சிறைத் தண்டமும், பணத் தண்டமும் வழங்கப் பெற்றன. இந்தச் சமயங்களில் டாக்டர். கால்டுவெல், இந்தியாவில் இல்லை. தன் சொந்த நாட்டில் இருந்தார். இந்தியா வுக்கு மீண்டும் வந்தபோது சாஞர் சொல்லாய்வு பற்றி மேலும் சில தன் எண்ணங்களை வழங்கிஞர். கால்டுவெல்லை எதிர்த்து திரு. ஞானமுத்து நாடார் ஒரு குறிப்பை வெளியிட்டார். 'Research on the world Nadar : a Manual relating to the Kingly Community' என்ற அரிய பெரிய நூல் ஒன்றை தி. வி. துரைசாமி கிராமணி இக்காலத்தில்தான் வெளியிட்டார்.

இத்துறையில் டாக்டர். ராபர்ட். எல். ஹார்டு க்ரேவ் (Dr. R. L. Hardgrave Jr.) எழுதி அண்மை யில் வெளியிட்ட 'Nadars of Tamilnad' என்ற அரிய நூலும், 'The New Mythology of a Caste in Change' என்ற அவரது ஆய்வுரையும் (Refer : Journal of Tamil Studies Vol. 1. No. 1. April 1969 PP 61-87) குறிக்கத்தக்கவை.

'சான்ருேர்–சான்றவர்–சான்ருர்' என்ற ஆசிரி யர் சுட்டிக்காட்டும் ஆய்வுப் பகுதியை நிறைவு படுத்தவே மேற்கண்ட நீண்ட குறிப்புக்கள் சுருங் கிய அளவில் எடுத்தளிக்கப் பெற்றன. சான்ருேர் >சாஞர் என்பதன் வாத வரலாற்றைக் கோடிட்டுக் காட்டுவதற்குப் பிறிதொரு நோக்கமும் உண்டு. இச்சொல் வரலாறு, சொற்பிறப்பியல் (Etymology) அளவில் மட்டும் முழுமை அடைவது அன்று. வர லாற்றியல், சமூக இயல், மாந்த இயல் பின்புலங் களையும் கொண்டுதான் முடிவு செய்யப்பட்டாக வேண்டும் என்பதனை எடுத்துக்காட்டுதற்காகவுந் தான் !

ஆசிரியர், திருவள்ளுவரையும், தோமையாரையும் இணைத்துக் காட்டும் பகுதி (பக். 101) நுணுக்கமானது. ஆனால் இந்த இணைப்பு, திருவள்ளுவரைப் பற்றிய தோமையரைப் பற்றிய புனைகதைகளையே அடிப்படையாகக் கொண்டது என்பதனை இங்குச் சுட்டிக் காட்டுதல் வேண்டும்.

சிவன் என்ற சொல் தென்னாட்டில் இருந்த பண்டைத் தமிழ்ச் சான்றோர் வழங்கிய சொல்லன்று (பக். 194) என்று காட்டப்படும் மறைமலையடிகள் குறிப்பு மறுபார்வைக் குரியது.



தமிழாய்வு, 'எனக்குத் தெரியும்; எல்லாம் தெரியும்' என்ற சகலகலாவல்லப் போலித் தனத்தால் உயிர்க்க முடியாது. இலக்கிய, வரலாற்றுச் சிக்கல்களைப் பகுதி பகுதியாக எடுத்துக்கொண்டு குறித்த ஒரு துறையில் செலுத்தப்படும் ஒருமுக நோக்கில்தான் தமிழாய்வு பிழைக்க முடியும். திரு. மு. தெய்வநாயகம், தன்னைத் 'திருவள்ளுவம் – கிறித்தவம்' என்ற யாரும் தீண்டாத் தலைப்பில், யாரும் வேண்டாத் தலைப்பில் தன்னை ஒருமுகப் படுத்திக் கொண்டிருக்கிறார். இந்த ஒன்றிப்புக்கு என் நெஞ்சார்ந்த வாழ்த்து.

புதிய முடிவுகளைக் காணத் துடிக்கும் ஆசிரியரது அறிவும், அதற்கேற்ற நிறைவும், முடிவுகளை எடுத்துரைக்கும் துணிவும், அவற்றை வகுத்து விளக்கும் தெளிவும், கருத்துரைக்கும் பாங்கில் இருக்கும் பணிவும் பாராட்டுக்கும் சீராட்டுக்கும் உரியன.

சென்னை-86
12-4-72

க. ப. அறவாணன்.

# எனது கருத்து

செந்தமிழ்க் களஞ்சியம், சிந்தாமணிச் செல்வர்,
மகாவித்வான் **மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை**

புலவர். மு. தெய்வநாயகமவர்கள் மிக முயன்று இயற்றிய 'சான்றோர் யார்?' என்னும் நூலை முற்றும் படித்தேன். முகப்பட்டையில் 'சான்றோர்' என்னும் மொழியமைந்த திருவள்ளுவர் குறள் இரண்டும், பிசிராந்தையார் ஔவையார் இருவரும் இயம்பிய சொற்றொடர்களும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. திருவள்ளுவர் திருவுருவ ழம் காட்சியளிக்கின்றது. திருவள்ளுவர் சான்றோர் என்பதில் தமிழருக்கோ பிறமொழியாளருக்கோ ஐயம் இல்லை. ஆயினும் நூல் நுதலிய ஆய்வு, 'திருவள்ளுவர் கிறித்தவர்' என்னும் கருத்தையே வற்புறுத்துவது புலனாகிறது.

இக்கருத்துக்கு அரண் கோறுவதாகப் புலவர் தரும் விளக்கங்கள் பொருந்துவன எனக் கருத இயலவில்லை.

பொது நீங்குவமைக்குத் தக்க எடுத்துக்காட்டாய்—'தாமே உவமை தமக்கு' எனப் போற்றத் தக்கவராய்—விளங்கும் பொய்யில் புலவனைத் திருவள்ளுவரைத் தம்மவர் என எம்மதத்தவரும் போற்றி வருவது உலகறிந்த செய்தி. ஆயினும், உண்மையில் அவர் மதம் எது என்பதை அறிவதில் அறிஞர் பலரும் ஆர்வம் காட்டி வருகின்றனர். அத்தகைய முயற்சியில் இந்நூலும் ஒன்று. இந்நூலையும் படித்தறிதல் நமது கடன்.

'சான்றோர்' என்னும் சொல்லுக்குச் 'சானார்' என்றும் 'சாட்சி கூறுபவர்' என்றும் பொருள் கூறி,

அதற்குப் பிற்கால ஆட்சிகளை எடுத்துக் காட்டு கிருர் நூலாசிரியர். திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் அச்சொல்லுக்கு இப்பொருள் இன்மை உணரத் தக்கது.

விவிலிய நூல் கிறித்தவ மறை, அம்மறை நூற்செய்திகளுக்கும் திருக்குறள் தெளிவுறுத்தும் செய்திகளுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டென்பதும் உணரத்தக்கது.

*'உண்ணுமை உள்ளது உயர்நிலே; ஊன் உண்ண*
*அண்ணுத்தல் செய்யாது அளறு.' (குறள்-225)*

'ஒருவன் ஊனுண்டால், அவனை உண்ட நரகம், தன் வாயைத் திறவாது,' என்கிருர் திருவள்ளுவர். விவிலிய மறை (*Bible*) இதற்குச் சான்று பகருமா.

'நீலகேசித் தெருட்டு' என்பது, பௌத்தம் முதலிய மதங்களைக் கண்டித்துக் கூறும் சமண காப்பியம். அஃது எதிர் நூல் வகையைச் சார்ந்தது. அந்நூலுக்கு உரை செய்தவர் தமிழ் மரபினை நன்கறிந்த சமய திவாகர வாமன முனிவர் என்னும் சமணப் பெரியார். அவர் அந்நூலின் மோக்கல வாதச் சருக்கம் அறுபதாம் செய்யுள் உரையில்,

'பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்'.

என்னும் குறளை மேற்கோள் காட்டி, 'என்பது எம் ஒத்து', எனவும், எண்பத்தேழாம் செய்யுள் உரையில்,

'உற்ற நோய் நோன்றல் உயிர்க்குறுதுண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு'.

என்னுங்குறளை மேற்கோள் காட்டி, 'என்பது எமது

ஓத்து ஆதலின், பொய்யுரைத்தலும் அறமாம்', எனவும் கூறியிருப்பது கருதற்பாலது; இங்ஙனம் கூறியது வாதச்சருக்கத்தில் என்பதும் உளங்கொள்ளத்தக்க உண்மையாம் 'ஓத்து' என்பது வேதம் எனப்பொருள்படுமாதலின், திருக்குறள் தமிழ்ச் சமண வேதம் என்பது தெளிவு.

ஆராய்ச்சி என்பது தக்க காரணங்களை எடுத்துக்காட்டி உண்மையை நிலைநிறுத்துவது ஆதலின், ஒருபாற்கோடாமை மேற்கொண்டொழுகுதல் சான்றோர்க்கு அணியாகலின், 'காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருளை ஆய்தல்' அறிஞர் கடன். எனவே, பெரிதும் முயன்று இயற்றப்பட்ட 'சான்றோர் யார் ?' என்னும் இந்நூலைப் பெற்று ஊன்றிப் படித்து உண்மை தெளியத் தமிழறியும் ஆர்வமுடையாரனைவரையும் வேண்டுகிறேன்.

வாழ்க திருக்குறள் வையத்தில் எஞ்ஞான்றும்
தாழ்வகற்று நூலாய்த் தழைத்து !

சென்னை-7
5-4-72

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

# என்னுரை

"உலகிற்கு ஒளி நீங்கள்" — மத். 5 : 14.

"உலகிற்கு உப்பு நீங்கள்" — மத். 5 : 13

இயேசு பெருமான் தம் அடியவர்களுக்கு அமைய வேண்டிய பண்புகளுக்கு, ஒளியையும் உப்பையும் உருவகப்படுத்துகிறார். அதே ஒளியையும், உப்பையும் சான்றோர் பண்புகளாக வள்ளுவர் காட்டுவது அட்டையில் பொறிக்கப்பட்டுள்ளது.

இயேசுவின் அடியவர்களுக்கு முதலில் கிறித்தவர் என்ற பெயர் இல்லை. அவர்கள் பரிசுத்த ஆவி நிரம்பியவர்களாக (சால்பு + ஆர்), இயேசுபெருமான் வாழ்க்கையை ஆண்மையுடன் சான்று கூறி (சான்று + ஆண்மை), மற்றவர்களுக்குச் சான்றாக விளங்குபவர்களாக (சான்று + அவர்), பிற்கால வடமொழிகலந்த தமிழ் மொழிபெயர்ப் பின்படி சாட்சிகளாக விவிலியத்தில் குறிக்கப் படுகின்றனர்.

"நீங்கள் என் சாட்சிகள்" அப்—1 : 8.

"நாங்கள் எல்லோரும் சாட்சிகள்"

அப்—2 : 32, 3 : 15, 5 : 32.

சான்றார் (சான்று + ஆர்) என்பது "ஆ ஓ ஆதலும் செய்யுளுள் உரித்தே" என்னும் விதிப்படி சான்றோர் ஆகும். சால்பு—> சான்று—> சான்றார்—> சான்றோர். சான்றாண்மை, இவை யாவும் சங்க இலக்கியங்களில் ஏராளமாக ஆளப் பட்டுள்ளன.

'சான்றார்' என்னும் தமிழ்ச் சொல்லுக்கு நேர் வடமொழிச் சொல் 'சாட்சி'யே என்பதைச் சைவ ஏனாதி நாதனார் புராணம் தெளிவுபடுத்துகிறது.

**சான்றோர் = தமிழ்**

'ஈழகுலச் சான்றார் ஏனாதி நாதனார்'

சேக்கிழார்—ஏனாதி நாதனார் புராணம்-2.

**சாக்ஷி = வடமொழி**

''தஸ்மின் னேனாதி நாதாக்கிய ஆஸீத்
சாக்ஷி குலோத் பவ''

உபமன்யு ரிசி — ஏனாதி நாதர் சரிதம் — 3.

ஆகவே சான்று, சான்றார், என்பன சங்க கால வழக்குச் சொற்களே என்பதும் அவை சாட்சி, சாட்சிகள் என்ற பொருளில் ஆளப்பட்டன என்பதையும் மறுப்பதற்கில்லை.

இன்று நாம் கொள்ளும் சாட்சி என்ற பொருளிலேயே 'சான்று' என்ற சொல் ஆளப்பட்டுள்ளமையை, சங்க காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததெனக் கருதப்படும் சிலப்பதிகாரம்,

'' வன்னி மரமும் மடைப்பளியுஞ் சான்றாக
முன்னிருத்திக் காட்டிய மொய் குழலாள்''

—சிலப். 21 : 5.

என்னுமிடத்து எவ்வித ஐயத்திற்கும் இடமின்றிச் சான்றுடன் நிறுவுகிறது. சான்றார் (சான்று + ஆர்) என்னும் சொல் சங்ககாலத்தியதே என்பதை சங்க நூலாகிய பரிபாடல் தெளிவுறுத்துகிறது.

'தகவுடைமங்கையர் சான்றாண்மை சான்றார்
இகழினுங் கேள்வரை யேத்தி' பரி—20 - 88.

ஆகவே சான்றாகவிளங்குபவர்— சான்று கூறுகிறவர்— சான்றவர், சான்றார், சான்றோர், சான்றாளர் என அழைக்கப்படுவர் என்பதில் ஐயம் கொள்ளக் காரணம் இல்லை.

இச்சான்றுகளின்படி, திருக்குறளில் கூறப்பட்டுள்ள அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையை அடிப்படைப் பண்புகளாகக் கொண்ட (சான்று + அவர்) சான்றவராகிய (குறள் 990) சான்றோர், பரிசுத்த ஆவியால் நிறைந்து (சால்பு) இயேசுபெருமானுக்குச் சான்று கூறும் (சான்று + அவர்) சான்றவர்களாக ஏன் இருத்தல் கூடாது? என்பதே இவ்வாய்வு நூல்.

வடமொழியில் சாட்சி என்றும், தமிழில் சான்ரூர் என்றும் அழைக்கப்படும் ஏனுதிநாதனர் பரம்பரையினர் இன்றும் நம்மிடையே இருப்பதாக அறிஞர் பலராலும் கூறப்படுகிறது. அப்பரம்பரையினரின் வரலாற்றை ஆய்வது இந்நூலின் நோக்கம் அன்று.

ஆகவே இந்நூலை நோக்கும் அறிஞர் பெருமக்கள் பிற்கால சாதி ஆய்வில் சிக்கி 'மற்றொன்று விரித்தல்' என்னும் நிலைக்கு ஆளாகி விடாதபடி தங்களைக் காத்துக்கொள்ள வேண்டுகிறேன். சாதி ஆய்வு இந்நூலின் நோக்கமன்று என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறேன்.

சான்றோர் என்ற சொல் வழக்கு, சிறப்பாகத் திருக்குறளில் - சான்றவர்களாகிய இயேசுவின் அடியவர்களுக்குப் பொருந்துமா? பொருந்தாதெனில் எவ்வெவ் வகைகளில் பொருந்தாது? எனத் தக்க சான்றுகளுடன் நிறுவவேண்டியதே இந்நூலை நோக்கும், மறுக்க எண்ணும் அறிஞர் பெருமக்களின் கடமையாகும்.

இவ்வாய்வு வரிசையில் ஒரு நூலை மட்டுமே மேலெழுந்த வாரியாகப் பார்த்துவிட்டு, ஒருவர் ஐயம் தெரிவிப்பாரானல் அவருடைய ஐயம் தவறு

ளது என்பதை வரிசை முழுவதையும் ஆழ்ந்து நோக்கும் அறிஞர் எவரும் அறியக்கூடும். ஆகவே இந்நூலை நோக்கும் அன்பர்களை, நூல்வரிசை முழு வதையும் ஆழ்ந்து நோக்க வேண்டுகிறேன். ஒரு நூலில் ஏற்பட்ட ஐயத்தை அடுத்த நூல் நீக்கக் கூடும். இப்பொழுது வெளி வந்திருக்கும் ஆறு நூல்கள் தவிர இன்னமும் இன்பத்துப்பால், புலால் மறுத்தல், ஊழ் ஆகிய மூன்று தலைப்புகளில் விரை வில் நூல்கள் வெளிவர இருப்பதும் அறிவிக்கப்பட் டுள்ளது (பின் அட்டை). ஆகவே இன்பத்துப்பால் பற்றியோ, புலால் மறுத்தல் பற்றியோ, ஊழ் பற்றி யோ ஐயங்கொள்ளும் அறிஞர் பெருமக்கள், அந் நூற்கருத்துக்களை அறிந்த பின்னரே தங்கள் கருத் துப்பற்றி முடிவுக்கு வர இயலும்.

திருக்குறளைத் தங்களது என உரிமை பாராட் டாத சமயத்தவர் எவரும் தமிழகத்தில் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இந்நிலையில், இன்னுர் இவ்விடத்தில் எங்களது என உரிமை பாராட்டி யுள்ளார்; ஆகவே திருக்குறள் அவர்களதே என்று முடிவு கூறுவது எவ்வகையில் பொருந்தும்? ஒவ் வொரு சமயத்தவரும் உரிமை பாராட்டி இருப்பதற் கான குறிப்புகளை ஏராளம் கொடுக்கலாம். இதை வைத்து ஒரு முடிவுக்கு வரமுடியுமா?

அடர்ந்த கொடிய காட்டில் இலக்கு ஒன்றை உணர்ந்த ஒருவன், அதை நோக்கி, முதலில் பாதையமைத்துச் செல்லுவது மிக மிகக் கடினம். பின்னர் வருகிறவர்களுக்கு அது எளிது. அவர்கள் அப்பாதையை மேலும் செம்மைப் படுத்தவும் முடி யும். அவ்வாறே இலக்கியத்தில் முற்றிலும் புதிய கருத்தைத் தன் ஆய்வில் உணர்ந்த ஒருவன், அதை வெளியிடுவதும், நிலைநாட்டுவதும், மிக மிகக் கடினம். காலமும் உழைப்பும் மற்ற வாய்ப்பு களும் தேவை.

இந்நூலுக்கு மிகவும் அன்புடன் முன்னுரை தந்த எனது மதிப்பிற்குரிய பேரறிஞர், செந்தமிழ்க்களஞ்சியம் சிந்தாமணிச்செல்வர், மகாவித்வான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை அவர்களுக்கும், ஆராய்ச்சி அறிஞர், பேராசிரியர் க. ப. அறவாணன் அவர்களுக்கும், இந்நூல் உருவாகுங்கால், இதற்கு வேண்டிய விவிலியக் குறிப்புகளை நல்கிய நடமாடும் விவிலியக் களஞ்சியமாக விளங்கும், அருள் திரு. வி. டி. சகாயம் ஐயரவர்களுக்கும் எளிய பேதையேனை ஆய்வாளனாகக் காட்டும் இறையருட் சக்திக்கும், எனது பணிவான நன்றி என்றும் உரித்தாகுக.

மு. தெய்வநாயகம்

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| 1. | சங்க காலச் சான்ரேூர் ... | 9 |
| 2. | சான்ரேூர் கொள்கை ... | 20 |
| 3. | திருமறையும், தமிழ் மறையும் ... | 85 |
| 4. | தோமையரும், தமிழகமும் ... | 107 |
| 5. | தடுப்புச் சுவர்கள் ... | 121 |
| 6. | சான்ருண்மை ... | 137 |
| 7. | செய்தி ... | 228 |

# சான்றோர் யார்?



## 1. சங்ககாலச் சான்றோர்

சங்க காலத் தமிழகத்தையும், அக்கால மக்களின் பண்பாட்டையும் நாம் அறிந்து கொள்வதற்கு ஆதாரமாய் இருப்பவை சங்க இலக்கியங்கள். அவற்றுள் போர், வீரம், சமயம் போன்ற புறச் செய்திகளைத் திரட்டித்தரும் நூல் புறநானூறு. அப்புறநானூற்றுச் செய்திகளை நாம் நோக்குங்கால் அங்கு தெளிவான இருவேறு வகையான கொள்கையுடைய இரு கூட்டத்தாரைக் காண்கின்றோம். இவ்விரு கூட்டத்தாருக்கும் மக்களிடையேயும், அரசர்களிடையேயும் செல்வாக்கு இருந்தது என்பதும் தெரிகிறது இவ்விரு கூட்டத்தாரும் தங்கள் கொள்கைகளை மக்களிடையே பரப்பி வந்தனர். வெவ்வேறு கொள்கையுடைய அவ்விருவகைக் கூட்டத்தினரை நோக்குவோம்.

## அந்தணர்

இவர்களைப் பற்றிய புறநானூற்றுச் செய்திகளில் சில :

அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக
மன்னர் ஏவல்செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே —புறம். 26

அறுதொழி லந்தணர் அறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன். —புறம். 397

ஆக்குரற் காண்பினந்தணாளர்
நான்மறைக் குறி... —புறம். 362

கேள்வி முற்றிய வேள்வி அந்தணர். —புறம். 361

யானே பரிசிலன் மன்னு அந்தணன் —புறம். 200

புலனழுக் கற்ற வந்தணாளன் —புறம். 126

கழல்புனை திருந்தடிக் காரிநின்னாடே
அழல்புறந்த ருஉமந்தண ரதுவே —புறம். 122

இறைஞ்சுக பெரும நின்சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை எதிரே —புறம். 6

அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட்டி மயமும் பொதியமும் போன்றே
—புறம். 2

மறைநவி லந்தணர் நுவலவும் படுமே —புறம். 1
ஆவுமானியற் பார்ப்பன மாக்களும் —புற. 9

ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து —புற. 367

இவர்களைக் குறித்து டாக்டர். மா. இராச மாணிக்கனார் அவர்கள் தம் "தமிழ்மொழி இலக்கிய வரலாறு" என்னும் நூலில் கூறுவது:-

'புறநானூற்றுப் பாடல்கள் பல தோன்றிய காலத்தில் வடமொழியாளர் செல்வாக்குத் தமிழகத்தில் நன்கு பரவிட்டது.

அவர்களை,

"ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர்" (26)

என்று புலவர் பாராட்டினர். அவர்கள் எதிரே "தலை வணங்குக" என்று அரசருக்கு அறிவுறுத்தினர். வேள்வி செய்தல் சிறப்பாகக் கருதப்பட்டது. (15)

அந்தணர்க்கு ஊர்களும் செல்வமும் நீர்வார்த்துக் கொடுக்கப்பட்டன (361, 362, 367). அவர்கள் தூண்டுதலால், தமிழரசர் சிலர் வேள்வி செய்யத் தொடங்கினர். சேர மன்னருட்பலர் வேள்வி செய்தமையைப் பதிற்றுப்பத்து உணர்த்துகிறது. சோழருள் பெருநறகிள்ளி என்பவன் இராஜசூயயாகம் செய்து, "இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி" என்று பெயர் பெற்றான். பாண்டியருள் ஒருவன் பல் யாகசாலைகளை அமைத்துப் "பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி" எனப் பெயர் பெற்றான். அவன் வேள்வி அந்தணர்க்கு ஊர்களை உதவினன் என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் செப்புகின்றன. பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன் பல வேள்விகள் செய்த பெருமகன். இவை அனைத்தும் சங்க காலப் பிற்பகுதியில் (கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில்) தமிழகத்துச் சமயத் துறையில் (பெருமக்கள் அளவில்) வடமொழியாளர் செல்வாக்கு வேரூன்றி வளர்ந்து வந்தது என்பதை

அங்கையங்கனியென அறிவிக்கின்றன. இவர்கள் சேர்க்கையால் வடமொழிச் சொற்கள் பல தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றன.''

(தமிழ் இலக்கிய வரலாறு பக். 249)

இவர்கள் வடநாட்டிலிருந்து வந்தவராதலால் இவர்கள் தமிழரினும் தனித்து விளங்கினர். அந்தணர்களுக்கு நான்மறையோதல், வேள்வி செய்தல் போன்ற தனிக் கொள்கைகள் இருந்தபோதிலும் அக்கொள்கைகளைப் பின் பற்றின தமிழர்களை அந்தணர் தங்களுடன் இணைத்துக் கூறவில்லை. 'அந்தணர்' என்னும் சொல் அந்தணர் பரம்பரையைக் குறிக்கின்றதுவே யன்றி, அந்தணக் கொள்கையை ஏற்றுக் கொண்ட தமிழர்களைக் குறிக்கவில்லை. ஆகவே **தமிழன் ஒருவன் அந்தணன் ஆக முடியாது, அந்தணனைப் பின்பற்றத்தான் முடியும்.** அந்தணன் என்பது ஒரு குறிப்பிட்ட கொள்கையையுடைய ஒரு கூட்டத்தில் பரம்பரையாகப் பிறந்த ஒருவனையே குறித்தது என்பது தெளிவு.

இவர்கள் சங்க காலத்தில் தமிழர்களுடன் எவ்வித வேற்றுமையுமின்றி இணைந்து பழகியிருக்கின்றனர். அதனால் அவர்கள் கொள்கைகளை மக்களும் சில மன்னர்களும் பின் பற்றினர். அந்தணர்களிடையே தமிழ் மொழியைக் கற்றுத் தேர்ந்த புலவர்களுமிருந்திருக்கிறார்கள். கபிலர் என்னும் தண்டமிழ்ப் புலவர் அந்தணர் இனத்தைச் சேர்ந்தவரே என்பது

"யானே பரிசிலன் மன்னும் அந்தணன்" —புறம். 200

என அவர் பாடியுள்ள புறநானூற்றுச் செய்யுளால் தெளிவாகிறது. அத்துடன் அக்கால அந்தணர் புலால் மறுத்தலை உடையவர்கள் அல்லர் என்பதும் அக்கொள்கை அவர்களுக்கு மிகப் பிற்காலத்தே ஏற்

பட்டது என்பதும் கபிலர் வாக்காலேயே நமக்குத் தெளிவாகிறது.

புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற்றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோறுண்டு வருந்து தொழிலல்லது
பிறிது தொழி லறியா...... —கபிலர்—புற. 14

மேலே நாம் கண்ட வேள்விக் கொள்கைக்கு மாறான கொள்கை யொன்றும் சங்க காலத்தில் இருந்தமையைச் சங்ககால நூல்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

1. ....................................அதன்றலை
ஆன்றவிந் தடங்கிய **கொள்கைச்**
சான்றோர் பலர் யான் வாழுமூரே —புற. 191

2. ............ ............ என்றுஞ் சான்றோர்
சான்றோர் **பர்ல ராப**
சாலார் சாலார் பால ராகுபவே —புற. 218

3. சான்றவிர் வாழியோ சான்றவிர் என்றும்
பிறர்நோயுந் தந்நோய் போற்போற்றி அறனறிதல்
சான்றவர்க் கெல்லாம் **கடனானல்** இவ்விருந்த
சான்றீ ருமக் கொன்று அறிவுறுப்பேன்
—கலித்தொகை 139. நெய்தல். 22

4. சான்றோர் **கடனிலை** குன்றலுமிலர் என்றுட
உலகங் கூறுப துண்டெனநிலைஇய [னமர்ந்து
—நற்றிணை. 327. நெய்தல்

5. இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிக ளுயலன் பிறரும்
சான்றோர் சென்ற **நெறி**யென
ஆங்குப்பட் டன்றவன்கை வண்மையே
—புற. 134

6. ......................................வில் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின் —புற. 34

7. சான்றோ ருரைப்பத் தெளிகுவர்கொல்
—பதிற்றுப்பத்து. 8

8. சான்றோராற் பல்லாண்டு வாழ்கவென வாழ்தனன்று
—சிறுபஞ்சமூலம்

9. தினையனைத்தே யாயினுஞ் செய்த நன்றுண்டாப்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர் —நாலடியார்

10. உம்மை எரிவாய் நிரயத்து வீழ்வர் கொலென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன் —நாலடியார்

11. சான்றோர் அவைப்படிற் சாவாது பாம்பு.
—பழமொழி

12. அறிமடமுஞ் சான்றோர்க் கணி. —பழமொழி

13. இசையு மெனினு மிசையா தெனினும்
வசைதீர வெண்ணுவர் சான்றோர். —நாலடி.

14. கழியக் காதல ராயினுஞ் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
—அகநானூறு 112-குறிஞ்சி

15. சான்றோ ரிருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல —புறநானூறு-266

16. இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர்.
—அகநானூறு-55-பாலை

இவ்வாறு சங்க இலக்கியங்களிலும் பிற்பட்ட இலக்கியங்களிலும் சான்றோரைப் பற்றிய குறிப்புகளை அதிகமாக நாம் காண முடிகிறது. இவர்களுக்குத் தனிக் கொள்கை இருந்தமையையும் நாம் அறிகிறோம். இவர்களைப் பற்றி டாக்டர். மா. இராசமாணிக்கனார் கூறுவது :

"கல்வி கேள்வி ஒழுக்கங்களால் சிறந்த சான்றோர் போர்களையே விரும்பிய மன்னர்களுக்கும் வீரர்களுக்கும் வாழ்க்கை நிலையாமையை வற்புறுத்தத் தொடங்கினர்; உடல் நிலையற்றது, செல்வம் நிலையற்றது, வாழ்க்கை நிலையற்றது, என்பதைப் பல சான்றுகள் கொண்டு விளக்கி அவர்களை அறவழியில் செலுத்தினர்; துறவு உள்ளம் கொள்ளச் செய்தனர். "நாடும் செல்வமும் மன்னர் உயிர்க்குத் துணை செய்வதில்லை. அவர் செய்யும் அறவினையே மறுமைத் துணையாய் நின்று இன்பம் தரும்" (357) "இவ்வுலகம் ஒரே நாளில் எழுவரைத் தலைவராகக் கொள்ளும் தன்மை உடையது; அஃதாவது எந்த ஆட்சியும் நிலையில்லாதது. பற்று விடுதலே இன்பத்தைக் காணும் வழி" (358)

பல நாடுகளை வென்று ஆண்ட முடிவேந்தரும் முடிவில் முதுகாட்டையே அடைந்தனர். நினக்கும் அவ்வாறு ஒரு நாள் வரும். இவ்வுலகில் இசை அல்லது வசையே நிலைத்து நிற்கும். ஆதலால் வசை நீங்கி இசை வேண்டின், ஒரு பாலும் கோடாது முறை வழங்குதலும் இரவலர்க்கு ஈதலும் நல்லது. இச் செயலால் உலகம் உள்ளளவும் நின் பெயர் நிலை பெற்று விளங்கும்" (359). "சீரிய பண்பு நலன்களைப் பெற்றிருந்த மன்னர் சிலர்; அவர்கட்கு மாறுபட்டவரே மிகப் பலர்; அவரும் மறைந்தனர்; அவர்தம் செல்வமும் மறைந்தது. ஆதலால் ஒழுக்கம் குன்றுமல் அறச் செயல் செய்து நற்பெயர் பெறுதலே நல்லது" (360). "அறிவுடை அரசர் தாயினும் சாலப் பரிந்து ஏழைகளுக்கு உதவுவர்; நெறிதவருது முறை செய்வர்; வாழ்க்கை இன்பத்தை நன்கு நுகரினும் யாக்கை, செல்வம் முதலியவற்றின் நிலையாமையை மறவார்; அவரே நற்பேற்றைப் பெறுவர்" (361)

விரிந்த சிந்தையும் பரந்த நோக்கமும் உடைய பெரு மக்கள் உலகத்தில் எல்லா ஊர்களையும் தம் ஊர்களாகவே கருதுவர்; உலக மக்களைத் தம் உற வினராகவே எண்ணுவர்; தமக்கு வரும் ஆக்கமும் கேடும் தம்மாலேயே வருவன என்னும் உண்மையை மறவார்" (192)

—தமிழ் மொழி இலக்கிய வரலாறு--சங்ககாலம் பக். 247-148.

மேலே குறிக்கப்படும் சான்றோர் அந்தணரைப் போன்று தனிக் கொள்கையுடையவர் என்பதும் அவர்கள் அதை மற்றவர்களுக்கு அறிவித்து வந் தார்கள் என்பதும் விளங்குகிறது.

அந்தணரைப் பின் பற்றுவோர் அந்தணராக முடியாது. ஏனெனில் அப்பெயர் பிறப்பால் வரு வது. ஆனால் சான்றோரைப் பின் பற்றியவர் சான் றோரென அழைக்கப்பட்டன ரென நாம் எண்ண வேண்டியுள்ளது.

எவ்வாறு ?

பிசிராந்தையார் தம்மிடம், தமக்கு நரை வரா மைக்கான காரணம் கேட்டவர்களுக்குக் கொடுத்த விடையில் தம்மூரில் ஆன்றவிந்தடங்கிய கொள் கைச் சான்றோர் பலர் வாழ்வதால் தமக்குக் கவலை இல்லை என்பதைக் கூறு முகத்தான் சான்றோரைப் புகழ்கிறார்.

*யாண்டு பலவாக நரையில வாகுதல்*
*யாங்கா கியரென வினவுதிராயின்*
*மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்*
*யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கு மதன்றலை*
*ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர் யான் வாழுமூரே.* —புற. 191

'பலர்' எனச் சுட்டியமையான் அவர்கள் ஒரு தொகுதியாக வாழ்ந்தார்கள் என்பது புலப்படுகிறது. பிசிராந்தையார் ஆன்றவிந்தடங்கிய கொள்கையுடைய சான்றோரின் குணங்களை வியந்து புகழ்ந்துள்ளமையால், அவரும் சான்றோர் கொள்கையைப் பின்பற்றியவராயிருத்தல் வேண்டும். அவர் அவ்வாறு சான்றோர் கொள்கையைப் பின்பற்றிய சான்றேரே என்பது பிறிதொரு புறநானூற்றுச் செய்யுளால் விளங்குகிறது. கோப்பெருஞ்சோழனைக் கண்ணுல் காணுமலே அவனிடம் நட்புப் பூண்ட பிசிராந்தையார், கோப்பெருஞ்சோழன், தன் மக்கள் மீது ஏற்பட்ட மனவேற்றுமையால் வடக்கிருந்து உயிர் துறக்க இருப்பதையறிந்து இவரும் சோழனுடன் சென்று சேர்ந்து வடக்கிருந்து உயிர் விடுகிருர். அதைக் கண்ணுற்ற கண்ணகனுர் (நத்தத்தனுர்) என்னும் புலவர்,

பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே. —புற. 218

எனப் பிசிராந்தையாரையும் சான்றோர் என்றே அழைப்பதுடன், சான்றோர் குழுவையும் சிறப்பிக்கின்றர். வெவ்வேறு இடங்களில் பிறந்தவராயினும் கொள்கையால் ஒன்ருக இணைகின்றனர் சான்றோர் எனக் கூறப்படுகிறது. இங்கு ஓர் ஐயம் எழுகின்றது.

'சான்றோர்' எனக் குறிக்கப்படுஞ் சொல் சுட்டும் பொருள் என்ன?

சிறந்தவர்கள், உயர்ந்தவர்கள், நல்லவர்கள், நற்குணங்கள் நிரம்பப் பெற்றவர்கள், என்ற

உயரிய பொருட்களுள் ஒன்றைக் குறிக்கின்றதா? அல்லது அதனினும் வேறுபட்ட பொருளை உணர்த்துகின்றதா, என்பது கேள்வி.

பொதுவாகச் சால்பு உடையவர் சான்றோர் எனக் கொள்ளப்படுகிறது. சால்பு = எல்லா நற்குணங்களாலும் நிறைந்திருத்தல். அதாவது நற்குணங்கள் யாவும் நிரம்பியவர் சான்றோர் என அழைக்கப் பட்டனரெனக் கொள்ளலாமா ?

பொதுவாக நல்லவர் என்ற பொருளில் மட்டுமே 'சான்றோர்' என்ற சொல் வழங்கப்பட்டதாகக் கொள்ள முடியவில்லை. அந்தணரைப் போன்று இவர்களும் ஒரு கொள்கையின் அடிப்படையில் இணைந்தவர்களே என்பதைப் பிற்காணும், கொள்கை, நெறி, கடன் என்ற சொற்கள் விளக்குகின்றன.

'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்' —புறம்.

'சான்றோர் சென்ற நெறி' —புறம்.

'சான்றவர்க் கெல்லாம் கடன்' —கலித்தொகை.

ஆகவே அந்தணரைப் போன்று சான்றோர்க்கும் ஒரு கொள்கையுண்டு என்பது தெளிவாகிறது. இதை மேலும் உறுதிப் படுத்தும் வகையில் புறநானூற்றில் 266–ஆம் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில் சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியைப் பெருங்குன்றூர்க் கிழார் பாடுங்கால் "சான்றோர் தொக்கிருந்த அவையின் கண்ணே சென்று பொருந்தியவர் துன்பத்தை அச்சான்றோர் விரைந்து பகிர்ந்து கொண்டு தீர்க்குமாறு போல" என உவமையாகச் சான்றோரையும், அவர்களின் கூட்டத்தையும், அவர்கள் மற்றவர் துன்பம் தீர்க்கும் தன்மையையும் புகழ்ந்து பாடுகிறார்.

"சான்ருே ரிருந்த அவையத் துற்ருேன்
ஆசா கென்னும் பூசல்போல
வல்லேகளை மதியத்தை யுள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப் புண ருடம்பிற் ருேன்றியென்ன
அறிவுகெட நின்ற நல்கூர்மையே" —புறம். 266

கொள்கையால் இணையாதவர்களைக் குறித்து இவ்வாறு பாடமுடியுமா? நல்லவர் என்ற பொருளிலோ உயர்ந்தவர் என்ற பொருளிலோ அரசன் முன்னர் புலவர் இவ்வாறு பாடினுல், அரசனின் அவை நல்லவர் நிறைந்ததன்று என்ற பொருள் தோன்றி, சபையை இழிவுபடுத்திய குற்றம் புலவரைச் சாருமல்லவா?

இப்பாடலால் சான்ருேர் ஒரு குறிப்பிட்ட கொள்கையால் இணைந்தவர் என்பதும், அக்கொள்கை அச்சோழ மன்னனுக்கும் முரண்பாடுடையதன்று என்பதும், ஏன் அரச ஆதரவு பெற்றதென்பதும் கூட விளங்குகிறது. எங்ஙனம்? அரசன் முன் அதைப்புகழ்வது அரசனுக்கு உகந்ததே என்ற குறிப்புத் தோன்றுகிறது.

# 2. சான்றோர் கொள்கை

சங்க இலக்கியங்களில் நமக்குக் கிடைக்கும் குறிப்புகளிலிருந்து, அவர்கள் உயர்ந்த அறவொழுக்கம் உடையவர்கள் என்பதும், கொலைவெறியர் அல்லர் என்பதும், தாங்கள் துன்புற்றாலும் மற்றவர்கள் உயர்வடைய வேண்டும் என்ற விருப்பமுடையவர்கள் என்பதும் தெரிகின்றனவேயன்றி அவர்களுடைய மற்றக் கொள்கைகள் புலப்பட வில்லை என எண்ணத் தோன்றலாம். ஆனால் அவ்வாறு நாம் எண்ணி விடாதபடி புறநானூற்றிலேயே குறிப்பு ஒன்று உள்ளது. சான்றோரையும் பார்ப்பாரையும் பற்றி ஒரு செய்யுள் கூறுகிறது:-

ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருள்வன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொடுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
காப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்கவென்று நின்

பீடுகெழு நோன்றாள் பாடே ணுயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே. —புற. 34

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்க் கிழார் பாடிய இப்பாடலுள் மறைந்து கிடக்கும் சங்க காலச் செய்தியை நோக்குவோம்.

சங்க காலத்தில் ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும் பெண்டிரும் மதிக்கப் பெற்றனர். இவர்களால் சமுதாயத்திற்கு நன்மையுண்டே யொழிய எவ்விதத்திலும் தீமை கிடையாது என்று நம்பினர். ஆகவே நாட்டில் இருபெருவேந்தரிடையே போர் நடக்க இருக்குங்கால், போர்க்களத்திலே இவர்கள் சிக்குண்டு விடக்கூடாது என்பதன் பொருட்டு இவர்களைப் பாதுகாப்பதற்காகவே அரசர் முன்னறிவிப்புக் கொடுத்து இவர்களை அரணான இடத்தையடையும்படி செய்தனர் என்பது,

ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
—புற. 9

என்று நெட்டிமையார், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய புறநானூற்றுப் பாடலால் விளங்குகிறது.

இவ்வாறு சமுதாயத்திற்கு எவ்விதக் கேடும் இல்லாத நன்மையேயுடைய இவர்களைக் கொன்றால் அதனால் வரும் தீமை மிகப் பெரியது என எண்ணப்பட்டது.

இங்கே ஒரு குறிப்பு ஆழ்ந்து நோக்கத்தக்கது. நாம் இப்போது பார்க்கும் புறநானூற்றுப் பாடல்கள் இரண்டும் அறத்தைப் பற்றியே கூறுகின்றன.

"அறம் பாடிற்றே ஆயிழை கணவ"—புறம். 34

"அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்"—புற. 9

ஆனால் இரண்டுக்கும் வேற்றுமை இருப்பதாகத் தெரிகிறது. இவ்விரண்டு பாடல்களையும், ஆலத்தூர்க் கிழார், நெட்டிமையார் ஆகிய இரு புலவர்களும் பாடியுள்ளனர். நெட்டிமையார் வேள்வி செய்யும் அந்தணர் கூட்டத்தைச் சார்ந்தவர் என்பது,

"நற்பனுவல் நால்வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்" —புற. 15

எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாராட்டிப் பாடியுள்ள பாடலால் விளங்குகிறது. அப்பாண்டியனும் இவ்வந்தணர் கொள்கையை ஏற்று வேள்வி பல வேட்டவன் என்பது அவனது பெயரிலேயே வெளிப்பட்டு நிற்கிறது. (பல்யாகசாலை)

இப்புலவர் 'அறத்தாறு' எனக் குறிப்பிடுவது (புறம்-9) எதனை என்பது "நற்பனுவல் நால்வேதத்து" (15) என்னும் தொடரால் விளக்கப்பட்டு விடுகிறது.

ஆகவே வடமொழியாளரின் நால்வேதம் நற்பனுவலாகவும் அறத்தாருகவும் நெட்டிமையாரால் போற்றப்படுகிறது. அவ்வறத்தின்படி ஆவும் ஆணியற் பார்ப்பன மாக்களும் மதிக்கப்படுகின்றனர். உயர்வாக எண்ணப்படுகின்றனர்.

ஆனல் ஆலத்தூர்க் கிழார் பாடலில் அவர் கொடுக்கும் கருத்து நெட்டிமையாரின் கருத்துக்கு மாறுபட்டதாகத் தெரிகிறது. "ஆவையும், ஆணியற் பார்ப்பனரையும் கொல்வது கொடிய குற்றம் எனக் கொள்ளப்பட்டாலும் அதற்கு மன்னிப்பு உண்டு, ஆனல் "நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன் செய்தி கொன்ருேர்க்கு உய்தி இல்லென அறம்பாடிற்றே ஆயிழை கணவ" என்றிருக்கிறது. அதாவது நெட்டிமையார் கூறும் அறத்தாற்றின் வழி நில்லாதவர்களுக்கு ஏன் அதைவிட அதிகம் தீமை செய்தவர்களுக்கும் வழுவாய் மருங்கிற் கழுவாயுமுளவே என அவற்றிற்கு மன்னிப்பு இருப்பதைக் காட்டி, ஆனல், உலகமே தலைகீழாய் மாறினலும்

'ஒருவன் செய்தி கொன்ருேர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்று'

என அடித்துக்கூறுகிருர் ஆலத்தூர்க்கிழார். அப்படியானல் நெட்டிமையார் கூறும் அறத்தினும் ஆலத்தூர்க்கிழார் காட்டும் அறம் உயர்வுடையதாகத்தெரிகிறது. ஏனெனில் இவர் நெட்டிமையார் கூறிய அறத்தையே எடுத்துக் கூறிப் பின்னர் அதை மறுத்து அதனினும் மேலான அறம் ஒன்று உண்டெனவுங் கூறியதுடன் அதை விட்டோர்க்கு நிலம்புடைபெயரினும் உய்திஇல்லை என அறுதியிட்டு உறுதியாகவும் கூறுகின்ருராகலான்.

நெட்டிமையார் அந்தணர் கூட்டத்தினர் என்பதும் அவர் சுட்டிய அறம் நால்வேதம் என்பதும் விளங்குகிறது.

அப்படியானல் அதை மறுக்கும் ஆலத்தூர்க் கிழார் சுட்டும் அறம் எது? அந்தணர் கூட்டக் கொள்கையை மறுக்கும் இவர் யார்? அந்தணர் கொள்கைக்கு மாறுபட்ட சான்றோருடன் இவருக்குத் தொடர்பு உண்டா? சான்றோரைப் பற்றி இவர் கூறியுள்ளாரா என்பன நோக்கத் தக்கவை.

இவருடைய பாடல்கள் குறுந்தொகையில் இரண்டும் (112 குறிஞ்சி, 350 பாலை) புறநானூற்றில் ஐந்தும் (34, 36, 69, 225, 324) காணப்படுகின்றன.

இவற்றுள் இவர் அறத்தைப் பற்றிப் பாடிய குறிப்பு புறம் 34ல் மட்டுமே உள்ளது. இப்பாடல் குறிப்பு அந்தணர் கொள்கைக்கு மாறுபட்டு இருப்பதுடன், இப்பாடலிலேயே சான்றோரைப் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது.

"............ ........... ......... இவ்வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
........ ... ..... ..... ........... .........
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே.

இவர் இப்பாடலால் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வாழ்த்துங்கால் சான்றோர் செய்த நன்றுண்டாயின் பஃறுளியினும் வாழிய என வாழ்த்துவதை நோக்குங்கால், சான்றோரை எவ்வளவு மேலானவராக எண்ணியுள்ளார் என்பது தெளிவாகிறது. ஆகவே இவரும் சான்றோர் கூட்டத்தைச் சேர்ந்தவரே என முடிவு கொள்ள நேரிடுகிறது.

இனி அந்தணர் நான்மறைக்கு எதிராக, மேலாக, இவர் கூறும் 'அறம்' எது? 'அறம் பாடிற்றே' என இவர் குறிப்பிடும் நூல் எது என்று நோக்கத் தக்கது.

## ஆலத்தூர்க் கிழார் சுட்டும் அறநூல் எது ?

"...................................... ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே"

பாடிய அறம் எது? மேலுள்ள இரண்டு அடிகளை யும் திருக்குறளுடன் இணைத்து ஆலத்தூர்க் கிழார் சுட்டும் அறம் திருக்குறளே எனத் தமிழறிஞர் பலர் முடிவு கட்டுகின்றனர்.

திருப்பதி, திருவேங்கடேசுவரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத்தின் ஆராய்ச்சித் துறைத் தலை வர் திரு. தி. பழநியப்ப பிள்ளை M. A. அவர்கள் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:-

"இதன் கண், திருக்குறள்-அறத்துப்பால்-செய்ந்நன்றியறிதல் அதிகாரத்துள்ள

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" —குறள். 110

என்ற பாடலைச் சுட்டியதன்றி, அந்நூல் 'அறநூல், என்றும், அது வடநூற்கண் உரை வகையான் அறமுரைத்தல் அமைந்தமை போலாது, தமிழ்ப் பாடலான் அமைந்த தென்றும் தெளிதருமாறு 'அறம் பாடிற்றே' என்று விளங்கக் கூறித் திருக் குறளைப் போற்றுதல் காண்மின்! அகனும் புறனும் பற்றித் தனிச் செய்யுளே பாடும் வழக்கானும் இய னூல் யாத்தல் வழக்கானுமே நிகழ்ந்த அக்காலத்து அறப்பெரு நூலாகத்தமிழ் மொழிக் கண் திருக்குறள் விளக்கம் பெற்றமை பற்றியன்றே, ஆலத்தூர்க் கிழார், நம் பெருமுறையற நூலை அங்ஙனம் பாராட் டிக் கூறுவாராயினர்."

—திருவள்ளுவர் காலம்
டாக்டர். மா. இராசமாணிக்கனார்-பக். 34.

இக்கருத்தை இக்காலத் தமிழறிஞர் பலரும் ஏற்றுக் கொள்ளுகின்றனர். ஆகவே அவர்கள் வழியில் நாமும் சென்று, வேள்விக்கொள்கையை யுடைய அந்தணருடைய கொள்கைக்கு மாறான சான்றோர் கொள்கையைக் கூறும் அறநூல் திருக்குறளா? என்பதை நோக்குவோம்.

அந்தணர் கொள்கைக்கு முரணான சான்றோர் கொள்கையைத் திருக்குறளில் காணுவதற்கு முன்னர், சான்றோர், சான்றோர்-கொள்கையால் இணைந்தவரே எனில், ஆரிய அந்தணரின் பரம்பரையினர் இன்னும் நம்மிடையே இருப்பதைப் போன்று, சான்றோரின் பரம்பரையினர் நம்மிடையே இன்னும் இருக்கிறார்களா? சான்றோரின் பரம்பரையினர் என்ன ஆயினர் என்பதை நோக்குவோம்.

சங்க காலத்தில், வீரர், பாணர், விறலியர், குறவர், மள்ளர், பரவர், போன்ற பற்பல கூட்டத்தினர் இருந்தனர். அவர்களின் குடிகள் அவ்வப் பெயரால் அழைக்கப்பட்டன. ஆனால் தற்காலத்தில் நாம் கூறுவதைப்போன்று அவற்றினிடையே ஏற்றத்தாழ்வோ அல்லது பிரிவினையோ கிடையாது. யாவரும் சமமாக மதிக்கப்பட்டனர். ஒருவரையொருவர் மதித்தனர். தொழிலாலும், வாழும் இடத்தாலும் வேறு வேறு பெயரைப் பெற்றிருந்த போதிலும் அவர்களுக்குள் வேற்றுமை இல்லை.

இந்நிலை இடைக்காலத்தில் மாற்றப்பட்டது. காரணம் அந்தணர் இங்கு பெருமைப்படுத்தப் பட்டு, அவர்களுடைய கொள்கை ஏற்றம் பெற்ற காலை அவர்களுக்கிடையே இருந்த நால்வருணப் பாகுபாடு இங்கும் நுழைக்கப்பட்டுத் தமிழர்கள் பற்பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, அவர்கள் திரும்ப ஒன்று சேர முடியாத பிளப்புகள் ஏற்படுத்தப்பட்டன. இவ்வாறு பிளவுகள் தோன்றத்தோன்ற அது

அந்தணர்களுக்கு உயர்வைக் கொடுத்தது. ஆகவே சங்க காலத்தில் அந்தணர், சான்றோர் ஆகிய இருவகையினர் இணைந்து மதிக்கப்பட்ட போதிலும் பின்னர் அந்தணர் உயர்வடைந்தனர்.

அடுத்து அந்தணர்களைச் சங்க காலத்திலேயே அரசர்கள் பின்பற்றிப் பல வேள்விகள் வேட்டுத் தங்கள் பெயருடன் அச்செயலைச் சிறப்புச் செய லாகக் கருதிச் சேர்த்துக் கொண்டனர். ஆனால் சான்றோர்களோ மன்னர்களுக்கும் நல்லறிவு புகட்டி னர். அவர்கள் கொள்கையோ

"பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல்
சான்றவர்க் கெல்லாம் கடன்." (கலித்தொகை)
"சான்றோர் அவைப்படிற் சாவாது பாம்பு." (பழமொழி)
"கழியக் காதலராயினுஞ் சான்றோர்
பழியொடு வருஉம் இன்பம் வெஃகார்." (நாலடி)

ஆகிய மிகச் சிறந்த கொள்கையாகும். மற்றவர் வாழும் பொருட்டுத் தன்னை அழித்துக்கொள்ளப் பின் வாங்காக் கொள்கையினர். தன்னை இகழும் பகைவர்க்கும் நன்மையே நினைக்கும் கொள்கை யினர் என்பதும் பகைவர் அடையும் துன்பத்தை யும் சகியா உள்ளத்தினர் என்பதும்,

தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர் கொலென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்.

என்ற நாலடிச் செய்யுளால் விளங்குகிறது இப் படிப்பட்ட சிறந்த கொள்கையுடைய சான்றோர், தங்கள் உயர்வையே பெரிதாகக் கண்ணும் கருத்து மாய் இருந்து வளர்த்த அந்தணர்களுக்கு முன் தாழ்வடைவது இயல்பே. மேலே நாம் காணும் நாலடியார் கருத்திற்கிணங்க அந்தணர், சான் றோரை இகழ்ந்த போதும் சான்றோர் தங்களுக்கு வந்த இழிவை எண்ணாது அந்தணர் எரிவாய் நிர யம் புகுவரே என அந்தணர்க்காகவே வருந்தி நின்

றிருப்பர். இதன் பயன், அந்தணர் உயர்ந்திருப் பர். சான்றோர் தாழ்ந்திருப்பர். இவ்வேறுபாடு நடை பெற்றதாகப் பழமொழி கண்ணீர்விடுகிறது.

*உரைசான்ற சான்றோ ரொடுங்கி யுறைய*
*நிரையுள்ள ரல்லார் நிமிர்ந்து பெருகல்*
*வரைதாழி லங்கருவி வெற்ப அதுவே*
*சுரையாழ அம்மி மிதப்பு.*

தண்ணீரின் மேலே மிதக்க வேண்டியது கீழே போகிறது. கீழே இருக்க வேண்டியது தண்ணீ ருக்கு மேலே மிதக்கிறது. இந்தத் தலைகீழ் மாற் றமே இடைக் காலத்தில் சான்றோர்க்கு ஏற்பட்ட தென்பது பழமொழியின் முடிவு. இடைக் காலத் தில் உரைசான்ற சான்றோரொடுங்கியுறைய நிரை யுள்ளரல்லார் நிமிர்ந்து பெருகினராம். முடிவு, சான்றோர் இழிந்தவரெனவும், கடையரெனவும் ஒதுககப்பட்டிருப்பர், புறக்கணிக்கப்பட்டிருப்பர்.

அந்தணர் கொள்கையை ஏற்றுக்கொள்ளாத வர்கள் எந்த நிலையில் வைக்கப்பட்டார்கள் என்ப தைக் கனகசபைப்பிள்ளை அவர்களால் 1925ல் எழுதப்பட்ட வருண சிந்தாமணி கூறுகிறது.

"இவர்கள் ஐதரேயப் பிரஹ்மணஞ் செய்த காலத்து பிராமணர்களின் ஏற்பாட்டை ஒப்புக் கொள்ளாதவர்களாயிருக்க வேண்டும். ஆகையால் இவர்கள் புறச்சாதியா ரென்றும், இந்தச் சாதியா ராகவென்று சபிக்கப்பட்டாரென்றும் தெரியவரு கின்றன.

—வருண சிந்தாமணி—ஆரியவேதம்—பக்-60

ஆகவே சங்ககாலச் சான்றோர், கொள்கையால் இணைக்கப்பட்டவர்களாயின், அவர்களின் பரம் பரையினர், பிற்காலத்தில், ஆரிய அந்தணர்களால் இழிந்தவரென எண்ணப்பட்டிருத்தல் இயல்பு. ஆனால் சான்றோர் என்பது, உயர்ந்தவர் அல்லது

சிறந்தவர் என்ற பொது நிலையை மட்டுமே சுட்டியிருக்குமானால் தற்காலச் சாதிகளிடையே அது இருக்க வாய்ப்பு இல்லை என்பது நினைவிற்கொள்ளத் தக்கது. ஆகவே 'சான்றோர்' தற்காலத்திலும் இருக்கின்றனரா? நம்மோடு, தமிழர்களோடு தமிழர் களாக வாழுகின்றார்களா? இரண்டாயிரம் ஆண்டு கள் கடந்த பின்னரும் அச்சான்றோர் இருக்கிறார் களா என நோக்குவோம்.

இருக்கின்றார்கள் என்பதை 11–11–71 தேதிய குமுதம் தற்போதைய தமிழக அரசின் தோழமைக் கட்சியான தமிழரசுக்கழகத்தின் தலைவராம் சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள், சிந்தனைச் சிற்பி செயகாந்தனுடன் உரையாடிய போது நம் கேள்விக்கு விடையைக் கொடுத்துள்ளார்.

''சான்றோர்கள் என்பது சாணார்கள் என்றாயிற்று. இதில் இரண்டு கிளை. கிராமப்புறங்களிலேயே தங்கிவிட்டவர்கள் கிராமணியர்கள். நாடு நகர்ப்புறங்களுக்குச் சென்றவர்கள் நாடார்கள்.''

சங்ககாலச்சான்றோர் வழிவந்தவர்கள், நாடார் களும், கிராமணியார்களும் மட்டுமல்லர். செட்டியார், கவுண்டர், மூப்பனார், தற்காலத் தமிழக இஸ்லாமியரில் ஒரு பகுதியினர், ஆகிய பற்பல பிரிவினர் என்பது அருள் திரு, V. D. சகாயம் M. A. அவர்கள் கருத்தாகும். மறைத்திரு V. D. சகாயம், M. A. அவர்கள் தமது 'கைவிடாத கடவுள்' என்ற நூலில் பக்கம் 5–7 இல் கூறுவதைப் பார்ப்போம்:—

''சான்றோர் என்றும், நாடார் என்றும் அறியப் பட்டு வரும் மக்கள், பண்டைக்காலத்தில் எந்நிலையிலிருந்தனரோ, தற்போது அது தெளிவாயில்லை. மதுரையில் ஆண்டுவந்த பாண்டியர்கள் அவர்களே என்று சாதிப்பாரும், சான்று பகர்வாருமுண்டு. புத்த மார்க்கம் நாடெங்கும் பரவிய காலத்தில்

இவர்கள் அம்மதத்தைத் தழுவின ரென்றும், ஆத லின் பிராமண மார்க்கத்தாரால் தீராப் பகை யாய்ப் பகைக்கப்பட்டாரென்றும் கூறுபவர் உண்டு. நாடாள்வார் என்பதின் திரிபே நாடார். இந்த வடிவத்தில் அச்சொல் கல்வெட்டுகளில் காணப் படுகிறது. அப்படியே 'சாணன்' என்று வெறுப் பாய் வழங்கப் படுஞ்சொல் 'சான்றேன்' அல்லது 'சான்ருன்' என்பதின் மாற்றமாகும். (கன்று— கண்ணு, ஒன்று—ஒண்ணு). திட்டவட்டமான சரித் திரக் குறிப்புகள் இல்லாத நம் நாட்டில் இன்னவ ரின் குலவரலாறு மறைந்து போனது நூதனமல்ல.

''சில நூற்றுண்டுகளுக்கு முன் இவர்கள் பிற ரால் மேற்கொள்ளப்பட்டபோது, இடம் பெயர்ந்து சென்றனர். சென்ற இடங்களில் தங்கள் குலப் பெயரைப் பெரும்பாலும் மாற்றிக் கொண்டனர். சிலர் வணிகத்துறையில் ஈடுபட்டுத் தங்களை விசே ஷமான வைசியர் என்ற பொருளில் 'சிரேஷ்டி' என்ற சொல்லின் மரூஉவாகச் 'செட்டி' என்ற ழைத்துக்கொண்டனர். இன்றும் கடைகளிலிருப் போர் எவரையும் 'செட்டியாரே' என்றழைக்கும் வழக்கத்தை நோக்குக! செட்டி நாட்டின் பெண் மக்கள் இன்னும் சிறந்த முறையில் பனையோலைக் கூடை பின்னுதலைக் கைவிடாதிருப்பது சிந்திக் கத்தக்கது.

''கொங்கு நாட்டில் இவர்கள் தங்களைக் 'கவுண்டர்' என்று அழைத்துக் கொண்டனர். மர 'மேறிக்கவுண்டர்' என்பது இன்னும் வழக்கழியாத சொல்லே. சேலம் ஜில்லாவில் இவர்கள் தங்களை 'மூப்பனர்' என்று அழைத்துக் கொண்டனர். ஊர் மக்கள் என்ற கருத்தில், வடக்கே இவர்கள் 'கிரா மணி' என்று அறியப்படுகின்றனர். செட்டிகளே தங்கியிருக்கும் ஊர் இன்னும் 'சாணர் பாளையம்'

என்று அழைக்கப்படுகிறது. தென்னுட்டில் இஸ்லாமிய மார்க்கத்தைத் தழுவிய பலர் இக்குலத்தாரே. அவர்களுடைய குடும்பப் பெயர்களும், முறை கொண்டாடும் வழக்கங்களும் இதற்குத் தெளிவான சான்றுகளாகின்றன.''

இப்பர் பரதர் வைசியர் கவிப்பர்
எட்டியரிளங் கோக்களேர் தொழிலர் பசுக்காவலர்
ஒப்பினுய்கர் வினைஞர் வணிக ரென்
றத்தகு சிரேட்டிகள் செட்டிகள் பெயரே

—திவாகரம்-32

வைசியர், விசேடர், சிரேஷ்டி, சிரேட்டி, செட்டி. இது நிற்க. அபிதான சிந்தாமணி 'சாணுர்' என்ற சொல்லுக்குக் கூறும் விளக்கமாவது:-

''இவர்களுக்குச் சாணுர், நாடார், கிராமணிகள் என்பன சாதாரணப் பட்டம். சாணுன் என்னும் பெயர் தமிழ் நூல்களில் எங்கும் காணப்படவில்லை. இராஜ ராஜ சோழன் காலத்து இவர்கள் இழுவர் எனப்பட்டனர். கோயம்புத்தூரில் சிலர் செட்டி, மூப்பன், நாடான் என்னும் பட்டங்கள் வைத்திருக்கின்றனர். இவர்களுக்கு ஏனுதிப் பட்டம் சைவ ஏனுதி நாயனுரால் வந்தது போலும்.''

(பக்கம் 614, 615)

மதுரைத் தமிழ்ச் சங்கப் பேரகராதி 'ஏனுதி' என்ற சொல்லுக்குக் கூறும் பொருள்:- தந்திரி, தளகர்த்தன், மந்திரி, சாணுன், சேனுதிபதி, மேலும் அந்நூல் பின்வருஞ் சொற்களுக்குக் கூறும் விளக்கமாவது:-

சான்ருண்மை-கள்ளிறக்குந்தொழில்

சான்றவர்-சாட்சிக்காரர், அறிஞர், ஆன்ருேர்

சான்ருேர்-பெரியார், சாணுர்.

இன்னும் தெளிவாக ஆழ்ந்து ஆராய்ந்தால் தமிழகத்தின் பல சாதிகள் இவர்களின்றும் பிரிந்தவர்கள் என்ற நிலை தெளிவாகலாம். ஆயினும் சான்ஞேர் தமிழகம் முழுவதும் பரவியிருந்தனர் என்பது இற்றை நாளில் அவர்களுக்கு வழங்கப் படும், நாடு, நகர், கிராமம் என்ற சொற்களை அடிப்படையாகக் கொண்ட நாட்டார், நகரத்தார், கிராமணியார் ஆகிய பெயர்களாலேயே தெளிவாகிற தெனலாம்.

இச்சான்ஞேர் எப்போதும் பிராமணரை எதிர்த்தே வந்துள்ளனர் என்பது, அவர்களைப் பற்றிய வரலாறுகளில் தமிழகத்தில் நிலவிய பிராமண மதத்திற்கு எதிராக நிலவிய மதத்துடன் இணைந்தே சான்ஞேர் சொல்லப்பட்டு வருவது சான்ருகும்.

"ஒரு காலம் நாடார்கள் யாவரும் புத்தமதத்தைத் தழுவியிருந்ததாகக் கூறுவாருமுண்டு. ஆரியக் கொள்கைக்கு மாறுபட்ட யாவரும் ஒரே கூட்டமாகக் கருதப்பட்டு ஒடுக்கப்பட்டனர். பொதுவாக இவர்கள் ஆரியக் கொள்கைக்கு மாறுபட்ட பௌத்த சமணர்களாகக் கருதப்பட்டனர் எனத் தெரிகிறது."

—அருள் திரு V. D. சகாயம் M. A. இந்தியாவும் கிறிஸ்தவமும் (1956-பக். 28).

அப்படியே நகரத்தாரும் பிராமணமதத்திற்கு எதிரானவர்களே என்பது கவிஞர் கண்ணதாசன் கருத்தாகும்.

"நகரத்தார்கள் சைவர்களாக மாறுவதற்கு முன்பு சமணமதத்திலும் புத்தமதத்திலும் ஈடுபாடு கொண்டவர்களாகவே இருந்திருக்கின்ருர்கள்.

சாத்தன், சாத்தப்பன், சாத்தம்மை, மாசாத்துவான், மாசாத்தியார், ஆகிய பெயர்களெல்லாம்

சமண மரபை ஒட்டியவையே யாகும். நாட்டுக் கோட்டைச் செட்டியார்களிடையேதான் இந்தப் பெயர்கள் அதிகம் உண்டு.

வேளாளர் குலப் பெண்களை மணந்துகொள்வதற்கு முன்பு, எவ்வளவு காலம் வரை நகரத்தார்கள் சமணர்களாக இருந்தார்கள் என்பதை அறிய முடியவில்லை.

ஆயினும் வேளாளர் குலத்தில் பெண்ணெடுக்காமலும் பெண் வர்க்கம் அழிந்துவிடாமலும் காப்பாற்றிக் கொண்ட ஒரு பகுதியினர் இருந்திருக்க வேண்டும்.

இவையெல்லாம் இன்னும் விரிவாக ஆராய வேண்டியவையாகும்."

—கவிஞர் கண்ணதாசன் கருத்துரை
நகரத்தார் வரலாறு. (1970) பக். 25-26

தற்போது சைவ சமயத்தில் பெருவாரியாகக் காணப்படும் வெள்ளாளரின் முன்னோரும் பிராமணக் கருத்துள்ள இந்து சமயத்திற்கு முரணானவர்களே என்பது பின்வரும் குறிப்பால் விளங்குகிறது:-

"1891 ஆம் ஆண்டு சென்னை மக்கள் தொகைக் கணக்கு அறிக்கையில் வெள்ளாளர் சமணசமயத்தைச் சேர்ந்தவர் எனப்பதிவு செய்யப் பட்டுள்ளது. இதன் தொடர்பாகத் திரு. கெமிங்வே அவர்களின் குறிப்புப்படி, உடையார் பாளையம் வட்டத்தைச் சேர்ந்த, காரைக்காத்தார்களும், நயினான் அல்லது நயினார்களும், சமண சமயத்திலிருந்து இந்து சமயத்திற்கு மதம் மாறியவர்கள் என்று எண்ணப்படுகிறார்கள்."

—1909-தென்னிந்திய சாதிகளும் இனங்களும் பகுதி-7, பக். 389.

ஆரிய அந்தணர் தங்களை எதிர்ப்பவர் எவராயினும் அவர்களை அவமானப் படுத்தினர். அம்முறையில் அவர்கள் சான்றோர்களை மட்டுமன்று, தமிழக மூவேந்தரையுமே இழிவு படுத்தினர்.

"இவ்வாரியர்கள் வேளாளரை மாத்திரமா சூத்திரர் என்றனர்? சேரன் சோழன் பாண்டியனென்னும் தமிழ் வேந்தரையும் சூத்திர ரென்றே சாதிக்கிறார்கள்."

—1925 வருணசிந்தாமணி-திராவிட காண்டம் பக். 575

இத்தோடு இவர்கள் விடவில்லை. தமிழகத்தையும் இழிவான நாடு என்றனர். அதைக்கண்டு வருண சிந்தாமணி ஆசிரியர் மனம் வருந்திக் கூறுவது:-

"இவர்கள் ஐதரேய பிரஹ்மணஞ் செய்த காலத்துப் பிராமணர்களின் ஏற்பாட்டை ஒப்புக் கொள்ளாதவர்களாய் இருக்க வேண்டும். ஆகையால் இவர்கள் புறச் சாதியா ரென்றும், இந்தச் சாதியாராக வென்று சபிக்கப் பட்டாரென்றும் தெரிய வருகின்றன."

—1925 வருணசிந்தாமணி-ஆரிய வேதம் பக். 60

## தேசங்களின் உயர்வு தாழ்வு

"பிரமவர்த்தத்தினும் பிரமரிஷிதேசம் குறைவானதாகவும், பிரமரிஷிதேசத்தினும் மத்திய தேசம் குறைவானதாகவும் மத்திய தேசத்தினும் ஏனைய தேசம் குறைவானதாகவும் நினைக்கிறார்கள்.

உத்தரதேசத்திலும் தட்சணதேசங் குறைவானதாக நினைக்கிறார்கள்.

பஞ்ச கௌடத்தினும் பஞ்சத் திராவிடம் குறைவானதாக மதிக்கிறார்கள்.

திராவிடத்தினுள்ளும், கிருஷ்ண கோதாவரியிலுள்ளவர்களினும் நெல்லூரிலுள்ளவர்கள் குறைந்தவர்களென்றும், நெல்லூரிலுள்ளவர்களினும் காஞ்சியிலுள்ளவர்கள் குறைந்தவர்களென்றும், காஞ்சிபுரத்தாரினும் கும்பகோணத்தார் குறைந்தவரென்றும், கும்பகோணத்தாரினும் பாண்டிநாட்டார் குறைவானவரென்றும், பொதுவகையால் வடநாட்டார் தென்னுட்டாரை நிமித்தமில்லாமலே இகழ்வது சுபாவமாக விருக்கிறது. ஆனல் இவர்களுக்கு வடதேசம், பூர்வத்தில் குடியேறினதென்றும், தென்தேசம் பின்னிட்டுக் குடியேறினதென்றும் தெரியவருகிறது.

**தக்ஷிண தேசப் பிரபாவம்**

இந்தியா தேசத்தில் ஏனைய பாகங்களைப் பார்க்கிலும் நீர்வளமும் நிலவளமும் நிறைந்துள்ளதும், மூவேந்தரால் நீதிவழுவாது செங்கோலோச்சப்பட்டதும், தண்டகாரணியத்திலுள்ள தமிழ் நாடாம். இந்நாடு அநேக தீர்த்தங்களும்; இருஷிகளாலும், தேவர்களாலும் பூசை செய்யப்பட்ட 1,008 சிவாலயங்களும், 108 விஷ்ணு வாலயங்களும் நிறையப் பெற்றுள்ளதாகும் இஃதன்றியும், தொண்டை நாடு சான்றோரால் நிறையப் பெற்றதென்றும், பாண்டிய நாடு முச்சங்க வாணர்கள் வசித்த நாடென்றும், அச்சங்கத்துள் இறையனர் முருகவேள் முதன்மையாக இருந்துள்ளாரென்றும், அந்நாட்டைப் பரமசிவனும் பார்வதியும், சோமசுந்தர பாண்டியனுகவும், மீனுட்சியம்மையாகவும் வந்தாண்டுள்ளாரென்றும், தொண்டை நாட்டில் உமாதேவியார் எழுந்தருளிவந்து தவஞ்செய்ததுமின்றி 32-அறங்களை வளர்த்து வந்தாரென்றும், அதனல் இக்காலத்தும், அங்கே ஆதுலர்க்கு அன்னமும்,

ஓதுவார்க்குணவும், அன்ன சத்திரம், தண்ணீர்ப் பந்தர், தேவாலயம், பிரமாலயம், மடம் முதலிய வையுமமைக்கப்பட்டும், தேவாரம் திருவாசகம் முதலிய தமிழ் வேதங்கள் ஓதப்பட்டும் உள்ளன வென்றும் கருதாமல் இந்நாடுகளைக் குறைவாக நினைத்தது ஆரியர்களின் அறியாமையினாலோ அழுக்காற்றினாலோ அறியேம்.''

—வருணசிந்தாமணி-ஆரியவேதம் பக். 12, 13.

இவ்வாறு மூவேந்தரும் மூவேந்தர் நாடும் இழிவானதாக ஆரிய அந்தணர்களால் கருதப்பட்டமையின், இடைக்காலத்தில் அவர்களின் செல்வாக்கு மேலோங்கி இருந்தது என்பதற்கு எவ்வித ஐயமும் இல்லை. இந்நிலையில் சங்க காலச் சான்றோர் குழாத்துள் ஒரு கூட்டத்தார் இடைக்காலத்தில் தங்களுக்கு ஏற்பட்ட இழிவிலிருந்து தங்களை நீக்கிக் கொள்ளும்படியாக முயன்றிருக்கின்றனர். அவ்வாறு முயலுங்கால் அவர்கள் ஆரியர்களை எதிர்த்துத் தங்கள் இழிவைத் துடைத்துக் கொள்ள முடியாதென்பதை யுணர்ந்து. ஆரியர்களைப் பின்பற்றித் தங்களைச் சான்றோர் நிலையிலிருந்து, அதாவது சான்றோர் பரம்பரைக் கூட்டத்திலிருந்து பிரித்துத் தங்களுக்கு வேறு பெயர் சூட்டிக் கொண்டனர். அவ்வாறு சூட்டிக் கொண்டவர்களைப் பற்றி வருண சிந்தாமணி கூறுவது:-

''இந்து தேச வேளாளருக்கும் அதற்குப் புறம்பாயுள்ள ஈழநாட்டு வேளாளருக்கும் அநேக வகையில் ஆசாரங்கள் வேறுபட்டிருக்கும்.

ஈழ நாட்டார் சரித்திரங்களை விசாரிக்குமளவில் இவர்கள் பெரும்பாலும் ஈழகுலச் சான்றோராக இருந்திருக்கலாமெனத் தோற்றுகிறது. சிதம்பர க்ஷேத்திரத்தில் இவர்கள் வசிப்பதற்கு வெகுநாள்

வரையிலும் இடங்கொடுக்கப்படாதென ஏற்பாடாகி யிருந்தது. பின்னர் இத்தீவாந்தரத்தார் அந்த க்ஷேத்திரத்தில் வந்து தங்குவதற்கு இடமின்மை யான், அல்வீழ நாட்டிலுள்ள ஞானப்பிரகாச ரென்பாரொருவர், அநேக திரவியங்களைச் செல விட்டுத் தங்கள் நாட்டார் வந்து தங்குவதற்குச் சிறிது நிலம் ஒதுக்கித் தரவேண்டுமென யாசித்த னர். அதின் மேரில் அச்சிதம்பரக்ஷேத்திரத்திலுள் ளார், தென் பாரிசத்தில் கொஞ்ச நிலம் ஒதுக்கி விட்டனர். உடனே அவர் "ஞானப்பிரகாசம்" எனத்தமது பெயரால் ஓர் குளமும் அதற்கருகில் ஓர் மடமும் ஏற்படுத்திக் கொண்டனர். ஈழநாட் டிலிருந்து வருபவர்களெல்லாம் இக்காலமும் அம் மடத்தில் வந்து தங்குகிருர்கள். இவ்வீழத்தார் சான்ரேரேயெனச் சிதம்பரத்திலுள்ள ஏனைய சாதி யார் அவர்களைத் தீண்டலாகாதென இகழ்ந்து வந்தார்கள்."

—வருணசிந்தாமணி—பக். 627–628.

இவ்வாறு ஆரியர்களால் தாழ்த்தப்பட்ட சான் ரேரில் ஒரு பகுதியினர் ஆரியர்களின் தயவை நாடித் தங்கள் பெயரை மாற்றி வேறு பெயர் சூட்டிக் கொண்டனர். அவ்வாறு ஆரியர்களின் தயவை நாடாதவர்கள் கீழானவர்கள் எனப் பழித்து ஒதுக் கப்பட்டனர்.

மேலே நாம் நோக்கியவைகளிலிருந்து சங்க நூல்களில் தெளிவாக விளக்கப்படும் அந்தணர் சான்ரேர் ஆகிய இருசாரரும் இன்னும் இந்த நாட்டிலே இருக்கின்றனர். ஆனல் ஒரு மிகப் பெரிய மாறுதல். அன்னியரான ஆரிய அந்தணர் அதிகாரம் செலுத்தும் நிலையை யடைந்தனர். அதிகாரத்தில் இருந்த மன்னரும் மக்களும் சான் ரேரும் அடிமைகளாக மதிக்கப்பட்டனர்; ஒதுக்கப்

பட்டனர். இதற்குட்பட்ட இடைக் காலத்தில் எத்தனையோ மாற்றங்கள்.

சங்க காலத்திய, புலாலுண்ணும், கொலை வேள்விக் கொள்கையுடைய ஆரிய அந்தணரின் பரம்பரையினர், அதிகாரத்தைக் கைப்பற்றுவது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இந்நாட்டிற்கேற்பத் தங்கள் கொள்கைகளை மாற்றிக் கொண்டு இன்று வரை நம்மிடையே வாழ்ந்து வருகின்றனர்.

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பரம்பரையினரோ, இடைக் காலத்தில் அடக்கப்பட்டு, இழிவாக்கப்பட்டு, அடங்கிய நிலையில், தங்கள் பழையகொள்கைகளையும், சிறப்புக்களையும், ஏன் பெயரையும் கூட மறந்த நிலையில், மறக்கடிக்கப்பட்ட நிலையில் தற்போது நாடார், நகரத்தார், செட்டியார், கிராமணியார், கவுண்டர், மூப்பனார், முதலியார், வேளாளர் போன்ற வேறு பல பெயர்களுடன் வாழ்ந்து வருகிறார்கள் எனத் தெரிகிறது.

சான்றோர் வரலாற்றை மட்டுமே தனியாக ஆராய்ந்தால் இதனினும் விரிவான விளக்கமும் வரலாற்றுச் சான்றுகளும் கிடைக்கலாம்

ஆகவே ஆன்றவிந்தடங்கிய கொள்கை சான்றோர்களுக்குண்டு என்ற புறநானூற்றுச் செய்யுளில் (புறம். 191) பிசிராந்தையார் கூறும் கருத்து மெய்யே என்பது உறுதிப்படுகிறது கொள்கையின் அடிப்படையில் இணையாவிட்டால், பரம்பரை தோன்றியிருக்க முடியாது. மாற்றுக் கொள்கையினரால் ஒதுக்கப்பட்டிருக்கவும் முடியாது. சங்க காலச் சான்றோரின் பரம்பரையினரைத் தற்காலத்தில் தேடவும் முடியாது.

ஆகவே சங்க காலச் சான்றோர், கொள்கையால் இணைந்த கூட்டத்தினரே என்பது தெளிவு.

கொள்கையால் இணைந்த கூட்டத்தினரே சான்றோர் எனில், சங்க காலச் சான்றோராகிய ஆலத்தூர்க்கிழார் சுட்டும் அறமாகிய திருக்குறளில் அக்கொள்கை விளக்கம் இருக்கிறதா என்பது நோக்கத்தக்கது.

திருக்குறள் சான்றோர் கொள்கையைக் கூறும் நூலாக மட்டுமே இருக்குமானால், சங்க காலச் சான்றோர் கொள்கைக்கு மாறான வேள்வி செய்யும் அந்தணர் கொள்கையைப் பற்றிய குறிப்பும், அதாவது அந்தணர் கொள்கைக்கு மறுப்பும் இருக்க வேண்டும். அவ்வாறு திருக்குறளில் உண்டா என்பதை முதற்கண் நோக்குவோம்.

## திருக்குறளில் அந்தணர்

திருவள்ளுவர் வேள்வி செய்யும் ஆரிய அந்தணர் கொள்கையை வெகு திறமையாக அழகுடன் கண்டித்துள்ளவாறு எண்ணி வியக்கத் தக்கது. வள்ளுவர் வேள்வி என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அந்தணர் என்னும் சொல்லையும் பயன்படுத்தியுள்ளார். ஆனால், வேள்வி, அந்தணர்—இவற்றிற்கு வள்ளுவர் கொடுக்கும் பொருள் மிகமிக மாறுபட்டது; புதுமையானது; சிறப்புடையது; பொலிவுபெறுவது; முற்றிலும் புதிய ஆட்சி பெறுவது. அதாவது அந்தணர் கொள்கை கண்டிக்கப்பட்டுப் புதுக் கொள்கை கொண்டு திகழ்வது. இச்சொற்களுள் அந்தணருடன் தொடர்புடைய வேள்வி என்னும் சொல்லை முதற்கண் நோக்குவோம்.

## வேள்வி

சங்ககால அந்தணர் புலால் உண்டவர்கள் மட்டுமல்லர். அவர்கள் கொள்கையின் அடிப்படையாக விளங்கும் வேள்வியில் உயிர்களைப் பலியிடுதலை இன்றியமையாததாகக் கொண்டவர்கள். அவ்வாறு அருளின்றி உயிர்க்கொலை செய்து வேள்வி செய்தலைக் கண்டிக்குமுகத்தான்

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

எனக் கொல்லாமையின் மேன்மையை வற்புறுத்தி ஆரியக் கொள்கையைக் கண்டிக்கிறார். ஆரியர்களின் வேள்வியைக் கண்டித்த வள்ளுவர், ஆரிய வேள்விக்கு மாறான புதிய சிறந்த வேள்வி ஒன்றையும் அறிமுகப்படுத்துகிறார். வள்ளுவர் அறிமுகப் படுத்தும் அவ் வேள்வியே விருந்தோம்பல்.

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன் —87

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப் படாதார். —88

ஆரியர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட வேள்வி என்ற சொல்லுக்குப் புதிய பொருள் கொடுத்து புதுமைப்படுத்துகிறார் வள்ளுவர். ஆரியர் வேள்வி உயிர்களைக் கொல்லுதல். வள்ளுவர் வேள்வியோ மன்னுயிரோம்பல்.

வேள்விக்குப் புதுப்பொருள் கொடுத்ததைப் போன்றே அந்தணர் என்ற சொல்லுக்கும் வள்ளுவர் புதுப்பொருள் கொடுத்து அச் சொல்லைப் புதுமைப் படுத்துகிறார்.

## அந்தணர்

அந்தணர் என்னும் இச்சொல் பிறப்பினடிப் படையாக, ஆரிய அந்தணர் பரம்பரையை மட்டுமே குறித்தது. ஆனால் வள்ளுவரோ அந் தணர் யார் என்பதற்கு வேறு விளக்கம் கொடுக் கிறார் :—

> "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
> செந்தண்மை பூண்டொழுக லான். —30

மற்ற உயிர்களை வேள்வியில் கொல்லும், கொன்று தின்னும் ஆரிய அந்தணர், அந்தணர் அல்லர். உண்மையான படி அந்தணர் யார் என்றால், உலகி லுள்ள மற்ற உயிர்கள் யாவும் நன்மையடையும் பொருட்டுத் தம் உயிரைக் கொடுக்கும், உயர்ந்த அறவோரே யாவர். அவ்வறவோனே இறைவன். அவன் அறக் கடலாகவே விளங்குகிறான். ஆகவே அவன் அறவாழி அந்தணன்.

> அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> பிறவாழி நீந்தல் அரிது. 10

அறவாழியாக விளங்கி மற்றெவ்வுயிர்க்கும் செந் தண்மை பூண்ட அறவாழி அந்தணனாகிய அவ்வற வோன் காட்டிய மறைமொழியாகிய நூல் ஒன்று உண்டு. அந்நூலே அந்தணர் நூல்.

> அந்தணர் நூற்கும் அறத்திற்கு மாதியாய்
> நின்றது மன்னவன் கோல். —543

அறவாழி அந்தணனைப் பற்றிக் கூறும் அந்தணர் நூலும், அவ்வந்தணர் நூலால் காட்டப்படும் அற மும் உலகில் நிலைபெறக் காரணமாய் நின்றது மன்னவன் கோல். ஆகவே அறவாழி அந்தண னாகிய கடவுளும், அருவமான அக்கடவுளின் உருவ மாக விளங்கும் நீத்தாராகிய மற்றெவ்வுயிர்க்கும்

செந்தண்மை பூண்ட அறவோனுமே அந்தணர். இதற்கு மாறான, பிறப்பினடிப்படையில் தங்களுக்கு அந்தணர் என்ற பெயரை வைத்துக்கொண்ட ஆரியர் அந்தணர் அல்லர்'' எனத் தெளிவாகச் சுட்டுகின்றார் வள்ளுவப் பெருந்தகை.

மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூணாத தன்னலமும் கொலைக் கொள்கையுமுடைய ஆரியக் கொள்கைக்கு மாறான கொள்கையையுடையவர் வள்ளுவர் என்பது மேற்காணும் விளக்கங்களால் நமக்குப் புலனாகிறது. இதனினும் விரிவான வேற்றுமையை நாம் திருக்குறளையும் ஆரிய வேதங்களையும் ஒப்பிட்டுக்காணுங்கால் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். இவ்வாறு ஆரிய கொள்கைக்கு மாறான திருக்குறளை பிற்கால ஆரியர் எவ்வாறு கருதியிருப்பர்? அவர்களுடைய எண்ணத்தையும் செயலையும் தண்டமிழ்ப் புலவர் திரு. தேவநேயப்பாவாணர் கீழ்க்கண்டவாறு வெளிப்படுத்துகிறார் :—

''சில தமிழ்ப்பகைவர், திருக்குறள் மறையாவதெங்ஙனம் என்கின்றனர். திருக்குறள் 'தமிழ்மறை', 'பொதுமறை', 'உத்தரவேதம்', 'தெய்வ நூல்', 'பொய்யாமொழி' என்று கடைக் கழகப் புலவராலேயே மறையாகக் கொள்ளப்பட்டிருக்க, இப்போது அதன் மறைத் தன்மையைப் பற்றி ஐயங்கொள்வானேன்?

கடவுளை, ஆன்மாக்கள் அடையும் வழி, அங்ஙனம் அடைவதால் உண்டாகும் பயன், அடையாமையால் நேரும் கேடு என்றிவற்றைக் கூறுவதே மறை நூலிலக்கணமாகும். திருக்குறள் இவ்வனைத்தும் கூறுவதால் மறைநூலாவதற்குத் தடையென்னை யென்க.

சிறு தெய்வ வழுத்துக்களும், சிலர் சோமச் சாற்றைக் குடித்துவிட்டு வெறியிற் கூறியவைகளும் (Vedic India, p. 174) மறைகளாயிருக்கும்போது, எல்லா மதத்திற்கும் பொதுவான முழு முதற் கடவுளையடையும் வழியைக் கூறுவதும், கள்ளுணைக் கண்டிப்பதுமான திருக்குறள் மறையாவதற்குத் தடையென்னை யென்க ”

—(ஒப்பியன் மொழி நூல்–பக், 147)

ஆகவே வடவர்களால் வெறுக்கப்பட்டதும் வடவர் கொள்கைக்கு மாறானதுமான சான்றோர் கொள்கையை விளக்கும் மறை நூலே திருக்குறள் என்பதில் எள்ளளவும் ஐயம் இருக்கக் காரணம் இல்லை. ஐயம் இருப்போர் ஆசிரியர் இறையனார் எழுதிய “வள்ளுவர் கொள்கையும் வடவர் கொள்கையும்” என்னும் நூலையும் நோக்குவார்களாக.

ஆரியர் இந்நாட்டில் நுழைந்து தங்கள் கருத்தைப் பரப்பியதுடன் அரசர்களிடம் புரோகிதர்களாகத் திகழ்ந்தனர். அரசியல் கூறும் வள்ளுவர், புரோகிதர்களை ஏற்றுக்கொள்ளாது வேண்டுமென்றே நீக்கிக் கூறியது நோக்கத்தக்கது.

பொருட்பாலில் வள்ளுவர் ‘அந்தணர் நூல்’ எனக் கூறியதன் கருத்தை உய்த்துணராது, அந்தணர் என்னும் சொல் ஆரியர்களைக் குறிக்கும் என்று மயங்கிப் பொருள் கொள்ளின் இடர்ப்பாடு தோன்றுதல் வெள்ளிடைமலை. “அறவாழி அந்தணன்”, “அந்தணர் என்போர் அறவோர்”, “அந்தணர் நூற்கும் அறத்திற்கும்” என வள்ளுவர் அந்தணரையும் அறத்தையும் இணைத்தே கூறியிருப்பதைக் கண்டுணர்ந்தால் வள்ளுவர் கூறும்

அந்தணர், புரோகித அந்தணர் அல்லர் என்பது புலனாகும். வள்ளுவர் கூறும் அந்தணர் புரோகித அந்தணர் அல்லர் என்பதும், வள்ளுவர் அரசியலில் புரோகிதரை வேண்டுமென்றே நீக்கிக் கூறியுள்ளார் என்பதும் மலேயாப் பல்கலைக் கழகப் பேராசிரிய ரான திரு. ப. அருணாசலம் அவர்கள் வள்ளுவர் கூறும் அந்தணரைப் பிரித்தறியா நிலையிலுங்கூடக் கூறிய கூற்றால் தெளிவாகும்.

"பார்ப்பனர்களுக்குப் பொதுவாக மூவேந்தர் களும் மதிப்பளித்திருந்தனர்; ஆயின் அரசியல் சிறப்போடு, புரோகிதர் என்ற நிலையில் அவர்கள் மதிக்கப்பட்டமை சேர நாட்டிலேயே காண்கிறோம். அமைச்சர், தூதர், ஒற்றர்களைப் பற்றி வெளிப்படை யாகத் தனி அதிகாரங்களிலும் 'தானை தலைமக்கள் இல்வழி இல்' எனச் சேனாபதியரைப் படைமாட்சி யிலும் சிறப்பித்துக் கூறும் திருவள்ளுவர், புரோ கிதரின் அரசியல் சிறப்பினைக் கூறவில்லை என்பது வியப்பாகவே உள்ளது. பிறப்பால் ஒரு சாராருக்கு ஏற்றமளிப்பதை வள்ளுவர் உள்ளம் விரும்பவில்லை என்பதா?"

—குறளின் செய்தி–பக். 64-65.

இதுவரை நாம் கண்ட செய்திகள் திருவள்ளு வர், சங்ககால ஆரிய அந்தணர் கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்டவர் என்பதைத் தெளிவாக விளக்குகின்றன. அப்படியானால் அவர் அந்தணர் கொள்கைக்கு எதிரான சான்றோர் கொள்கைக் காரரா என்பது நோக்கத்தக்கது. இப்போது வள்ளுவர் கூறும் சான்றோரையும் சான்றோர் கொள்கையையும் வள்ளுவர் வழியில் காண்போம்.

## திருக்குறளில் சான்றோர்

திருக்குறளில் அந்தணர் என்ற சொல்லுக்குச் சிறப்புப் பொருள் கொடுத்து "இறைவனுடன் இணைந்தவரே, ஏன்? இறைவனே அந்தணர்" எனப்பொருள் கூறும் வள்ளுவர் அந்தணர் என்ற சொல்லை மூன்று இடங்களில் மட்டுமே பயன்படுத்தினர். ஆனால் சான்றோர் என்னும் சொல்லையோ நூல் முழுவதிலும் பதினேழு இடங்களில் குறிப்பிட்டிருப்பதுடன், புரோகிதரைப் பற்றிய குறிப்புக்கூட கொடுக்காத வள்ளுவர் சான்றோரைப் பற்றியோ ஒரு தனி அதிகாரமே கொடுத்திருப்பதுடன், அதற்கு ஆண்மை என்னும் சிறப்புத் தன்மையையும் இணைத்து சான்றாண்மை என்ற தலைப்பில் பேசுகிருர், 'சான்றோர்' எனப் பதினேழு இடங்களில் சுட்டியிருப்பதுடன் 'சான்றோன்' என ஒருமையில் ஓரிடத்திலும், சான்றவர்' என ஓரிடத்திலும், சான்றவருடன் இணைந்த 'சால்பு' என்னும் சொல்லை மூன்றிடத்திலும், 'சாலும்' என்று மூன்றிடத்திலும் 'சான்ற' என்று மூன்றிடத்திலும், 'சால' என மூன்றிடத்திலும் ஆக மொத்தம் முப்பத்தெட்டுக் குறட்பாக்களில் நேரடியான சொல் மூலம் சான்றோரைப் பற்றிக் கூறியிருப்பதுடன், சான்றோரின் குணங்களுள் சிறப்பாகக் குறிப்பிட வேண்டியவைகளாகிய அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தையும் விளக்கி, ஐந்து தனி அதிகாரங்களும் கூறியிருப்பதுடன், நூல் முழுவதையும் சான்றோருடன் இணைத்தே கூறிச் செல்லுவதாக நாம் கொள்ளக்கூடிய முறையில் நூலை அமைத்துள்ளார் வள்ளுவப் பெருந்தகை.

ஆக திருக்குறள் முழுவதும் சான்றோரைப் பற்றிய விளக்கமே எனக் கொள்ளக்கூடிய

நிலையில் அமைந்துள்ளது. திருக்குறள் முழுவதுமே சான்றோரைப் பற்றிய விளக்கமே எனக் கொள்ளக்கூடிய நிலையில் இருக்குமானால் 'சான்றோர்' என்பதன் பொருளென்ன என்பதற்குத் திருக்குறளில் விளக்கம் இருக்கவேண்டும். அவ்வாறு விளக்கம் உள்ளதா என்பதை நோக்குவோம்.

## 'சான்றோர்'—பொருளென்ன?

சான்றோரைப் பற்றிப் பன்மையிலேயே நூல் முழுவதும் கூறும் வள்ளுவர், ஒரே ஒரு இடத்தில் மட்டுமே 'சான்றோன்' என ஒருமையில் கூறியுள்ளார். ஒருமையில் கூறப்படும் அவ்விடத்தில் 'சான்றோன்' என்பதன் பொருள் விளக்கப்பட்டுள்ளதாகப் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் அவர்களின் விளக்கத்தால் அறிகிறோம். இப்போது அக்குறட்பாவையும் அதற்கான விளக்கத்தையும் காண்போம்:—

"சான்றோர் என்கை ஈன்றோர்க்கழகு" என்னும் ஔவையின் வாக்குக்கு முன்னோடியாக விளங்குவது இக்குறட்பா.

> ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்.

பிள்ளை இல்லையானால் தாய் இல்லை. ஒரு பெண், தாய் எனப் பெருமையுடன் அழைக்கப்படக் காரணமாய் இருப்பது பிள்ளை. ஆகவே ஒரு பெண் 'தாய்' என்னும் சிறப்புப் பெயரை, பதவியை அடைய வேண்டுமானால் எத்தனையோ துன்பங்களைப் பொறுத்தாக வேண்டும். ஒரு பெண்ணுக்குத் தான் அடைந்த துன்பத்திலிருந்து தோன்றும் ஒரு இன்பப் பொருளாக இருப்பதே பிள்ளை. ஆகவே ஒரு பெண் தாயாகி ஒரு குழந்தையை

ஈன்றெடுத்து, அக்குழந்தைக்காக தான் அடைந்த அத்தனை துன்பங்களையும் மறந்து, மகிழ்ச்சி அடைகிறாள். தாய் என்னும் நிலையை அடைந்து பெருமைப்படுகிறாள். பெண், பெண்ணாகவே இருந்து விடாமல், வளர்ச்சியடைந்த நிலையாகிய தாயின் நிலையை அடைந்து பெருமையடையவும் உலகத்திற்கும் மனுக்குலத்திற்கும் தொண்டு செய்யவும் காரணமாக இருந்தது குழந்தைப்பேறு, பிள்ளை. ஆகவே ஈன்ற பொழுதில் பெரிதும் மகிழ்ச்சியடைகிறாள் தாய்.

குழந்தையும் இப்போது தாயின் வயிற்றினின்றும் பிறப்பதன் மூலம் உலகிற்கு வந்துள்ளது. இவ்வாறு இயற்கையின் வழியில் பிறப்பது மட்டுமே குழந்தைக்குச் சிறப்பு அல்ல. தாய்க்கும் குழந்தையைப் பெற்றெடுப்பது மட்டுமே சிறப்பு அல்ல. இந்த இயற்கைப் பிறப்பைத் தாண்டிய பிறப்பு ஒன்றைக்குழந்தை அடைய வேண்டும். தாயும் இயற்கையின்படி பிள்ளையைப் பெற்ற பேற்றை விடச் சிறந்த பேறு ஒன்றைப் பெற வேண்டும். அப் பேறே தாய் அடைந்த இரண்டாம் பேறு. குழந்தை அடைந்த இரண்டாம் பிறப்பு. தாய் அடைந்த இரண்டாம் பேற்றையும், குழந்தை அடைந்த இரண்டாம் பிறப்பையுமே வள்ளுவர் இங்குச் சுட்டுகிறார்.

1. ஈன்ற பொழுது

2. கேட்ட பொழுது

இந்த இரண்டாம் பிறப்பே குழந்தை சான்றோனாகும் நிலை. இந்த இரு பிறவி நிலை பறவையின் வளர்ச்சியில் நேரடியாக மேலெழுந்த வாரியாகவே தெரியக் கூடிய நிலையில் அமைந்துள்ளது.

1. தாய்ப்பறவையின் வயிற்றிலிருந்து வெளிவரும் நிலை
-முட்டை--முதற் பிறப்பு

2. முட்டையிலிருந்து வெளிவரும் நிலை-குஞ்சு
-இரண்டாம் பிறப்பு

இரண்டாம் பிறப்படைந்த நிலையே முழுவளர்ச்சி யடைந்த நிலை. தாய்ப்பறவை தன் பிள்ளையின் வளர்ச்சி கண்டு மகிழவேண்டுமானால் உண்மை யில் அதன் மகிழ்ச்சி, அதன் பிள்ளை இரண்டாம் பிறப்படைந்த நிலையிலேயே முழுமை பெற்ற தாகும். இந்த நிலையையே வள்ளுவப் பெருந் தகை மக்களினத்திலும் காட்டுகின்றார். வெளிப் படையாக உருவத்தால் மக்களாகக் காட்சியளிக் கிறவர்கள் யாவரும் மக்கள் என ஒப்புக்கொள்ள வள்ளுவர் தயாராயில்லை.

உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. —993

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட் பண்பு இல்லாதவர். —997

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரியாங் கண்டது இல். —1071

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படுங் கீழ். —1078

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். —410

கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். —393

பயனில்சொல் பாராட்டுவானை மகன் எனல்
மக்கட் பதடி யெனல். 196

உரம் ஒருவற்குஉள்ள வெறுக்கை அஃதில்லார்
மரம் மக்களாதலே வேறு. —600

மேலே நாம் காணும் வள்ளுவர் வாக்குகள், மக்க ளினத்தில் இருசாரார் உள்ளனர் என்பதில் அவ ருக்கிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையையும், அவ்விருசாரார் எப்படிப்பட்ட தன்மையை உடை யவர் என்பதையும் தெளிவாக விளக்குகின்றன. ஆகவே உறுப்பொத்தல் மக்களொப்பு அன்று. உறுப்பொத்த நிலையில் பிறந்த குழந்தையானது வளர்ந்து பண்பொத்தல் நிலையாம் இரண்டாம் பிறப்பாகிய சான்றோன் நிலையை அடைந்தமை யைக் கேட்ட தாய் ஈன்ற பொழுதிற் பெரிதுவந் தாள் என்பது வள்ளுவர் விளக்கம். இக்குறட் பாவின் விளக்கத்தைப் பன்மொழிப்புலவர் அவர் களின் வாயிலாகக் கேட்போம்.

''ஈன்ற என்ற சொல் ஈனோர் (இவ்வுலகத் தோர், உடல் வாழ்வு மட்டுமேயுடைய கீழுலக மக்கள்) என்ற சொல்லுடன் தொடர்புடையது. ஈன்ற என்பதன் எதிர்ச் சொல்லே ஆன்ற, சான்ற என்பது. இவை **ஆன்மீகப் பிறப்புற்ற ஆன்றோர், சான்றோர்** என்பதைக் குறிக்கும்.

'ஈன்றாள் பசிகாண்பானாயினும்' என்று தொடங்கும் (656) குறட்பாவில் கூட, 'ஈன்றாள்' என்ற சொல் 'உடலைப் பெற்றவள்' என்ற பொருள் தொனிக்கும்படி வழங்கப்பட்டுள்ளமை காணலாம்.

ஈன்ற பொழுதில் என்பதில் 'பொழுது' என்ற சொல் தாயின் பிள்ளைப்பேற்றின் முதற் பிறப்பைச் சுட்டி, அதன் பின் பிள்ளை சான்றோன் எனக் கேட்ட 'பொழுது' ஆகிய **இரண்டாம் பிறப்பைக் குறித்துக் காட்டுகிறது.** முன்னது சிறு பிறப்புக் குரிய சிறு பொழுது; பின்னது பெரும் பிறப்புக் குரிய பெரும் பொழுது; முன்னது துன்பத்தை மறக்க வைக்கும் ஆற்றலுள்ள இன்பமாயினும் சிறு திற இன்பம். பின்னதோ இன்பத்தையே

பேரின்பமாக்கித் துன்பத்தைக் கூடப் பெரும் பேரின்ப மாக்கும் ஆற்றலுடைய இன்பத்துள் இன்பம், தாய் இன்பம், கடவுட் பேரின்பம் ஆகும்.''

—மணிவிளக்கவுரை II பக். 538.

(மறுபடியும் பிறத்தல்—அருளப்பர் 3:3-6. நிக்கொதேமு)

மேலே நாம் காணும் குறிப்புகளிலிருந்து வள்ளுவர் கூறும் சான்றோர் உறுப்பளவில் மற்றவர்போல் காணப்பட்டாலும் உள்ளத்தால் மாறிப்பிறந்த இரண்டாம் பிறப்பையுடையவர்கள், அதாவது பண்பால் மற்றவர்களினும் வேறானவர்கள் என்பதும் விளங்குகிறது.

இவ்வளவும் 'சான்றோன்' என்ற இச் சொல்லைச் சுற்றியுள்ள மற்றப் பகுதிகள் சுட்டும் பொருளே. இக் குறட்பாவின் மற்றச் சொற்கள் சுட்டி விளக்கும் பொருளுடன், இச்சொல் நேரடியாகச் சுட்டும் பொருள் என்ன என்பதையும் பன்மொழிப்புலவர் அவர்கள் மூலமாகவே காணுவோம்.

"சான்றோன் என்பது சால்புடையவன் என்ற பொருளுடையது. சால்பு என்பது பண்பின் நிறை பொங்கல் மலர்ச்சி, பண்பிற் சிறந்து, இயல்பாகவே பண்புருவினனாகி. பிற பண்பாளர்களுக்குச் சான்றாக, பின் பற்றும் முன் மாதிரியாக, இலக்கண மேல்வரிச் சட்டமாக நின்று, பண்பாளர்களிடமெல்லாம் சால்பலைகளையும், மற்ற எல்லாரிடமும் பண்பலைகளையும் பரப்பும் பண்புடையவனே—சால்புடையவனே சான்றோன்; அவன் பண்பே சான்றாண்மை.

இச்சொல்லுடன் தொடர்புடையதாகத் திருவள்ளுவர் சாலும், சால்பு, சான்ற, சான்றாண்மை ஆகிய சொற்களைப் பலபடப் பயன்படுத்தி இச்சொல்லுக்குப் போதிய விளக்கம் தந்துள்ளார். இன்று தமிழில் சான்று (முன்மாதிரி, வழக்கு மன்றத்தில் மெய்ப்பிற்குரிய உறுதுணை அல்லது சாட்சியம் மேற்கோள், எடுத்துக்காட்டு), சான்றாளர் (சான்று கூறுபவர், சாட்சி), சான்றாயம் (தீர்ப்புக்கு முற்பட்ட ஆய்வுறுதிக் குழு), சால (மிகுதியாக, நிரம்ப) சால் (மிகுதி) என்ற சொற்களும்; தெலுங்கில் சாலும் (போதும், பொருந்துவதாகும், அமையும்) சாலா (பொருந்தாது, தகாது). ஆன்றோர், ஆன்ற; ஆல் (படர்ந்த ஆலமரம்) ஆர்ந்த, ஆரியர் என்ற சொற்களும் வழங்குகின்றன.''

—மணிவிளக்கவுரை-II பக். 534.

மேலே பன்மொழிப்புலவரவர்களின் விளக்கத்தில் அவர்கள் விளக்கியிருக்கும் சில நுட்பங்கள் நோக்கத்தக்கன. அவர்கள் மக்கள் தொகுதியைப் பிரித்திருக்கும் பிரிவு ஆழ்ந்து நோக்கத்தக்கது :—

1. மக்கள்

2. பண்பாளர்

3. சான்றோர்.

சான்றோரின் வேலை இரண்டு. 1. மக்களிடம் பண்பலைகளைப் பரப்பிப் பண்பாளர்களாக்குதல். 2. பண்பாளர்களிடமெல்லாம் சால்பலைகளைப் பரப்பிச் சான்றோராக்குதல். இவ்விரண்டு வேலைகளும் அவர்களால் இடைவிடாது செய்யப்படும்.

இப்போது புலவரவர்களின் முதல் பத்தியை மீண்டும் நோக்குவோம்.

பன்மொழிப் புலவரவர்களின் கருத்தைப் பிரதி பலிப்பதாகவே வெண்பாப் பாட்டியல் 221 உள்ளது.

அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டல் முறை.

சான்றோரைப் பற்றிக் கூறியுள்ள இப்பாட்டின் பொருளை வள்ளுவர் நெறியில் நின்று நோக்கினுல், அந்தணர், அறவாழி அந்தணனாகிய கடவுள் ஆகிறார். கடவுளுக்கு அடுத்த நிலையில் மற்றெவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு அறத்தைக் காட்டிய கடவுள் பண்பை மக்களுக்குக் காட்டும் சான்றாக விளங்கும் சால்புடையவர் சான்றோர். அச் சான்றோர் சான்றாகக் காட்டும் பண்பை தனக்குள் நிலைநிறுத்தும்படி அருந்தவமிருந்து சான்றோனாக முயலுபவர் அருந்தவத்தோர். சால்பு நிறைந்து, சான்றாக விளங்கும் சான்றோரும் அவர்களுக்கடுத்த நிலையில் விளங்கும் பண்பாளர்களாகிய அருந்தவத்தோரும் சமுதாயத்திற்கு, மக்கள் தொகுதிக்குப் பொதுவானவர்கள்.

சமுதாயத்திலுள்ள ஒருவனிடம் இவர்களுக்கடுத்த சிறப்புப் பெறுவது அவனுடைய முன்னோர் வாக்கு, அதற்கடுத்த நிலையிலிருப்பது அவனுடைய தந்தையுடையது. அதற்கடுத்த சிறப்பைப் பெறுவது தாயின் மொழி.

உலகில் தோன்றும் ஒவ்வொரு மனிதனும் முதலில் அறிவது பெற்ற தாயை. தாய் காட்டுவது தந்தையை. தந்தையைக் கண்ட மகன் தந்தை மூலம் அறிவது முன்னோரை. அம் முன்னோர் அவனுக்குச் சுட்டுவது பண்பாளர்களாகிய அருந்தவத்தோரை. அவ்வருந்தவத்தோர் இவனுக்குக்

காட்டும் சால்பு நிறைந்த சான்றுளர்களே சான்றோர். அச்சான்றோர், பல்வகைச் சான்றின் மூலமும் இவ னுக்கு ஐயமின்றித் தெளிவுபடுத்தும் உயர் இலக்காக விளக்குவதே அறவாழி அந்தணராகிய கடவுள்.

ஆகவே ஒருவன் கடவுளை ஐயமின்றி அறிந்து கொள்வதற்கு இறுதி நிலையாக, உயர்வழியாகத் திகழ்பவர்களே சான்றோர். சான்றோர் வழியில், அவரைச் சார்ந்திருப்போர் கடந்த நிலையில் விளங் கும் கடவுளை ஐயத்திற்கிடமின்றித் தகுந்த சான்று களுடன் அறிந்துகொள்ள முடியும் என்பது விளக்கப் படுகிறது.

பன்மொழிப் புலவர் அவர்கள் 'சான்றோன்' என்னும் சொல்லுடன் தொடர்புடையனவாகக் காட்டும் சான்று, சான்றுளர், சான்றுயம் ஆகிய சொற்கள் ஆழ்ந்து நோக்கத்தக்கவையாகும். இவை வழக்கு மன்றத்தில் ஒன்றை மெய்ப்பிப்ப தற்குத் தேவையானவை.

சான்று – சாட்சியம்.

சான்றுளர் - சாட்சி கூறுபவர்.

சான்றுயம் - தீர்ப்புக்கு முற்பட்ட ஆய்வுறுதிக் குழு (Jury).

மேலே கண்டபடி பொருள் கூறும் பன்மொழிப் புலவர் அவர்களின் கூற்றினை ஆயுங்கால், 'சான்றோன்' என்பவன் வழக்கு மன்றத்தில் சான்று கூறும் சான்றுளனாக விளங்காது மெய்ப் பொருளாம் கடவுளுக்குச் சான்றுகூறும் சான்றோனே என்பது தெளிவுபடும். ஏனெனில் மெய்ப்பொரு ளாம் கடவுளைப் பற்றிய சர்ச்சை உலகமாகிய நீதி மன்றத்திலே ஒவ்வொரு விநாடியும் நடைபெற்று வருகிறது. உலகமாகிய நீதிமன்றத்தில் கடவுளைப்

பற்றிய வழக்கிலே, ஆத்திகர் நாத்திகர் ஆகிய இரு கட்சிக்காரரிடையே ஆத்திகரின் சார்பாகக் கடவுளைத் தக்க சான்றுகளுடன் மெய்ப்பித்துக் காட்டும் சாட்சிகளே சான்றோர்.

ஆகவே கடந்து நிற்கும் பரம்பொருளாகிய இறைவனுக்கு இவ்வுலகில் சாட்சிகளாய் நின்று, அவனைத் தாங்கள் அறிந்ததுடன் நில்லாது மற்றவர்களுக்கும் வெளிப்படுத்திக் காட்டும் சான்றுகளே சான்றோர் என்ருகிறது. அச் சான்றோர் மற்ற உலக மக்களைப்போல் உடலளவில் காணப்பட்டாலும் உள்ளத்தால் மாறுபட்டவர்கள். உள்ளம் மாறிப் பிறந்த இரண்டாம் பிறப்பையுடையவர்கள்.

கடவுளுக்குச் சாட்சிகளே இச் சான்றோர் என்ற கருத்து திருவள்ளுவருக்கு இருந்தது என்பது உறுதிப்பட வேண்டுமானுல், கடவுளைப் பற்றிக் கூறும் இடங்களில் இதைத் தொடர்புபடுத்தி யுள்ளாரா என்பது ஆயத்தக்கது.

கடவுளைத் தெளிவாக வள்ளுவர் வாழ்த்தும் பகுதி பாயிரம். அப் பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களான கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை ஆகியவை ஒன்ருெடொன்று தொடர்புடையவை. அம் மூன்று அதிகாரங்களையும் இணைக்கும் சொல்லாக விளங்குவது 'ஒழுக்கம்'.

பொறிவாயில் ஐந்தவித்தான் ஒழுக்கம்—கடவுள் வாழ்த்து

யார் யார்க்கும் வானின் றமையாது ஒழுக்கு

—வான்சிறப்பு

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும்

—நீத்தார் பெருமை

இவ்விணைப்புச் சொல்லாகிய ஒழுக்கத்துடன் இணைத்துக் கடவுளுக்கு வள்ளுவர் வழங்கும் பெயர்

ஐந்தவித்தான். இவ்வைந்தவித்தானாகிய கடவுளின் ஆற்றலை வள்ளுவப் பெருந்தகை நீத்தார் பெருமை அதிகாரத்தில் தக்க சான்றுடன் விளக்குகிறார்.

> ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்புளார் கோமான்
> இந்திரனே சாலுங் கரி.

ஐந்தவித்தானாகிய கடவுளின் ஆற்றலுக்கு அகன்ற வானத்திலுள்ளவர்களின் தலைவனாகிய இந்திரனே போதுமான சான்று.

இங்கு கடவுளாகிய ஐந்தவித்தானுக்குச் சிறந்த சான்றாக விளங்கும் சான்றோன், அகல் விசும்புளார் கோமான் என வள்ளுவர், கடவுளின் ஆற்றலுக்குச் சான்று இருக்க வேண்டிய இன்றியமையாமையைத் திட்டமாய்ச் சுட்டியுள்ளார்.

சான்று ஏன்? ஒரு தாய், தான், மக்கள் தொகுதியில் ஒரு பகுதியாய் இருப்பதுடன், மக்கள் தொகுதி பெருகவும் தானே காரணமாய் இருப்பது போன்று, இச் சான்றோரும், தாம் சான்றாய் இருப்பதுடன் சால்பலகளைப் பெருகச் செய்து, சான்றோர் பெருகக் காரணமாகின்றனர். கடவுளின் ஆற்றலுக்குச் சான்று கூறும் இக் குறட்பாவில், வள்ளுவரால் கையாளப்படும் சாலும் என்ற சொல்லும் நோக்கத் தக்கது.

இதைப் பற்றிய பன்மொழிப்புலவரவர்களின் விளக்கத்தைக் காண்போம்.

"சான்றோன்" என்ற சொல்லுடன் தொடர்புடையன என்று மேலே குறிக்கப்பட்டவற்றுள்ளே கூட, 'சாலும்' என்பது நீத்தார் பெருமை அதிகாரத்தில் 'ஐந்தவித்தான் ஆற்றல்' சுட்டும் (25-ம்) குறட்பாவிலும், 'சான்ற' என்ற சொல் வாழ்க்கைத்

துணைநல அதிகாரத்தில் கற்புடை மனைவியின் பண்பியல்புக்கு இலக்கணம் வகுக்கும் (56-ம்) குறட்பாவிலும் மட்டுமே வழங்கப்பட்டுள்ளன என்பது இங்கே குறிக்கத்தக்கது ஆகும். இக் குறட்பாவிற்குத் தொலைவாயில்களாகவே அந்த இரு குறட்பாக்களையும் திருவள்ளுவர் அமைத்துள்ளரோ என்று கருத இடமுண்டு. ஏனெனில் ஐந்தவித்தான் ஆற்றல்தான் சான்ருண்மை; அதனை ஆக்கிப் படைப்பதுதான் கற்பின் நிறை மலர்ச்சியாகிய தாய்மை என்ற திருவள்ளுவர் கருத்தை இது சுட்டிக்காட்டுகிறது. அத்துடன், 'ஐந்தவித்தான் ஆற்ற'லோடு ஒத்த கடவுட் பண்பே கற்பு; அதன் மலர்ச்சியாகிய தாய்மை ஆக்கும் பண்பே சான்ருண்மை. சான்ருண்மையின் மலர்ச்சி நிறைவே 'ஐந்தவித்தான் ஆற்றல்'—இந்த அற ஆழி (தர்ம சக்கர)ப் பண்பும் இவ்விரு வாயிற் குறட்பாக்களுடன் கூடிய இக்குறட்பாவால் இயக்கி வட்டணித்துக் காட்டப்படுகிறது.''

—மணிவிளக்கவுரை—II பக். 535.

ஐந்தவித்தான் ஆற்றல் சான்ருண்மை - சான்ருண்மையின் மலர்ச்சி நிறைவே 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்ற தொடர்களால் ஐந்தவித்தான் ஆற்றலுக்கும் சான்ருண்மைக்கும், சான்ருேனுக்கும் உள்ள தொடர்புகள் விளக்கப்படுகின்றன.

ஆகவே,

1. மக்கள்
2. பண்பாளர்
3. சான்ருேர்
4. ஐந்தவித்தான்
5. கடவுள்

('ஐந்தவித்தான் யார்' என்ற நூலைக் காண்க.)

ஆகிய பல படிகள் இதன் மூலம் விளக்கம் பெறுகின்றன. கடவுளின் ஆற்றல் ஐந்தவித்தானால் வெளிக்காட்டப்பட்டது. அவ்வாற்றல் சிறப்புக்குச் சான்று பகரும் ஆண்மையுள்ளவனே சால்பு நிறைந்த சான்றோன்.

சான்றோன், சான்று கூறிவெளிப்படுத்தும் சால் பலேகளைப் பெறுபவர் பண்பாளர்கள். அப்பண் பாளர்களின் பண்பலேகளைப் பெறுபவர் மக்கள். ஆகவே மக்களுக்கும் கடவுளுக்கும் இடையே பண்பாளர்கள், சான்றோர் உள்ளனர். கடவுள் தம் ஆற்றலை இச்சான்றோருக்கு ஐந்தவித்தானாக வெளிக்காட்டினார் என்னும் இப்படிகள் இப்போது விளக்கம் பெறுகின்றன.

இதுவரை நாம் ஆராய்ந்தவைகளிலிருந்து 'சான்றோன்' என்னும் சொல் ஐந்தவித்தானாகிய கடவுளுக்குச் சான்று பகரும் சான்றாண்மை நிறைந்தவர்களைக் குறிக்கிறதென்பதும், அவர்கள், உள்ளம் மாறிப்பிறந்த மறு பிறப்பையுடையவர்கள் என்பதும் விளங்குகிறது.

இந்த உள்ளம் மாறிப் பிறக்கும், புதுப் பிறப் பைப் பற்றியே சான்றோர் வழி வந்த, சித்தர்கள் தெளிவாகக் கூறுகின்றார்கள். செத்துப் பிறக்கும், பிறவிச் சுழற்சிக் கொள்கை அவர்களுக்கு உடன் பாடன்று. கண்டிக்கவும் செய்கிறார்கள்.

கறந்தபால் முலேபுகா; கடைந்த வெண்ணெய் மோர்புகா;
உடைந்து போன சங்கினோசை யுயிர்களும் உடற் புகா;
விரிந்த பூ வுதிர்ந்த காயும் மீண்டுபோய் மரம்புகா;
இறந்தவர் பிறப்பதில்லே யில்லே யில்லேயே.

—சிவவாக்கியர்-46.

"இல்லே இல்லே இல்லேயே" என சிவ வாக்கியர் மும்முறை அடித்து மறுத்துக் கூறும்

அழுத்தம் நோக்கத்தக்கது. பால், மோர், ஓசை, உயிர், பூ, காய் இவை தாம் விட்டவற்றை மீண்டும் பற்றுவதில்லை என தக்க சான்றுகளுடன் விளக்குகிறார்.

மனம் மாறிப் பிறக்கும் மறு பிறப்பையே அச்சித்தர்கள் போற்றுகிறார்கள், நம்புகிறார்கள், மற்றவர்களுக்கும் கூறுகிறார்கள் :—

நீற்றைப் புனைந்தென்ன நீராழம் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கின்ற வெழுகோடி மந்திர மேதுக்கடா
ஆற்றைக் கடக்கத் துறைதெரியாம லலைகின்றயே.

—பட்டினத்தார்-பொதுநூல், 40.

பிற்காலச் சித்தர்கள் வற்புறுத்தும் இக்கொள்கை, இச்சித்தர்களுக்கு முன்னோடியான சித்தராக விளங்கும் வள்ளுவர் வகுத்துக் கூறும் கொள்கையே என்பதில் ஐயம் இருக்கக் காரணம் இல்லை.

இக்கொள்கைக்கு விளக்கம் வேண்டுவோர் 'எழுபிறப்பு?' என்னும் நமது நூலைப் பார்க்கவும்.

இதுவரை 'சான்றோன்' என ஒருமையில் வள்ளுவர் சுட்டியுள்ள ஒரே குறட்பாவை நோக்கினோம். இப்போது வள்ளுவர் பன்மையில் 'சான்றோர்' என்று சுட்டியுள்ள குறட்பாக்களில் சிலவற்றை நோக்குவோம்.

## சான்றோர்

சான்றோரைப் பற்றிக் கூறும் பதினேழு குறட்பாக்களையும், 1. நடுவு நிலைமை, 2. பிறனில் விழையாமை, 3. பயனில சொல்லாமை, 4. வாய்மை,

5. கொல்லாமை, 6. சிற்றினம் சேராமை, 7. வினைத் தூய்மை, 8. பழைமை, 9. பேதைமை, 10. கள்ளுண்ணுமை, 11. சான்ருண்மை, 12. நாணுடைமை, 13. கயமை ஆகிய பதின்மூன்று அதிகாரங்களில் வைத்துள்ளார். இப்பதின்மூன்று அதிகாரங்களும் ஒன்று போல் 'மை' விகுதியால் முடிவது எண்ணி வியக்கத்தக்கது. --பண்புப்பெயர்.

'சான்ரேர்' என்னும் சொல்வரும் இப்பதின் மூன்று அதிகாரங்களும் சான்ரேரின் குணங்களை விவரிப்பனவே என்பதில் ஐயமில்லை. அதிகாரம் ஒவ்வொன்ருக நோக்கத் தொடங்கிலை் மிகப் பரந்து விரியும். ஆகவே சான்ரேர் சுட்டப்பட்டுள்ள குறட்பாக்களில் சிலவற்றை மட்டுமே பகுப்பு முறையில் நோக்குவோம்.

## 1. உப்பு

சான்ரேர் உலகிற்கு உப்பாகத்திகழ வேண்டும். "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே" என்பது பழமொழி. உப்பு தன்னுடைய சாரத்தை மற்றவற்றிற்கீந்து தான் உருவழிந்து மறையினும் தன்னைச் சார்ந்தவைகளைச் சுவையுள்ளவையாக ஆக்குகிறது. அவ்வாறே சான்ரேரும் தங்களைச் சேர்ந்தவர்களை இனியவர்களாச்கி அவர்கள் பேரின்பப் பொருளாகிய இறைவனை அடைவதற்குக் காரணராகித் துன்பத்தைச் சகிக்க வேண்டும் என்பது வள்ளுவர் வாக்கு. பழைமை என்னும் அதிகாரத்தில் இதை விளக்குகிருர்.

> நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
> உப்பாதல் சான்ரேர் கடன் — 802

உப்பு உருவத்தால் அழிந்து சாரத்தால் தன்னுடன் சேர்ந்தவைகளைச் சுவையுள்ளவையாக ஆக்குவதைப் போன்று சான்ரேரும் தமிழகத்தில்

மாறியுள்ளனர் என்பதை வரலாறு காட்டுகிறது. கொள்கையால் இணைந்து சான்றோரானவர்கள் தங்கள் இனிய உயர்வான குணத்தால் தாங்கள் மறக்கப்பட்ட நிலையில், மறக்கடிக்கப்பட்ட நிலையி லும் தங்கள் குணம் உயர்ந்ததே எனபதை இலக் கியத்திலும் வரலாற்றிலும் நிலைநாட்டியிருக்கின் றனர்.

எவ்வாறு?

'சான்றோர்' என்பது கொள்கையால் இணைந்த கூட்டத்தைக் குறித்த சொல் என்பதை எவ்வித ஐயத்திற்கும் இடமின்றி அறிந்தோம். ஆனல் பிற் காலத்தில் சான்றோர் என்ற சொல் குறிக்கும் பொருளைக் காட்டும் திவாகரம்,

> ''சான்றோர் மிக்கோர் நல்லவர் மேலவர்
> ஆய்ந்தோ ருயர்ந்தோ ராரிய ருலகென
> வாய்ந்த ஆன்றோர் அறிவுடையோரே''

என்று கூறுமுகத்தால், சான்றோர் இந்நாட்டில் உப்பாகித் தான் மறைந்து மற்றவற்றை இனிமை யாக்கி உயர்ந்த நிலையை அடைந்து உயர்ந்தோர் என்ற நிலையை அடைந்தமையை விளக்குகிறது. பிற்கால இலக்கியங்கள், 'சான்றோர்' என்னும் சொல்லை உயர்ந்தவர் அத்தனை பேரைக் குறிக்க வும் பயன்படுத்தின. தற்காலத்திலும் சான்றோர் என்ற சொல் வழக்கு சிறந்தவர்களைக் குறிக்கப் பயன்படுவதை நாம் யாவரும் அறிவோம். ஆகவே வள்ளுவர் வாக்குக்கிணங்க சான்றோர் இந்த நாட்டில் உப்பாகவே மாறினர்.

'பூ' என்னும் சொல் பூக்கும் பொருளைச் சுட் டுவது. பூக்கும் பொருளாகிய பூ—'பூ' என்னும் பெயருடன் மென்மையாகிய தன்மையையும் பெற் றிருக்கிறது. 'பூ' என்னும் சொல், மென்மையாகிய

தன்மையைக் குறிப்பதன்று. பூக்கும் பொருளையே குறிப்பது. ஆனால் 'பூப்போன்ற கன்னம்' எனக் குறிக்கும் பொழுது, அவ்விடத்தில் 'பூ' என்னும் சொல் பூத்த பொருளைக் குறிக்காமல் பூத்த பொருள் அடைந்த தன்மையாகிய மென்மையைக் குறிக்கிறது.

பூ—பூத்தபொருள்—மென்மையான பொருள். 'பூ' என்னும் சொல் மென்மைப் பொருள் என்ற பொருளைக் குறிக்காவிடினும், பின்னர் அப்பொருளில் வழங்கப்படுவது ஏற்றுக்கொள்ளப்பட்டது. அவ்வாறே ஐந்தவித்தானுக்குச் சான்ருக, சான்று கூறும் சான்றோரானவர்கள் உப்பைப் போன்ற உயர்வான சிறந்த குணத்தால், பிற்காலத்தில் குணத்தால் ஏற்பட்ட பொருளைக் குறிப்பவராக எண்ணப்பட்டனர்.

நாம் மேலே பார்த்த திவாகரச் செய்யுளினுள் ஒரு முக்கிய குறிப்பு. 'ஆரியர்' என்னும் சொல்லும் உயர்ந்தவர் என்ற பொருளைக் குறிப்பதாகச் சுட்டப்பட்டுள்ளது. இவ்விடத்தில் ஆரியர் என்னும் சொல் வட நாட்டிலிருந்து வந்தவர்களை அன்று, உயர்ந்த குணங்களையுடையவர்களை மட்டுமே குறிக்கும் சொல் என வாதிட யாருமே முன் வரமாட்டார்கள் என்பது உறுதி. அவ்வாறே சான்றோர் என்னும் சொல்லும் ஆரியரைப் போன்ற ஒரு கூட்டத்தாரை, ஆனால் கொள்கையினடிப் படையில் இணைந்தவர்களைக் குறிக்கும் சொல்லே என்பதில் எவ்வித ஐயமும் இருக்கக் காரணம் இல்லை.

ஆகவே சான்றோர் உப்பாக விளங்க வேண்டியது அவர்களுடைய கடன், கடமையாகும்.

## 2. ஒளி

உப்பு தான் மறைந்து மற்றவற்றைச் சுவையுள்ளவையாக ஆக்குவதைப் போன்றே, ஒளியும். இங்கு ஒரு குறிப்பு நோக்கத்தக்கது. உப்பு மறையுமேயன்றி அழிவதில்லை. உருவம் மட்டுமே வெளியே காணப்படா நிலையில் செயல்படும். தன் தன்மையை மற்றவற்றிற்கு ஏற்றி விடும். அவ்வாறே ஒளியும், தான் ஒளியாய் விளங்குவதுடன் மற்றப் பொருட்களையும் ஒளிரச் செய்கிறது. ஒளியானது யாவருக்கும் பயன்படும்படியாகப் பயன்படக் கூடிய இடத்திலும் இருக்க வேண்டும். மறைவான இடத்தில் இருக்கும் ஒளியால் யாருக்கும் பயன் இல்லை. எல்லோருக்கும் பயன்படக் கூடிய நிலையில் எல்லோர் மீதும் ஒளி வீசும் நிலையில் இருக்கும் ஒளியாலேயே யாவருக்கும் பயன் ஏற்படும்.

ஞாயிறு, திங்கள், தீ ஆகியவை ஒளி கொடுக்கக் கூடிய தன்மையில் விளக்குப் போல்வன. மேலும்,

குடியென்னும் குன்றா விளக்கம் — 601
பொருளென்னும் பொய்யா விளக்கம் — 753
தவவில்லாத் தாவில் விளக்கம் — 853
விளக்கு —1186

போல்வனவும் உண்மையில் சான்றோர்க்குச் சிறந்த விளக்குகள் அல்ல. சான்று கூறுவதில் சிறந்து விளங்க வேண்டிய சான்றோன், தன் உள்ளத்தில் உள்ள இறைவனாகிய மெய்யைப் பொய்த்தலாகிய மறைத்தலைச் செய்யாது மற்றவர்களுக்கு எடுத்துக் கூறுவதே சிறந்த விளக்கு.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. — 299

**இதற்குப் பரிமேலழகர் கொடுக்கும் விளக்கம்:-**

"புறத்து இருள் கடியும் உலகத்தார் விளக்கு கள் எல்லாம் விளக்கு ஆகா; சான்ருேர்க்கு விளக் காவது மனத்து இருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கே." இங்குப் பரிமேலழகர் கருத்துப்படி மனத்து இருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கு எது? நடந்ததை நடந்தபடியே சொல்லு வது ஆகுமா? அதை விட மிகவும் மேலானது என்பது 'மனத்து இருள் கடியும்' என்ற தொடர் சுட்டுகிறது.

வெங்கதிர்க்கும் செந்தீ விரிசுடர்க்கும் நீங்காது
பொங்குமதி யொளிக்கும் போகாது—தங்கும்
வளமையான் வந்த மதிமருட்சி மாந்தர்க்
கிளமையான் வந்த இருள்

— தண்டி. -49 மேற்.

"பொய்யா நாவதனுற் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கே யொத்த தேவர்பிரான்"
சுந்தரர். கழிப்பாலை. 9 (299)

கேட்கிறவனுடைய மனத்தின் இருளை நீக்கக் கூடியது இறைவனைப் பற்றிய செய்தியே யாகும். ஒப்பற்ற இறைவனைப் பற்றிய செய்தி ஒன்று மட் டுமே மனத்து இருள் கடியக் கூடியது. மற்ற எதற்கும் அவ்வாற்றல் கிடையாது. இறைவனைப் பற்றிச் சான்று கூறுகிறவர்களே சான்ருேர் என்பதைப் பார்த்தோம். ஆகவே சான்ருேர் தம் மனத்திலுள்ள ஒளியாகிய விளக்கை அடுத்தவர் உள்ளத்திலும் ஏற்றி, அவர்களும் ஒளியைப் பெறும் படி செய்ய வேண்டுமானுல் வேறு எம்முறையும் பயன்படாது. தன்மனத்திலுள்ள, தான் அறிந்த

ஒப்பற்ற இறைவனைப் பற்றிய செய்தியை, மற்றவர் உள்ளமும் ஏற்கக்கூடிய முறையில், எடுத்து வாயினால் கூற வேண்டும். அவ்வாறு கூறுதலாகிய செய்தியே மிக உயர்ந்தது.

எவன் ஒருவன் அவ்வொப்பற்ற இறைவனைப் பற்றிய செய்தியைத் தன் உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு ஒளியைப் பெறவில்லையோ, அவனுக்கு உலகமே தலை கீழாக மாறினாலும் புகலிடம் வேறு இல்லை என்பது புறநானூறு கூறும் செய்தி:-

''நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லை'' —புறம்-34

சான்றோர்க்கு எல்லா விளக்கும் விளக்கல்ல; ஒப்பற்ற ஒருவனாகிய இறைவனைப் பற்றிய செய்தியைப் பொய்யாது மற்றவர்களுக்குச் சான்று கூறும் கொள்கைவிளக்கே விளக்கு என்பது வள்ளுவர் [illegible]ாக்கு.

அச்செய்தியின் விளக்கமாக இருப்பதே புறநானூறு கூறும் இச்செய்தியுடன் தொடர்புடையதாகத் தமிழர் பெருமக்களால் கொள்ளப்படும்,

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

என்ற குறட்பாவினால் சுட்டப்படும் செய்ந்நன்றியாகும்.

வள்ளுவர் சுட்டும் 'செய்ந்நன்றி' எது? இது நாம் இப்போது புதிதாகக் காணவேண்டிய குறிப்பு ஆகும். இதைச் சற்று ஆழ்ந்து நோக்குவோம்.

நன்றி என்பது என்ன?

(67, 97, 10[illegible], 104, 108, 110, 117, 138, 432, 562, 565, 685, 994)

நன்றி என்பது நன்மையைக் குறிப்பது என்பது மேற்காணும் குறட்பாக்களின் விளக்கம்.

இவ்விளக்கத்தின்படி, எந்நன்றி, செய்ந்நன்றி இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமை என்ன? இரண்டும் நன்றி என்ற அளவில் ஒன்றே. ஆனால் வள்ளுவர் சுட்டுவது, இவ்விரண்டினுள் 'எந்நன்றி' யைக் கொன்றாலும் உய்வுண்டு, ஆனால் 'செய்ந் நன்றி' யைக் கொன்றால் உய்வில்லை என்பதாகும்.

இங்கு 'எந்நன்றி'யை விட 'செய்ந்நன்றி' மாறுபட்டதாகவும் உயர்ந்ததாகவும் வள்ளுவரால் காட்டப்படுகிறது.

இது பொருந்துமா? நன்றியாகிய நன்மை என்ற அளவில் இரண்டிற்கும் வேற்றுமை இல்லை. ஆனால் ஒரு நன்மை மறக்கப்படலாம். இன்னொரு நன்மை மறக்கப்படவே கூடாது என்கிறார் வள்ளுவர். அப்படியானால் இவ்விரண்டு நன்மைகளுக்கிடையே யுள்ள வேற்றுமை யாது? இவ்விரண்டு தொடரையும் நாம் பிரித்தறியுங்கால்,

எந்நன்றி -- எந்த நன்மை
செய்ந்நன்றி -- (வினைத்தொகை) செய்த-செய்கின்ற,
செய்யும்-நன்மை

என்ற விளக்கம் தோன்றுகிறது. இவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமையை நாம் உற்று நோக்கின் ஒன்று சாதாரண நன்மை; மற்றது முக்காலத்திற்கும் பொருந்தக் கூடிய நன்மை.

இதன் விளக்கத்தைக் கண்டால் சாதாரண நன்மையை மறந்தால் உய்வுண்டு; முக்காலத்திற்கும் உரிய நன்மையை மறந்தால் உய்வில்லை. இப்பொழுது ஓரளவு நமக்கு விளக்கம் கிடைக்கிறது.

ஒருவன் தனக்கு நன்மை செய்த யாவரையும் நினைத்துப் போற்ற வேண்டும். செய்யப்பட்ட நன்மைகளுள், சாதாரண நன்மைகளை மறந்தாலும், அவனுக்கு உய்வுண்டு. முக்காலத்திலும் நன்மை பயக்கக் கூடிய நன்மையை மறந்தால் உய்வே கிடையாது. அப்படியானால் சாதாரண நன்மை செய்யக் கூடியவர் யாவர்? முக்காலத்துக்கும் ஏற்ற நன்மை செய்யக் கூடியவர் யார்? இதற்கு விளக்கமே புறநானூற்றுப்பாடல்.

ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க்குய்தி யில்லென

இங்குச்சுட்டப்படும் ஆன், மகளிர், பார்ப்பார், ஒருவன் ஆகிய நால்வருள் முதல் மூவர் செய்த நன்மையை மறப்பது மட்டுமல்ல, நன்மைக்குப் பதில் தீமையே செய்தாலுங்கூடக் கழுவாய் உண்டு. ஆனால் ஒருவன் செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லை; நிலம்புடை பெயர்வதாயினும் உய்தியில்லை. இங்கு சுட்டப்படும் 'ஒருவன்' யார்?

புற நானூறு சுட்டும் 'ஒருவன் செய்தி'க்கும் திருக்குறள் சுட்டும் 'செய்நன்றி'க்கும் இவ்விதத்தில் முழு ஒற்றுமை உள்ளது என்பது அங்கையங் கனியாகும்.

ஆன், மகளிர், பார்ப்பாரைவிட நன்மையான 'ஒருவன்' யார்? அவன் 'செய்தி' யாது?

'ஒருவன்' என்பது ஒப்பற்றவன், என்ற பொருளைச் சுட்டுவது. ஒப்பற்றவன் யார்? சிறப்புடையவர் எனக் கருதப்பட்ட ஆன், மகளிர், பார்ப்

பார் ஆகிய இவர்களினும் சிறப்புப் பெற்ற அந்த 'ஒருவன்', ஒப்பற்றவன் யார்? ஒப்பற்றவன் மனிதனா? மனிதனாக இருக்க முடியாது. தனக்குவமையில்லாதவனாகிய கடவுள் அல்லவா? ஆம் ஒப்பற்றவனாகிய 'ஒருவன்' என்பது தமக்குவமையில்லாதவனாகிய கடவுளையே சுட்டக்கூடிய சொல் ஆகும். முக்காலத்திற்கும் நன்மை பயந்து, நீடு வாழ்வளிக்கக் கூடிய வகையில் அவன் செய்த, செய்கின்ற, செய்யும் நன்றியே செய்ந்நன்றி. அந் நன்றியே நீடு வாழ்வளிக்கக்கூடியது. தனக்குவமையில்லாத இறைவனும் ஐந்தவித்தானின் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய செய்ந்நன்றியை மறந்தவர்களுக்கு, நிலம்புடை பெயர்வதாயினும் உய்வில்லை. மறக்காதவர் நீடுவாழ்வர்.

ஆகவே மனிதர்களுள் சிறந்தவரெனக் கருதப் படுபவர்கள் செய்த நன்றியை மறந்தாலும் மறக்கலாம், கொன்றாலும் கொல்லலாம்; ஆனால் ஒப்பற்றவராகிய கடவுளின் செய்தியாகிய செய்ந்நன்றியைக் கொன்றோர்க்கு ஒருபோதும் உய்வில்லை.

தனக்குவமையில்லாத அவ்வைந்தவித்தான் பொறிவாயில் செய்த நன்றியே செய்நன்றி. அதுவே முக்காலத்திற்கும் நன்மை பயக்கக் கூடியது. அவனுடைய அச் செய்ந்நன்றியை மற்றவர்களுக்குச் சான்றாக அறிவித்துக் கூறலே செய்தி, நற்செய்தி, திருச்செய்தியாகும்.

> 'மக்களுக் கெல்லாம் மாபெரு மகிழ்ச்சி யூட்டும் நற்செய்தி'
>
> 'இதோ உங்களுக்கு ஓர் நற்செய்தி'
>
> —லூக்கா 2: 10-11
>
> நீங்கள் உலகமெங்கும் போய், படைப்பிற்கெல்லாம் நற்செய்தியைப் அறிவியுங்கள். —மாற்கு 16: 15

ஆகவே அச் செய்தியை ஏற்றுக்கொள்ளாதவர்களுக்கு ஒருபோதும் உய்தி இல்லை. எனவே, சான்று கூறும் சான்றோர்க்கு மற்றெல்லா விளக்கும் விளக்கல்ல. உண்மையில் உள்ளத்தின் இருளை அகற்றி ஒளியை ஏற்றும் வலிமை பெற்ற அச் செய்தியைப் பொய்யாது கூறலே உண்மை ஒளியாகும். ஆகவேதான் வள்ளுவர், தம்முடைய சான்றினைக் கூறுங்கால் இதை வற்புறுத்திக் கூறுகிறார்.

யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்று மில்லை
வாய்மையின் நல்ல பிற.

இது வள்ளுவரின் தனிப்பட்ட, அவர் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வரும் கருத்தாகும். அவர் உலகில் மெய்யாக் கண்டவற்றுள் எனைத்தொன்றும் இவ்வாய்மையைக் காட்டிலும் பிற நல்ல இல்லையாம். இவ்வாய்மையே நற்செய்தி கூறல். இச் செய்தியைக் கொன்றவர்க்கு நிலம்புடை பெயர்வதாயினும் உய்தி இல்லை எனப் புறநானூற்றுப் பாடலாலும் வற்புறுத்தப்படுகிறது.

ஆகவே உலக மக்களைப் பண்புடையவர்களாக்கவும், பண்புடையவர்களைச் சான்றோராக்கவும், அவர்கள் நீடு வாழ்வைப் பெறவும் காரணமானது 'ஒருவன் செய்தி.' இந் நற்செய்தியைக் கூறி உள்ளத்து இருளகற்றும் பொய்யாமையாகிய விளக்கே உண்மையான விளக்கு ஆகும்.

புறநானூற்றுப் பாடலும், திருக்குறளும் சுட்டும் 'செய்தி'யும் 'செய்ந்நன்றி'யும் ஒன்றே.

'செய்தி கொன்றோர்க்கு' உய்தியில்லை. —புறம்.

'செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை —குறள்.

இது தனக்குவமையில்லாத ஒருவனாக விளங்கும் ஐந்தவித்தானுடையது. இச் செய்தியைக்

கொன்றவர்க்கு 'உய்தி' யாகிய 'நீடுவாழ்வு' இல்லை. இவ்வைந்தவித்தானாகிய அறவாழி அந்தணனின் மறைமொழியாகிய அறமே அந்தணர் நூல். அவ்வந்தணர் நூலாகிய 'அறம்' புறநானூற்றுப் பாடலாலும் திருக்குறளாலும் சுட்டப்படுகிறது. நிறைமொழி மாந்தராகிய ஐந்தவித்தானின், பொய் தீர் ஒழுக்க நெறியைக் காட்டும் மறைமொழியே அந்தணர் நூல். ஐந்தவித்தானாகிய அவ்வந்தணர் நூல் காட்டும் நெறியில் நிற்பவர் நீடுவாழ்வை யடைவர். அவ்வைந்தவித்தானாகிய 'ஒருவன்', தன் ஆற்றலால் செய்த, செய்கின்ற, செய்யும் நன்றியாகிய செய்தியைச் சான்றுடன் பொய்யாமல் விளக்கும் பொய்யாமையாகிய விளக்கே சான்றோர்க்கு விளக்கு. அச்செய்தியே உண்மையான ஒளியைப் பற்றிய சான்று. உள்ளத்தின் இருளை அகற்றும் ஒளி. இவ்வொளியாகிய செய்தி உள்ளமாகிய மலர்மிசை ஏகுங்கால்,

> இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு.

இதுவரை நாம் வள்ளுவர் வழியில் ஆராய்ந்தவைகளைத் தொகுத்துப் பார்த்தால், சான்றோர்—

1. உள்ளம் மாறிப்பிறந்த இரண்டாம் பிறப்பையுடையவர்கள்.
2. ஐந்தவித்தானாற்றலுக்குச் சான்றாக விளங்கிச் சால்பலைகளைப் பரப்புபவர்கள்.
3. உலகிற்கு உப்பாக விளங்குகிறவர்கள்.
4. உலகிற்கு ஒளியாக விளங்கி நற்செய்தி கூறி ஒளியைப் பரப்புபவர்கள்.

சான்றோரைப் பற்றிய விரிவான விளக்கத்தைப் பின்னர் பார்ப்போம். இப்போது சான்றோருக்கு இருக்கும் குணமாகிய சால்பை வள்ளுவர் வழியில் காண்போம்.

சால்பு

வள்ளுவர் இறைவனை மிக உயர்ந்த குணங்களுடையவராகக் காட்டுகிறார். அவர் காட்டும் இறைவன் உலக மக்களுக்காகத் தன்னையே துன்பத்திற்கானாக்கி மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிய அறவாழி அந்தணனாகிய ஐந்தவித்தான்.

வள்ளுவர் வணங்கும் கடவுளைப் பற்றி, கடவுள் கொள்கையை ஏற்றுக்கொள்ளாத சமண சமயத்தைச் சார்ந்த பேராசிரியர் சர்க்கரவர்த்தி நயினார் நடுநிலையில் நின்று கீழ்க்கண்டவாறு கூறுகிறார் :—

" திருவள்ளுவரின் கடவுள் அருளறம் என்பது தவிர வேறில்லை. (அருளறம் என்பது எல்லோர்க்கும் நன்மையே விரும்பிச் செய்தல்—Universal Benevolence). இந்த அருளறக் கடவுள் உருத்திரன் அல்லது இந்திரனைப்போல் சினம் கக்கும் வடிவமுடையது அல்ல. இக் கடவுள் தனக்கு வேண்டாதவர்களைத் தீயும் கந்தகக் கல்லும் சொரிந்து கொல்லாது ; கண்ணினின்று கனலைக் கொழித்து மக்களை அழிப்பதும் இதன் தன்மையன்று. இதன் கைகளில் கொலைக் கருவிகள் எவற்றையும் நாம் காண முடியாது. அருளறக் கடவுளின் இயற்கை-மக்களையெல்லாம் அரவணைக்கும் அன்பு (Universal love) ஒன்றே தவிர மற்றில்லை. இக் கடவுளுக்கு நண்பர்களும் கிடையா ; பகைவர்களும் கிடையா. வேண்டியவர்களும் வேண்டாதவர்களும் இதற்கு ஒன்றுதான். இதனிடத்தில் உள்ள ஒரே ஆயுதம்

அன்பாகும். அன்புக்குக் கட்டுப்படாதவர் இவ் வுலகில் யார் இருக்க முடியும்? அன்புக்கு முன்னே கொடிய புலியும் பொறுமையான ஆட்டுக்குட்டியாக மாறிவிடும் என்று சொல்லுகிருர்கள் அல்லவா?''

—திருக்குறள் வழங்கும் செய்தி. பக். 117

அன்பு ஒன்றையே தனக்கு ஆயுதமாகக் கொண்ட இக் கடவுளின் அடியவராகிய சான்ருேர் எவ்வாறு இருப்பர்? அவர்களும் அருளறத்தை யுடையவர்களாகவே இருப்பரன்ருே? சான்ருேர் களுக்கிருக்கும் குணமே சால்பு. சால்பு என்பது நிறைந்திருத்தல். எதால் நிறைந்திருத்தல்? நற் குணங்களால் நிறைந்திருத்தல். நற்குணத்திற்குக் காரணமானது எது? ஒழுக்கம். ஒழுக்கமுள்ள ஒருவன் நற்குணங்கள் நிறைந்தவனுயிருப்பது இயல்பு. ஒழுக்கம் என்ற சொல்லால் பாயிரத்தின் அதிகாரங்கள் இணைக்கப்பட்டிருப்பதை முன்னர் பார்த்தோம். அவ்வொழுக்கத்திற்குக் காரணமா னது 'வான்' என்பது வள்ளுவர் கொள்கை.

"யார்யார்க்கும் வானின்றமையா தொழுக்கு" —20

ஆகவே சான்ருேரின் சால்புக்குக் காரண மானது வான் ஆகும். வானல் நிரப்பப்பட்ட ஒருவன் நற்குணங்களால் நிரப்பப்பட்ட ஒழுக்க முடையவனுக, சால்புடைய சான்ருேனுகத் திகழ் வான். வானல் நிரப்பப்படாதவனிடத்தில் ஒழுக்கம் நிரம்புவதில்லை; சால்பு இருப்பதில்லை; அவன் சான்ருேனுக விளங்குவதில்லை. ஆகவே வெளிப் படையாகத் தோற்றமளிக்கும் சான்ருேனின் அக நிகழ்ச்சிகள் பலபடியாயுள்ளன.

**சான்ருேன் > சால்பு > ஒழுக்கம் > வான். வானல் நிரப்பப்பட்ட ஒருவனே ஒழுக்கமுடையவனுவான். ஒழுக்கமுடைய ஒருவனே சால்புடையவனுவான்.**

சால்புடைய ஒருவனே சான்ருேனுவான். இதை கனி, பூ, தண்டு, வேர் இவற்றிற்கு ஒப்பிடலாம்.

சான்ருேன்—கனி

சால்பு—பூ

ஒழுக்கம்—தண்டு

வான்—வேர்.

வேரும் தண்டின் ஒரு பகுதியும் பூமியினுள் இருப்பவை. வெளியே காணப்படக் கூடாதவை. ஆயினும் மற்றவற்றிற்கு அடிப்படையானவை. அவ்வாறே வானும் அதன் காரணமான ஒழுக்கத் தோற்றமும் வெளியே காணப்படாதவை. ஒருவன் வான் உள்ளவனு இல்லாதவனு என்று வெளிப் படைத் தோற்றத்தைக் கொண்டு முடிவு செய்ய முடியாது. ஆயினும் வேர் இன்றிக் கனி இல்லாதது போல, வான் இன்றிச் சான்றேன் நிலைபெற முடியாது. இவை யாவற்றையும் விளக்கும் குறட் பாவே,

நீர்இன்றமையா துலகெனின் யார் யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

என்பதாகும்.

பூமியில் நிலைபெற்ற வேரையுடைய மரம், கனி கொடுப்பதைப் போன்று, கடவுளில் நிலைபெற்ற மனிதன் வானையுடைய சானருேனுகிருன். இப் பொழுது சான்ருேனுகிய கனி தோன்றுவதற்கு இறுதிக் காரணமான சால்பாகிய பூவினை வள்ளுவர் வழியில் நோக்குவோம்.

## இதழ்

இதழ் இல்லாமல் பூ இல்லை. பொதுவாகப் பூக்களுக்கு ஐந்து இதழ்கள் உண்டு. அவ்வாறே சால்பாகிய பூவுக்கும் ஐந்து இதழ்கள் உள்ளன என்பது வள்ளுவர் கூற்று. வள்ளுவர் ஐந்து இதழ்களையும் சால்பாகிய பாரத்தைத் தாங்கும் ஐந்து தூண்களாக உவமிக்கிறார். ஐந்து தூண்களாக உவமிக்கப்படும் ஐந்து இதழ்களாவன :—

> அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
> ஐந்து சால்பூன்றிய தூண்.

இந்த அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து இதழ்களையும் தனித்தனியே ஐந்து அதிகாரங்களில் விளக்குகிறார். அவற்றிலுள்ள ஒவ்வொரு குறட்பாவை மட்டும் நோக்கி, ஒவ்வொரு இதழின் வாசனையையும் நுகர்வோம்.

## அன்பு

பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார் கூற்றிற்கிணங்க வள்ளுவரின் கடவுளுடைய ஒரே ஆயுதம் அன்பேயாகும். ஆகவே, அக் கடவுளின் அடியவராகிய சான்றோரின் ஆயுதமும் அதுவாகத்தானே இருக்க முடியும்? ஆகவேதான் சான்றோராகிய கனியைத் தோற்றுவிக்கும் பூவாகிய சால்பின் முதல் இதழாக அன்பு விளங்குகிறது. வள்ளுவர் கூறும் அன்பு எப்படிப்பட்டது?

> அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
> என்பு முரியர் பிறர்க்கு.

தன்னையே மற்றவர்களுக்காகக் கொடுக்கும் அன்பே சால்பாகிய பூவின் முதல் இதழ். சால்பாகிய பாரத்தைத் தாங்கும் முதல் தூண். அடுத்தவர்களுக்காக இரத்தத்தைக் கொடுக்கலாம். இரத்தத்

தைக் கொடுப்பதால் உயிர்போவதில்லை. உறுப்பும் குறைவதில்லை. தசையையும் கொடுக்கலாம். ஆனால் எலும்பைக் கொடுப்பது எவ்வாறு? உறுப்புக் குறை நேராமல் எந்த ஒரு எலும்பையும் கொடுக்க முடியாது. ஆகவே எலும்பைக் கொடுப்பதென்பது தன்னையே கொடுப்பதாகும். தன்னுயிரைத் தானே கொடுப்பதாகும். இவ்வாறு மற்றவர் வாழ, மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, தன்னைக் கொடுக்கும் அன்பே சால்பின் முதல் இதழ். இனி இரண்டாம் இதழை நோக்குவோம்.

## நாண்

பெண்களின் நாணம் வேறு. தான் செய்த தீமைக்காக வருந்தி நாணமடைதல் வேறு. இரண்டாவதுள்ளதே வள்ளுவர் சுட்டும் நாண். தான் செய்த தீமையைத் தீமை என்று தெரிந்து கொள்ளுவது அரிது. தீமை என்று தெரிந்தாலும் அதைத் தவறு என ஏற்றுக் கொள்வது அதனினும் அரிது. தவறு என ஏற்றுக் கொண்டாலும் அதற்குச் சாக்குப் போக்குக்கூறுது. தீமைக்காக வருந்துதலாகிய நாணமடைதல் அரிதினும் அரிது. இந்த அரிதினும் அரிய செயலாகிய நாணையுடைய குணமே சால்பு. அதிலும் தன்பழிக்கு மட்டும் நாணுது, தான் செய்யாத, மற்றவர்கள் செய்த, பிறர் பழிக்கும் நாணுதலே நாணத்தின் உச்சநிலை, நாணுக்கு உறைபதி என்பது வள்ளுவர் வாக்கு. அடுத்தவர் பழிகண்டு குறைகூறுது, அவர்களுக்காகவும் வருந்தி நாணுதலே சிறப்பு:

> *பிறர் பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு*
> *உறைபதி என்னும் உலகு.*

ஆகவே மற்றவர்களுக்காகத் தன்னையே கொடுப்பதாகிய அன்பு சால்பாகிய மலரின் முதல்

இதழ். மற்றவர் பழிக்காகவும் தான் நாணும் நாணமே, சால்பாகிய மலரின் இரண்டாம் இதழ்.

## ஒப்புரவு

மக்கள் யாவரும் கடவுளின் பிள்ளைகளே என்ற ஒப்பான உறவு நிலையை அறிந்து, தன் மீது தான் அன்பு கொள்வதுபோல், மற்றவர் மீதும் அன்பு கொண்டு, அவர்களுக்கும் நன்மை செய்து நன்மை செய்வதால், பதிலுக்குத் தீமை வந்தாலும், அதையும் மனமுவந்து ஏற்றுக்கொள்ளலே ஒப்புரவு.

> ஒப்புரவினால் வருங் கேடெனின் அஃதொருவன்
> விற்றுக்கோள் தக்க துடைத்து

தீமை செய்து துன்பமடைவதைவிட, நன்மை செய்து பாடனுபவிப்பதே மேல். மற்றவர்களுக்கு நன்மை செய்தலாகிய ஒப்புரவின் மூலம் தீமை வருமானால் அத்தீமை மிகவும் விலைமதிப்புள்ளது. அத் தீமை, சிறந்த ஒருவன் தன்னை விற்றுவது பெற்றுக் கொள்ளும் சிறப்புடையது. ஆகவே மற்றவர்களைச் சமமாகக் கருதி, மற்றவர்களுக்கு நன்மை செய்து, துன்புறுதலாகிய ஒப்புரவென்னும் இதழே சால்பாகிய மலரின் மூன்றும் இதழ்.

## கண்ணோட்டம்.

கண்ணோட்டம் என்பது தன்னிடம் நன்மையைப் பெற்றுப் பின்னர் அதை மறந்த நிலையில் தன்னைத் துன்புறுத்துபவர்கள் மீதும் இரக்கம் கொண்டு, அதைப் பொறுத்துக்கொள்ளல் ஆகும்.

> ஒறுத்தாற்றும் பண்பினார்கண்ணும் கண்ணோடிப்
> பொறுத்தாற்றும் பண்பே தலை.

இவ்வாறு கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பே மன்னித்தல். இந்த மன்னித்தல் குண முடையோர், தன்னைக் கொல்லும் நஞ்சினையும் மற்றவர்களின் நன்மைக்காக மனமுவந்து ஏற்றுக் கொள்ளத் தயங்கார். மற்றவர்களின் உயர்வுக் காகத் தம்மை அழித்துக் கொள்ளத் தயங்கார்.

> பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்.

இவ்வாறு மற்றவர்களுக்காகத் துன்பத்தை ஏற்றுக் கொள்ளத்தயங்காத் தன்மையே நாகரிகம். இந்த நாகரிகமே மன்னித்தலாகிய கண்ணோட்டம். இதுவே சால்பாகிய பூவின் நான்காம் இதழ்.

## வாய்மை.

அகத்து உணரும் மெய்யைப் புறத்து எடுத்துக் கூறுதல், வாயினால் கூறுதல், வாய்மை. இவ் வாய்மையே சான்றோர் சால்பலைகளைப் பரப்பப் பயன்படுவது, வாய்மை இன்றேல் சால்பலைகள் பரவுவது, வெளிப்படுவது இல்லை. ஒளியுடன் கூடியதே விளக்கு. ஒளியில்லாதது விளக்கு ஆகாது. ஒரு விளக்கு, தான் பெற்ற ஒளியை மற்ற விளக்குகளுக்குக் கொடுத்த பின்னரும், தன் ஒளி குன்றாமல் இருப்பது போலவும், மற்ற விளக்கு களுக்கு ஒளியைக் கொடுத்து அவைகளையும் ஒளிரச் செய்வதைப் போன்றும், சான்றோர் தமது அகத்து ஒளியை மற்றவர்களுக்குக் கொடுத்து, மற் றவர்களையும் ஒளிரச் செய்ய வேண்டும். இதற்குக் கருவியாய் இருப்பதே வாய்மை. வாய்மையில், இரு விளக்குகள் இணைவதைப் போன்று இரு உள் ளங்கள் இணைகின்றன. ஒன்றின் ஒளி மற்றதற்குப் பரவுகிறது. இரண்டும் ஒளி வீசுகின்றன.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

ஆகவே பொய்யாமையாகிய இதழ் சால்பாகிய பூவின் ஐந்தாம் இதழ் ஆகும். பொய்யாமையாகிய வாய்மையிலேயே மகரந்தச் சேர்க்கை நடைபெறுகிறது. கனி உருவாக ஏதுவாகிறது. கனியாகிய சான்றோன், சால்பாகிய பூவினின்றும் தோன்றுவதற்குக் காரணமாய் வாய்மை விளங்குவதால் தான் வள்ளுவர்,

யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

என தம் சான்றினைக் கூறுகின்றார்.

### சால்பின் பயன்

இதுகாறும் சால்பாகிய பூவின் ஐந்து இதழ்களையும் நோக்கினோம். இப்போது சால்பின் பயனை நோக்குவோம். சால்பின் பயன், நாம் பார்த்த ஐந்து இதழ்களின் தொகுப்பே என்பதில் ஐயமில்லை. தொகுப்பு யாது? தனக்குத் துன்பம் செய்தவர்களிடத்தும் அன்பு கூர்ந்து நன்மையே செய்தல்.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

இன்னா செய்தவர்க்கும் இனியவே செய்தலும், இன்னா செய்தவர்களைத் தண்டிக்கும் முறையும் புதுமையானவை.

இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்

இவ்வாறு தீமை செய்தவர்க்கும் நன்மை செய்தலே சால்பின் பண்பு. அடுத்து, ஒருவனிடம்

சால்பு உள்ளதா? என்பதைக் காணும் உரை கல் ஒன்றையும் வள்ளுவர் நமக்குக் காட்டுகிறார். அது என்ன?

தன்னைவிட எளிமையானவனிடமும் பணிந்து செல்லுதல். அதாவது தன்னுடைய வீரத்தைக் காட்டாது யாவரிடமும் தாழ்மையோடு நடந்து கொள்ளுதல். இந்தப் பண்பு எவனிடம் உள்ளதோ அவனிடம் சால்பு உள்ளது.

சால்பிற்குக் கட்டளையாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

இந்தத் தாழ்மை சான்றோருக்கு வேண்டும் என்பது வள்ளுவர் கொள்கை.

இதுகாறும் நாம் ஆராய்ந்தவைகளிலிருந்து மற்றவர் வெற்றி எனக் கொள்வதைச் சான்றோர் தோல்வி எனக் கொள்கின்றனர். மற்றவர் தோல்வி எனக் கருதுபவற்றை வெற்றி எனக் கொள்கின்றனர் எனலாம். உலகம் கருதும் வெற்றி தோல்விக்கும், சான்றோரின் வெற்றி தோல்விக்கும் வேற்றுமையுண்டு என்றாகிறது.

இப்பொழுது சான்றோரைப் பற்றிய மொத்தக் கருத்துக்களைத் தொகுத்து நோக்கி இக்கொள்கை எச்சமயத்தின் அடிப்படையாய் விளங்குகிற தெனக் கண்டு, மறை நூல் எனப் போற்றப்படும் திருக்குறள் எச்சமயத்தைச் சார்ந்தது என்பதை நோக்குவோம்.

சான்றோர்

1. உள்ளம் மாறிப் பிறந்த இரண்டாம் பிறப்பையுடையவர்கள்.

2. ஐந்த வித்தாறுற்றலுக்குச் சான்றாக விளங்கிச் சால்பலைகளைப் பரப்புபவர்கள்.

3. உலகிற்கு உப்பாக விளங்குபவர்கள்.

4. உலகிற்கு ஒளியாக விளங்கி நற்செய்தி கூறி ஒளியைப் பரப்புபவர்கள்.

5. தம்மையே மற்றவர்களுக்காகக் கொடுக்கத் தக்க அன்பையுடையவர்கள்.

6. தன் பழிக்காக மட்டுமன்று, அடுத்தவர்களுடைய பழிக்காகவும் நாணும் நாணமுடையவர்கள்.

7. மற்றவர்களுக்காகச் செய்யும் ஒப்புரவினையுடையவர்கள் அதில் வரும் தீமையையும் மனமுவந்து ஏற்றுக்கொள்ளுபவர்கள்.

8. மற்றவர்களுக்கு மன்னிப்பளிக்க வேண்டியதினிமித்தம் தனக்கு நஞ்சு கொடுக்கப்படினும் அதையும் மனமுவந்து ஏற்றுக்கொள்ளும் சிறந்த நாகரிகத்தையுடையவர்கள்.

9. தாம் பெற்ற ஒளியை மற்றவர்களுக்கு வழங்கும் சிறந்த விளக்காக விளங்குபவர்கள்.

10. இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்பவர்கள். எல்லாரிடமும் தாழ்மையாய் நடந்துகொள்ளுபவர்கள். தீமையையும் நன்மையினால் வெல்லுபவர்கள்.

11. மற்றவர் தோல்வி எனக் கருதுபவைகளை இவர்கள் வெற்றியாகக் கருதுகிறார்கள். வெற்றி தோல்வியைப் பற்றிய இவர்கள் கொள்கை மற்றவர்களுடைய கொள்கையினின்றும் முற்றிலும் மாறுபட்டதாகும்.

12. இவர்கள் வணங்கும் கடவுளாகிய ஐந்தவித்தான், கொலைக்கருவி எதனையும் தம் கையில் கொள்ளாத, ஆனால் கொடிய புலியையும் ஆட்டுக்

குட்டியாக மாற்றவல்ல அருளறமாகிய அன்பு ஒன்றையே தமக்கு ஆயுதமாகக்கொண்டு, மற்றெவ்வுயிரிடத்தும் செந்தண்மை பூண்டு, பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி, மக்களுக்கு நீடுவாழ் வளிப்பவர்.

## இச் சான்றோர்யார் ?

சங்ககாலச் சான்றோர்க்கு மாறுபட்டவர்களே ஆரிய அந்தணர் என்பதை முன்பு தெளிவாக ஆராய்ந்தோம். ஆகவே, சான்றோர் ஆரிய அந்தணர்களின் வைதீகக் கொள்கைக்கு மாறானவர்கள் என்பது மறுக்க முடியாத கருத்து. ஆரிய வைதீகக் கொள்கையின் பெருக்கமே தற்கால இந்து சமயம் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை.

ஆரிய அந்தணர்களின் வைதீகக்கொள்கைக்கு மாறான சங்ககாலத்துச் சமயங்கள் எவை ?

நமக்குக் கிடைத்துள்ள சங்ககால இலக்கியங்களிலிருந்து, வைதீகக் கொள்கைக்கு மாறான கருத்துக்களை நாம் பேரளவில் தெரிந்துகொள்ள வாய்ப்பில்லை எனலாம். பிற்காலத்தில் ஆரியக்கொள்கை செல்வாக்குப் பெற்றகாலை மாற்றுக் கொள்கைகள் அழிக்கப்பட்டன. அவ்வழிவுக்குப் பின்னர் எஞ்சியவை மிகமிகச் சொற்பமே. அவையும் நேரடியாகத் தெளிவாகக் கருத்தை விளக்கக் கூடியவைகளாக அமையாக் காரணத்தாலேயே அழிக்கப் படாமல் விடப்பட்டன.

ஆகவே ஆரிய அந்தணர்களுக்கு எதிரான கொள்கைகளை வரலாற்று வாயிலாகக் காண்போம்.

சங்ககாலம் என்பது கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகள் எனக் கொள்ளப்படுகின்றது. இக்காலத்தில் நம் தமிழகத்தில் இருந்த சமயங்களாகக் கருதப்

படுபவை, வைதீக சமயம், சமண சமயம், பௌத்த சமயம் ஆகும்.

இம் மூன்று சமயங்களுள், சான்றோர் கொள்கை வைதீகக் கொள்கைக்கு மாறானது என்றால், மற்ற இரண்டு சமயங்களில், எத்துடன் இணைந்தது? என்பது நோக்கத்தக்கது.

சான்றோர் கொள்கையைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே குறிப்புகள் மட்டுமே காணப்படினும், அதன் விளக்கமாக விளங்கும் முழு நூலாக இருப்பது திருக்குறளே எனக் கொள்ள நேரிடுகிறது. அவ்வாறு கொள்ளும்பொழுது திருக்குறளாகிய சான்றோர் கொள்கை, சமண பௌத்தக் கொள்கையுடன் இணைந்துள்ளதா? என நோக்க வேண்டுவது இன்றியமையாததாகிறது.

திருக்குறள் தெளிவான கடவுள் கொள்கையை யுடையது என்பது எவரும் மறுக்க முடியாத உண்மை. ஆனால், சமண பௌத்த சமயங்களோ கடவுள் கருத்தை ஏற்றுக்கொள்ளாதவை.

மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி, பொறிவாயில் ஐந்தவித்து, அகல்விசும்புளார் கோமான் சான்றாக, செயற்கரிய செயலாகிய ஆற்றலை வெளிக்காட்டி, இறந்தாரினும் மாறாக விளங்கும் ஐந்தவித்தானாகிய கடவுளை, பௌத்த சமண சமயங்களில் எவ்வாறு காண முடியும்?

அவனைக் குறித்துப்

> பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவனடி சேரா தார்.

என்ற பாடலில், 'இறைவனடி சேராதார் நீந்தார்' என அறுதியிட்டு உறுதியாக எவ்வாறு கூற

முடியும்? ஆகவே சான்றோர் கொள்கையைச் சமண பௌத்த சமயங்களிலும் காண முடிவதில்லை.

அவரவர் நல்வினை தீவினைப் பயனை அவரவர் அனுபவிக்க வேண்டுமேயல்லாது, மற்றவர் தீர்க்க முடியாது என்பதே பௌத்த சமணக் கொள்கை. ஆனால், வள்ளுவரோ அடுத்தவர் பொருட்டு வாழ வேண்டுமேயல்லாது தன் பொருட்டல்ல எனக் கூறுவதுடன், மற்றவர் பொருட்டு எவ்விதத் துன்பத்தையும் அடையப் பின்வாங்கக் கூடாது என்பதுடன், தனதுயிரையே கொடுக்கவும் முன் வரவேண்டும் எனவும் கூறுகின்றார்.

முந்தைய பிறவியில் செய்த தீவினையாலேயே இந்தப் பிறவியில் துன்பம் வருகிறதென்ற கொள்கையும், பிறர் பொருட்டுத் துன்பம் வருவதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கொள்கையும், ஒன்றுக்கொன்று முரண்பாடுடையன வன்றோ?

பிறர் பொருட்டுத் துன்பம் அடைந்த ஒருவனை, பிந்திய கொள்கை போற்றும்; முந்தைய கொள்கையோ தூற்றும். எவ்வாறு?

இவன் துன்பமடையக் காரணம் போன பிறவியில் இவன் செய்த தீவினைப் பயனே, எனத் தூற்றுமேயல்லாது வேறு என்ன காரணம் கூறும்? ஆகவே இரண்டு சமயங்கள் வன்முறை மறுப்புக் கொள்கையில் ஒன்றுபட்டவையாக, மேலெழுந்த வாரியாகக் காணப்படினும் அடிப்படையில் முற்றிலும் முரண்பட்டவையாகும்.

'அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கு'. அடுத்தவர்களுக்காக என்பையும் கொடுக்கக் கூறும் சமயம் எது? எத்தகைய துன்பத்தையும் ஏற்றுச் சால்பலே

களைப் பரப்பும்படியாகச் சான்று கூறும் சமயம் எது? சமண பௌத்த சமயங்களில் அவரவர் வினையை அவரவர் அனுபவிப்பர். ஆகவே, ஒருவருக்காக அடுத்தவர் துன்பமடைந்தாலும் யாதொரு பயனும் இல்லையல்லவா?

ஆகவே, சான்றோர் கொள்கை, வைதீக, சமண பௌத்த சமயங்களோடு இணைந்ததன்று என்பது தெளிவாகின்றது. அப்படியானால் சான்றோர் கொள்கை எச்சமயத்தைச் சார்ந்தது?

சங்ககாலத்தில் இங்கு இருந்தவை, வைதீக, பௌத்த, சமண சமயங்களைத் தவிர இன்று உலகெங்கும் பரவியிருக்கும் கிறித்தவ சமயமும் ஆகும்.

ஆகவே, இனி கிறித்தவ சமயத்தையும் நோக்குவோம்.

இன்று நாம் காணும் கிறித்தவத்திற்கும், சங்க காலத்தில் நம் தமிழகத்தில் நிலவிய கிறித்தவத்திற்கும், அடிப்படைக் கொள்கையில் வேற்றுமை இல்லாதிருப்பினும், மேலெழுந்தவாரியான சில வேற்றுமை இருப்பதற்கு பல காரணங்கள் உள. தற்காலக் கிறித்தவக் கண் கொண்டு சங்க காலக் கிறித்தவத்தை நோக்கினால் சில முரண்பாடுகள் தோற்றமளிப்பது உறுதி. ஆகவே சங்ககாலக் கிறித்தவத்தை நாம் சரியானபடி அறிந்துகொள்ளுவதற்கு வாய்ப்பாகக் கிறித்தவத்தின் தொடக்ககால வரலாற்றுச் சுருக்கத்தை நோக்குவது இன்றியமையாததாகும்.

இயேசு பெருமானே கிறித்தவத்தின் அடிப் படைக் கல்லாய் விளங்குபவர். அவர் ஒரு வரலாற்று மனிதரே.

கடவுள், தகுந்த காலத்தில் மனிதருக்கு ஆன்மீக விடுதலையைக் கொடுக்கும்படியாக ஐம்புலனையுடைய மனிதராக வந்தார் என்பதும், அம் மனிதரே இயேசு பெருமான் என்பதும் கிறித்த வர்களின் நம்பிக்கை. கிறித்தவத்தின் வரலாற்றைக் கூறும் நூல் கிறித்தவத் திருமறையாகும். இப்போது விவிலியம் என அழைக்கப்படும் கிறித்தவத் திருமறையின் வரலாற்றையும், வள்ளுவம் என அழைக்கப்படும் தமிழ்மறையின் வரலாற்றையும் முறையே நோக்குவோம்.

# 3. திருமறையும் தமிழ்மறையும்

## கிறித்தவம்

இயேசு பெருமான் இவ்வுலகில் வாழ்ந்தகாலை அவருடைய அருள்மொழியைக் கேட்டு மக்கள் அவரைப் பின்பற்றினர். அவர்களுள் பன்னிருவரைப் பிரித்தெடுத்த இயேசு பெருமான் உலகம் உய்வதற்கென்று தாம் செய்யப்போகும் தியாகத்தை அவர்களுக்கு அறிவித்ததுடன், அந் நற்செய்திக்கு அவர்கள் சான்றுகளாக விளங்கும் படியாக, அவர்களை ஆயத்தம் செய்தார். முதலில் சீடர்களுக்கு இது முழுமையாக விளங்கவில்லை.

இயேசு பெருமான் சிலுவையாகிய பொறிவாயில், தம் ஐம்புலனைப் பலியாகக் கொடுத்தலாகிய ஐந்து அவித்தார். சிலுவை மரணத்தைக் கண்ட அவருடைய சீடர்களுக்கு அது ஒரு பெரும் தோல்வியாகக் காணபட்டமையால் சோர்வடைந்தனர். ஆனால், மூன்றும் நாளில், தோல்வி வெற்றியாக மாறியதை நேரடியாகக் கண்டனர். இயேசு பெருமான் தாம்

முன்னர் கூறியபடியே, உயிருடன் எழுந்து அவர்களுக்கு முன் தோன்றி, அவர்களைத் தேற்றினார். சீடர்கள் புத்துணர்வும் புது வேகமும் பெற்றனர். தாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் சான்ருக அறிவிக்கும்படி அனுப்பப்பட்டவர்கள் என்ற பொருளில் பன்னிருவரும் 'அப்போஸ்தலர்' என அழைக்கப்பட்டனர். இயேசு பெருமான், அவருடைய அடியவர் யாவருக்கும் மொத்தமாக ஒரு பெயரையும், ஒரு கட்டளையையும் கொடுத்தார்.

## சாட்சிகள்

அவர் கொடுத்த கட்டளை :—" உலகெங்கும் போய்ப் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியை அறிவியுங்கள் " (மாற்கு 16: 15)

அவர் கொடுத்த புதிய பெயர் : " பரிசுத்த ஆவி உங்கள்மேல் வரும்போது அவரது வல்லமையைப் பெற்று எருசலேமிலும், யூதேயா, சமாரியா முழுவதிலும் மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள் " என்ருர்.

(அப். 1: 8)

இயேசு பெருமான் மக்கள் ஆன்மீக விடுதலையை அடையும்படி மக்களுக்குப் புதிய வழி ஒன்றை வகுத்துக் கொடுத்தார். அத்துடன் 'நானே வழி, உண்மை, வாழ்வு' எனக் கூறி மெய்ப்பொருளை நோக்கிச் செல்லும் நல்வாழ்வுக்கு வழியானார். இயேசு பெருமானுடன் இருந்து இவற்றைக் கண்ட, கேட்ட, அவருடைய அடியவர்கள், இவற்றிற்கெல்லாம் சாட்சி கூறினர்கள். அவருடைய அடியவர்களுள் ஒருவராகிய அருளப்பர் கூறுவதாவது,

"ஆதிமுதல் இருந்ததை,
நாங்கள் கேட்டதை
கண்ணால் பார்த்ததை
உங்களுக்கு அறிவிக்கிறோம்.
அதை நாங்கள் நோக்கினோம்;
கையால் தொட்டுணர்ந்தோம்;
நாங்கள் அறிவிப்பது
உயிரின் வார்த்தையைப் பற்றியது;
அதனை நாங்கள் கண்டோம்,
அதற்குச் சான்று பகர்கின்றோம்."

—I அருளப். 1:1-2

சான்று பகரும் அவர்கள், சாட்சிகள் எனத் தங்களை அழைத்துக்கொண்டார்கள். இயேசு பெருமானும் அவர்களுக்கு அப் பெயரையே வழங்கினார். இதுவே இயேசு பெருமானின் கடைசிச் சொல்லாகத் திருமறையாகிய விவிலியத்தில் காணப்படுகிறது.

மாணவர் தங்களைச் சாட்சிகள் என அழைத்துக் கொண்டமை,

1. அப். 2 : 32 இதற்கு நாங்கள் எல்லாரும் சாட்சிகள்.
2. அப். 3 : 15 இதற்கு நாங்கள் சாட்சிகள்.
3. அப். 5 : 32 இதற்கு நாங்கள் சாட்சிகள்.

அவர்கள் கூறிய செய்தி 'சாட்சியம்' ஆயிற்று.

"இன்னும் பல ஆதாரங்களைக் காட்டி, சாட்சியம் கூறி.........அவர்களுக்கு அறிவுறுத்தினார்கள்."

[அப். 4:33]

சாட்சிகள், சான்று பகரும் இவ்வழி, மக்களால் தொடக்கக் காலத்தில் "புதிய நெறி" என எண்ணப்பட்டது.

"இப் புதிய நெறியைச் சார்ந்த ஆண், பெண் யாராயிருந்தாலும் அவர்களைக் கைது செய்து..."
[அப். 9 : 2]

இது 'புது வாழ்வு' எனவும் போதிக்கப்பட்டது.

அவர்களை வெளியே அழைத்து வந்து, "நீங்கள் போய் இப் புது வாழ்வைப் பற்றிய அனைத்தையும் கோவிலில் மக்களுக்குத் தயங்காமல் சொல்லுங்கள் என்றூர்"
[அப். 5:20]

சான்று கூறும்படியாக ஆயத்தம் செய்யப்பட்ட மாணவர்கள் அல்லது சீடர்கள் இயேசு பெருமான் உயிர்த்தெழுந்த பின்னரும் மற்றவர்களால் சீடர்கள் என்றே அழைக்கப்பட்டனர். அவர்களுடன் சாட்சி கூறும்படியாகச் சேர்ந்துகொண்டவர்களும் சீடர்கள் என்ற பெயராலேயே அழைக்கப்பட்டனர்.

"பவுல் எருசலேமுக்குச் சென்றபின் சீடர்களுடன் சேர்ந்துகொள்ள முயன்ருர். ஆனால் அவரும் ஒரு சீடர் என்பதை நம்பாமல், அனைவரும் அவரைக் கண்டு அஞ்சினர்." [அப். 9 : 26]

இயேசு பெருமானின் சீடர்கள் எருசலேமிலிருந்து உலகின் பல பாகங்களுக்கும் சாட்சியம் கூறும்படி சாட்சியங்களாகச் சென்றனர். தாங்கள் சென்ற நாடுகளிலெல்லாம் இந்நற்செய்தியைச் சாட்சியாகக் கூறி அறிவித்துச் சாட்சிகளாக விளங்கினர். அவர்கள் கூறியவற்றை ஏற்றுக்கொண்டவர்கள் சாட்சிகளின் கூட்டத்தில் சேர்ந்தனர். இவ்வாறு சாட்சிகளின் கூட்டம் உலகெங்கும் ஏற்படலாயிற்று.

## கிறித்தவத் திருமறை

இங்ஙனம் இயேசு பெருமானின் சீடர்கள் நற்செய்தியை நேரடியாக வாயினுல் கூறியதுடன்,

தூரமான இடங்களிலுள்ளவர்களுக்குத் தாங்கள் இயேசு பெருமானுடன் வாழ்ந்தகாலை கண்டவைகளையும், கேட்டவைகளையும், உணர்ந்தவைகளையும் தொகுத்து எழுதி அனுப்பினார்கள். அவைகளும் ஆங்காங்கே பரவி எழுத்துச் சாட்சியங்களாக விளங்கின.

இவ்வாறு எழுதப்பட்ட திருமுகங்களும், திருக்கூட்ட வரலாறுகளும் சாட்சிகளுக்குப் பல வழிகளிலும் பயன்படக் கூடியவைகளாக இருந்தமையால் அவை பேணிக் காக்கப்பட்டன. இவ்வாறு கிடைத்தவைகளின் தொகை அதிகப்படுங்கால் சிறந்தவை சிறப்புக் கவனம் பெற்றன. மற்றவை சிறந்தவையளவு கவனம் பெற வாய்ப்பற்றன. பின்னர் வரவர எல்லாருக்கும் எல்லாக் காலத்திற்கும் பொருந்தக் கூடியவைகளும், இயேசு பெருமானைப் பற்றிய சிறப்பான விளக்கங்கள் கொண்டவைகளும் மட்டுமே போற்றப்பட்டன. மற்றவை தகுந்த கவனம் பெற வாய்ப்பற்றன.

இவ்வாறு நிலைநின்றவை ஆங்காங்கே இருந்த காரணத்தால் அவை யாவற்றையும் யாவரும் அறிந்து கொள்ளும்படியாகத் தொகுக்கப்பட்டன. இங்ஙனம் கால வெள்ளத்தில் நிலைநின்று தொகுக்கப்பட்டவையே புதிய ஏற்பாடு எனப் பெயர்பெறும் 27 பகுதிகளும் ஆகும்.

இயேசு பெருமான் இப்பூவுலகில் பிறப்பதற்கு முன்னர் அவரைப் பற்றி முன்னறிவிப்பாகக் கூறப்பட்டுத் தொகுக்கப்பட்ட பகுதிகள் பழைய ஏற்பாடெனவும் அவர் பிறப்பிற்குப் பின்னர், அவரைப் பற்றியவை தொகுக்கப்பட்டுப் புதிய ஏற்பாடெனவும் பெயர்பெற்றன. புதிய வாழ்வாகிய புதிய நெறி, புதிய ஏற்பாடெனப் பெயர் பெற்றது.

ஆகவே, புதிய ஏற்பாட்டின் பகுதிகள், பற்பல நிலையிலிருந்த அடியவர் பற்பல காலங்களில் எழுதியவை. அவை எழுதப்பட்ட காலம் ஒன்று. அவை தொகுக்கப்பட்ட காலம் வேறு.

இன்று நாம் விவிலியமாகிய திருமறை வழியாக இயேசு பெருமானைக் காணும் நோக்கிற்கும், இயேசு பெருமானின் நேரடிச் சீடர் வழியாக அவரை நோக்கியவர் நோக்கிற்கும், உணர்ச்சியிலும், அடிப்படைக் கருத்திலும் வேற்றுமை இல்லாவிடினும், அவர்கள் அடைந்த அனுபவத்திற்கும் நாம் அடையும் அனுபவத்திற்கும் வேற்றுமை இருப்பது இயல்பு. எழுதியவர்கள் தாங்கள் உணர்ந்தவை அத்தனையையும் எழுதினார்கள் என்று சொல்லவும் முடியாது.

> "இயேசு செய்தவை வேறு பல உண்டு. அவற்றை ஒவ்வொன்றாக எழுதினால், எழுத வேண்டிய நூல்களை உலகமே கொள்ளாது என்று கருதுகிறேன்.'
>
> அருளப்பர் 21:25.

என அருளப்பர் தம் நற்செய்தியின் முடிவில் கூறுகிறார்.

ஆகவே இயேசு பெருமானின் நேரடி மாணவர்களுடன் தொடர்பு கொண்டவர்களுக்கும் நமக்கும் வேற்றுமையிருப்பது இயல்பே. இன்று இயேசு பெருமானின் போதனையை நாம் காணும் நோக்கிற்கும் அவர்கள் கண்ட நோக்கிற்கும் வேற்றுமை இருப்பினும் அடிப்படை நிச்சயமாக ஒன்றே. இதுவரை நாம் நோக்கியவை கிறித்தவத் திருமறையின் வரலாற்றுச் சுருக்கம். இத்துடன் தொடர்பு கொண்ட இன்னொரு குறிப்பையும் நாம் காண வேண்டியவர்களாயுள்ளோம்.

அது என்ன?

இயேசு பெருமானின் கட்டளைப்படி சீடர்கள் உலகம் முழுவதும் சென்றனர். நற்செய்தியைக் குறித்துச் சான்று பகர்ந்தனர். அவர்களுடைய சாட்சியைக் கேட்டு உலகின் பல பாகங்களிலும் 'சாட்சிகள்' ஏற்பட்டனர். அந்தந்தப் பாகங்களில் இயேசு பெருமானின் அருள்மொழிகள் அவ்வவ் விடங்களில் வழங்கப்பட்ட மொழிகளில் உருவாகி யிருத்தல் வேண்டும். கூடும். அவை சிறந்தவை களாயிருந்தால் அவ்வவ்விடங்ளில்பாதுகாக்கப் பட்டிருத்தல் இயல்பு.

கிறித்தவத் திருமறை தொகுக்கப்பட்ட காலை, எருசலேமிலும் அதைச் சுற்றியுள்ள பகுதி யாகிய, எபிரேயம், கிரேக்கு ஆகிய மொழிகள் பேசப்பட்ட இடங்கலும் உள்ளவை மட்டுமே தொகுக்கப்பட்டுள்ளன. மற்ற மொழியிலுள்ளவை களைப் பற்றிய நிலை நமக்குத் தெரியவில்லை. மற்ற மொழிகளில் இச்செய்தி இல்லவே இல்லை என்று யாராலும் துணிந்து கூற முடியாது.

இந்'நற்செய்தி' வேறு மொழிகளில் இருந் திருந்தாலும் அவை தொகுத்தவர்களுக்குக் கிடை யாமைக்கும், கிடைத்தாலும் அதை உணர்ந்து கொள்ள முடியாமைக்கும் தகுந்த காரணங்கள் உள.

புதிய ஏற்பாட்டின் பெரும் பகுதிகள் இயேசு பெருமானின் சீடர்கள் பற்பல இடங்களுக்குப் பிரிந்து சென்ற பின்னரே எழுதப்பட்டவை. பிரிந்து செல்லுவதற்கு முன்னர் அவர்கள் 'சாட்சி கள்' என்ற பெயரால் மட்டுமே அழைக்கப்பட்ட னர். அவர்கள் பிரிந்து சென்று ஆங்காங்கே சாட்சிகளின் திருக்கூட்டங்களையே ஏற்படுத்தினர். ஆகவே அவர்களுடைய திருக்கூட்டங்கள் 'சாட்சி கள்' என்று மட்டுமே அழைக்கப்பட்டிருக்க வேண்

டும். ஆனால் சாட்சிகளுக்கு, சில ஆண்டுகளுக்குப் பின்னர் 'சாட்சிகள்' என்ற பெயருக்கு பதிலாகக் 'கிறித்தவர்கள்' என்ற பெயர் வழங்கத் தொடங் கியது. கிறித்தவர் என்னும் பெயர் இவர்கள் தங் கள் கூட்டத்திற்கு "இனி நாம் சாட்சிகள் என்ற பெயருக்குப் பதிலாகக் கிறித்தவர்கள் என்ற பெயரை வைத்துக்கொள்ளுவோம்" என்று தீர் மானித்து வைத்துக் கொண்ட பெயர் அன்று. இவர்களுடைய கூட்டத்தின் ஒரு பகுதியினரால் ஏற்படுத்தப்பட்ட பெயரும் அன்று. 'சாட்சிகள்' கூறும் செய்தியை ஏற்றுக்கொள்ளாத மற்றவர்கள் இவர்களுக்கு வைத்த பெயரே 'கிறித்தவர்கள்'. 'கிறித்தவர்கள்' என்னும் பெயர் மூல மொழியில் 'பைத்தியக்காரர்கள்' என்னும் பொருளையும் கொடுக்கக் கூடிய வாய்ப்பு இருக்கிறதெனக் கூறும் அறிஞர்கள் இருக்கிறார்கள். மற்றவர்கள் இவர் களைப் பகடி செய்வதற்காக வைத்த பெயராக இருந்த போதிலும், கிறித்தவர் என்பது கிறித்து வின் மனிதர் என்னும் சிறப்புப் பொருளையும் கொடுக்கும் காரணத்தால் அப்பெயரை இவர்களும் ஏற்றுக் கொண்டிருக்கலாம். இவ்வாறு மற்றவர் கள் வேறு பெயரால் அழைத்து அது நிலைத்த இடம் சீரியா நாட்டின் தலைநகராகிய அந்தியோ கியா ஆகும்.

அந்தியோகியாவில் தான் முதன் முறையாகச் சீடர்கள் கிறித்தவர்கள் என்ற பெயரைப் பெற்றனர்.

(அப். 11:26)

புதிய ஏற்பாட்டின் பகுதிகள் பல. இயேசுவின் சீடர்களாகிய 'சாட்சி'களுக்கு அவர்கள் பெயர் மாறி 'கிறித்தவர்கள்' என்ற பெயர் வழங்க ஆரம்பித்த பின்னரே எழுதப்பட்டவை. பிறகாலத்தில் அவை களைத் தொகுத்தவர்களும் 'கிறித்தவர்'களைப்

பற்றிக் கூறியிருப்பவைகளையே தொகுத்திருக்கவும் கூடும்.

இவர்களுடன் தொடர்பில்லா இடங்களில் சீடர்கள் 'சாட்சிகள்' என்ற பெயராலேயே அழைக்கப்பட்டிருக்கவும் கூடும். அப்படிப்பட்ட இடங்களிலுள்ள புத்தகங்கள் இவைகளுடன் இணைக்கப்படா விட்டாலும் திருமறையுடன் மூலக்கருத்தில் ஒன்ருய் விளங்குவது இயல்பே. அத்துடன் அவை சிறந்தவையாயிருக்குமிடத்து அங்குள்ள மக்களால் போற்றிப் பாதுகாக்கவும் பட்டிருக்கும்.

இது வரை நாம் கண்டவைகளிலிருந்து, திருமறையின் புதிய ஏற்பாட்டுக் கருத்துக்கள் கொண்ட வேறு நூல்கள் மற்ற மொழிகளில் வழங்கவும் வாய்ப்பு உண்டு. அவை திருமறையுடன் இணைக்கப்படாக் காரணத்தால், திருமறைக்கு மாருனவை என நாம் எண்ண முடியாது என்பது தெளிவாகிறது.

இது காறும் நாம் நோக்கிய கிறித்தவத் திருமறை வரலாற்றுச் சுருக்கத்தின் பின்னணியில் தமிழ் மறை எனப்பெயர் பெறும் திருக்குறளின் வரலாற்றை நோக்குவோம்.

## தமிழ் மறை

'தமிழ் மறை' என்னும் சொல் தமிழர் வேதமாகக் கருதப்படும் திருக்குறளைக் குறிக்கிறது. திருக்குறளில் 'திரு' என்னும் அடை மொழியை நீக்கி விட்டால் 'குறள்' என்பது மட்டுமே எஞ்சி நிற்கும். 'குறள்' என்ருல் குறுகியது எனபத்து பொருள். இந்நூல் முழுவதும் குறுகிய அடிகளையுடைய வெண்பா என்னும் யாப்பால் இயற்றப்பட்டுள்ள காரணத்தால் இது இப்பெயரைப் பெற்றது.

இந்நூலின் பெயர் திருக்குறள் தான் என்பதற்கும், இதன் ஆசிரியர் பெயர் திருவள்ளுவர் தான் என்பதற்கும் நூலில் எவ்வித ஆதாரமும் இல்லை. ஆனால் இந்நூலைச் சிறப்பித்துப் பாடியுள்ள 'திருவள்ளுவமாலை' யில் இதன் ஆசிரியர் திருவள்ளுவர் என்பதும் நூலின் பெயர் திருக்குறள் என்பதும் சுட்டப்படுகிறது.

திருவள்ளுவமாலை முழுவதும் ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல என்பது ஆராய்ச்சியாளர் சிலருடைய முடிபு. திருவள்ளுவ மாலை, பிற்காலப் புலவர் ஒருவரால், பலருடைய பெயரால் பாடப்பட்டிருக்கலாம் எனக்கருதப்படுகிறது. அக்கொள்கைப் படி கொண்டால், திருக்குறள், திருவள்ளுவர் என்னும் பெயர்கள், பிற்காலப் புலவர் ஒருவரால் கொடுக்கப்பட்டவை யென்ற முடிவு தோன்றும். அவ்வாறு முடிவு கொள்ளப்படுமானால் தமிழ்மறையாம் திருக்குறளை இயற்றியவர் யார் என்பதும் இதன் சரியான பெயர் என்னவென்பதும் விடை காணமுடியாக் கேள்வியாக முடியும்.

திருக்குறள், கடைச்சங்ககால நூல் என்பது அறிஞர் ஏற்றுக்கொண்ட உண்மை. கடைச்சங்க நூல்களாகக் கூறப்படும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய முப்பத்தாறு நூலகளுள் திருக்குறள் மட்டும் தனித்து நின்று தனி நெறி கூறுவதன் காரணம் என்ன? குறிப்பிட்ட இறைவனையும், நெறியையும், பின்பற்றும் மக்களையும் சுட்டாத வேதம் உலகில் உண்டா?

இது வேதம் என அழைக்கப்படக் காரணம் என்ன?

இது சுட்டும் இறைவன் யார்?

இது கூறும் சமய நெறி என்ன?

இதைப் பின்பற்றும் மக்கள் யார்?

வள்ளுவர் இதை எழுதியன் நோக்கம் என்ன?

இங்குள்ள சமயங்களைச் சாராத பொது நெறியைக் கூறும் பொது வேதம் என இது திருவள்ளுவமாலையில் அழைக்கப்படக் காரணம் என்ன?

இந்நூலின் பெயர்களாகத் திருவள்ளுவமாலை கூறுவன:

முப்பானூல்

உத்தரவேதம்

தெய்வ நூல்

திருவள்ளுவர்

பொய்யாமொழி

வாயுறை வாழ்த்து

தமிழ்மறை

பொது மறை

இப் பெயர்களுள் கடவுளுடன் சம்பந்தப்பட்ட வேதம், மறை, தெய்வ நூல் என்னும் சொற்கள் கூறப்பட்டுள்ளன. ஆனால், தமிழகத்திலுள்ள சமயங்கள் எதையும் இது உணர்த்தவில்லை.

'மறை' - 'வேதம்' கடவுளைக் குறிப்பவையே.

திருக்குறளிலும் கடவுள் வணக்கம் உண்டு.

திருக்குறள் எழுதப்பட்ட மொழி சங்கத் தமிழ். ஆனால், சங்ககாலத் தமிழகக் கடவுள் எதையும் குறிப்பிடாத கடவுள் வணக்கம்.

தாம் அறிந்த சங்ககாலத் தமிழகச் சமயங்கள் எதையும் உணர்த்தாத சமய நெறி.

சங்ககாலத் தமிழக வேதம் எதனுடனும் தொடர்பில்லாத மறை அல்லது வேதம்.

அப்படியானல் இதன் ஆசிரியர் ஒரு புதிய மதத்தை ஏற்படுத்தியவரா ? அம்மதத்தின் பெயர் என்ன ? அதைப் பின்பற்றியவர் பெயர் என்ன ?

இவர் புதிய சமயத்தை ஏற்படுத்தியவர் என்ப தற்கான சான்று எதுவும் இல்லை. அப்படியானல் புதியதொரு சமயத்தைப் பின்பற்றியவரா ?

இவர் கூறும் கருத்துக்களிலிருந்து இவர் தமிழ கத்திலிருந்த சமயங்களிலிருந்து மாறுபட்ட ஒரு புதிய சமயத்தைப் பின்பற்றியவர் என்றே கருத வேண்டியுள்ளது.

அச் சமயம் எப்படிப்பட்டதாக இருந்திருத்தல் கூடும் ?

இங்கிருந்த சமயங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவானதென்பது 'பொதுமறை' என்ற அதன் பெயராலேயே விளங்குகிறது.

'பொது' என்ற பெயர் ஒன்றிற்கு எப்போது ஏற்படுகிறது ?

தங்களுக்குள் முரண்பாடு கொண்ட அறுவர் ஓரிடத்தே குழுமியிருக்கிருர்கள் என வைத்துக் கொள்வோம். ஒவ்வொருவரும் தாம் சொல்லுவதே சரியானது என வாதித்துக்கொண்டிருக்கின்றனர். அப்போது புதிதாக ஒருவர் வருகிருர். அவருக்கு அவர்கள் என்ன பெயர் கொடுப்பார்கள் ? அவர் அவ்வறுவரில் யாரையும் சேர்ந்தவர் அல்லர். ஆகவே யாவருக்கும் பொதுவானவர் என்றே குறிப்

பிடுவார்கள். ஏன் இந்த ஆறு பேரில் யாருடனும் இணைந்தவர் அல்லர்? அவர் பொதுவானவர். அவர் ஏழாம் ஆளாக அங்கே இருந்தபோதிலும் அவர் மற்ற அறுவரையும் சமமாகக் கருதும் காரணத்தால் அவர் பொதுவானவர் ஆகிறார்.

அவ்வாறே மறை-வேதம் என அழைக்கப்படும் திருக்குறளும் மற்ற அறுவகைச் சமயங்களுக்கும் மாறுபட்ட கருத்தைத் தெரிவித்தபோதிலும், ஏழாவதாகக் கருதப்படாமல் எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் பொதுமறை எனக் கருதப்படுகிறது.

ஒன்றே பொருள்எனின், வேறுஎன்ப; வேறுஎனின்,
அன்று என்ப; ஆறு சமயத்தார்;—நன்று என
எப்பா லவரும் இயைபவே; வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

—திருவள்ளுவமாலை-9.

ஆகவே இப் பொதுமறை தமிழகத்திற்குப் புதியது என்பது விளங்குகிறது. இது எப்படிப் பட்டது? பொது, புது – சொல்லாராய்ச்சி.

வள்ளுவர் நூலை நோக்குகிறவர்கள், அதை ஒரு ஒழுக்க நெறி நூல் எனக் கொள்வர் என்பதில் ஐயமில்லை. வள்ளுவர் இவ்வொழுக்க நெறியை எங்கு கற்றார்? அவருக்கு ஆதரவாக இருந்தவை யாவை? இவ்வினாக்களுக்கு வள்ளுவரே பதில் கொடுக்கிறார்.

“இவ்வொழுக்க நெறி சாதாரணமானதன்று. பொய்யற்றது. பொய்யின் கலப்புச் சிறிதும் இல்லாத பொய்தீர் ஒழுக்க நெறி. இதை உலகுக்குக் காட்டியவரே ஐந்தவித்தானாகிய கடவுள். காட்ட வேண்டிய காரணம் என்ன?

உலகம் அழிவை நோக்கிப் போய்க்கொண் டிருந்தது. அழிவை நோக்கிய உலகை இறைவன் விடுவித்து, உலகோருக்கு என்றும் அழியா நீடு வாழ்வைக் கொடுக்க விரும்பினர். ஆகவே அவர் களுக்கு நீடுவாழ்வின் வழியாகிய பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டியதுடன், அவர்களின் அழிவின் தன்மையை அவர்களுக்குப பதிலாகத் தாம் ஏற்று, ஐம்புலனுடைய மனிதனுகி, குறிப்பிட்ட பொறியின் கண், தம் ஐம்புலனேயும் பலியாக்கினர். ஆகவே 'ஐந்தவித்தான்' என்ற பெயரைப் பெற்ருர். ஐம் புலனேயும் பலியாக்கிய அவர் தமது ஆற்றல் சிறப் பால், அகல் விசும்புளார் கோமான் சான்ருக இறப்பை வென்று நீடுவாழ்வை நிலநாட்டி மக்க ளுக்கு அதைக் கொடுத்தார். கொடுக்கிருர். நீடு வாழ்வைக் கொடுக்கும் ஐந்தவித்தான் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியே நூல் முழுவதிலும் விளக்கப் படுகிறது. ஐந்தவித்தான் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியில் நின்றவர் நீடுவாழ் வடைவர்".

*பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறி நின்ருர் நீடுவாழ்வார்*

ஆகவே மக்களுக்கு நீடுவாழ்வளிக்கும் ஐந்த வித்தாகிய கடவுளின் பொய்தீர் ஒழுக்க நெறியை வள்ளுவர் கூறுகிருர் என்பது தெளிவு. அப்பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி நீடு வாழ்வை நிலைபெறச் செய்த கடவுளாகிய ஐந்த வித்தானைப் பின் பற்றும் மக்களைத் தம் நூல் மூல மாக வள்ளுவர் உருவாக்குகிருர். இவ்வாறு வள்ளு வரால் உருவாக்கப்படும் அம்மக்களுக்கு வள்ளுவர் கொடுக்கும் பெயர் யாது?

திருக்குறள் பிரச்சார சங்கத்தின் அமைப்பாள ரும், காஞ்சி காமகோடி செகத்குரு சங்கராச்சாரி

யார் அவர்களிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவரும், திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அதை இந்தியா முழுவதும் பரவச் செய்து தமிழ் அறிஞர் களின் பாராட்டைப் பெற்றவருமான திரு. வான் மீகிகாந்தன் இக்கேள்விக்கு ஏற்ற விடையைக் கொடுக்கிறார்:-

''திருக்குறளின் 133 அதிகாரங்களும் உரு வாக்குவது சான்றோனையே.''

— வான்மீகிகாந்தன்-மொழிபெயர்ப்பு-
முன்னுரை–பக் 8 (1969)

ஆகவே, வள்ளுவர் கூறும் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிய கடவுள் 'ஐந்தவித்தான்' என் பதும், அப்பொய்தீர் ஒழுக்க நெறியைப் பின்பற்று பவன் 'சான்றோன்' என்பதும் தெளிவாகிறது.

'ஐந்தவித்தான்' என்பது ''உலக மக்களுக் காகத் தம்மையே சிலுவை மரத்தில் தியாகப் பலி யாக்கியவர்'' எனக் கிறித்தவர்களால் வணங்கப் படும் இயேசு பெருமானுடனும், ஐந்தவித்தான் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியைப் பின்பற்றும் ''சான்றோர்'' என்பது கிறித்தவர்களின் முதற் பெயராகிய 'சாட்சிகள்' என்பதுடனும் இணைந்து காணப்படுகின்றன.

ஆகவே, திருக்குறளை எழுதிய திருவள்ளுவ ருக்கும், இயேசுவின் சீடர்களாகிய சாட்சிகளுக்கும் தொடர்புண்டா என்பது நோக்கத் தக்கது.

திருவள்ளுவருடைய வரலாறு எதுவும் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் அவரைப் பற் றிய செவிவழிச் செய்திகள் சில காணப்படுகின் றன. அச்செவி வழிச் செய்திகளில் சில நமது ஆய்வுக்குப் பயன்படுகின்றன. இச்செவி வழிச்

செய்திகளில், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர் களின் 'தெய்வப்புலவர் திருவள்ளுவர்' (1950) என்ற நூலில் கூறப்பட்ட சிலவற்றை நோக்கு வோம்.

1. திருவள்ளுவர் மயிலாப்பூரில் வாழ்ந்தவர் எனக் கூறப்பட்டுவருகிறது — பக்-58

2. திருவள்ளுவருடைய நண்பராகக் கடல் கடந்து வாணிபம் செய்யக் கூடிய ஏலேல சிங்கன் என்பவர் கூறப்படுகிறார். — பக்-57

3. ஏலேல சிங்கரிடம் வள்ளுவர் 'நூல்' பெற்றதாகக் கூறப்படுகிறது. — பக்-66

4. ஏலேல சிங்கர் புலால் உண்ணும் பழக்கமுடையவராக இருந்ததாகவும், வள்ளுவர் அவரைப் புலால் உண்ணா திருக்குமாறு கேட்டுக் கொண்டதாகவும் கூறபபடுகிறது. — பக்-58

5. திருவள்ளுவர் தமக்கு இல்லாளைத் தேர்ந் தெடுத்த முறை விசித்திரமானதாகக் காட் டப்படுகிறது. மணலைச் சோருகக வேண் டுமாம். — பக்-66

மேலே காணப்படும் குறிப்புகள், இயேசு பெரு மானின் விடுதலைச் செய்தியை உலகெங்கும் அறி விக்கும்படியாகச் சென்றவர்களுள், இந்தியாவுக்கு வந்த, இயேசு பெருமானின் நேர் சீடர் பன்னிருவ ரில் ஒருவரான புனித தோமையருடன் இணைந் தவைகளாகக் காணப்படுகின்றன.

1. தோமையர் இறுதியாக வாழ்ந்த இடமாகக் குறிக்கப்படும் இடம் இதே மயிலாப்பூரே.

2. தோமையர் நற்செய்தியை அறிவிக்க 'கொண்டபோரஸ்' போன்ற அரசர்களின் ஆதரவுடன் வந்தமையாலும், அவருடைய இனத்தவர் பலர் வணிகர்களாக இந்தியா, இலங்கை போன்ற பல நாடுகளில் வாழ்ந்தமையாலும் இவரையும் இவருடைய இனத்தவருடன் இணைத்து வணிகர் என்றே மக்கள் அழைத்திருக்கலாம்.

3. 'வள்ளுவர் நூல் பெற்ருர்' எனக்கூறும் செவிவழிச் செய்தியை ஆய்ந்தோர் அவர் நெசவுத் தொழில் செய்து வாழ்ந்திருப்பார் என்னும் கருத்தை மறுக்கின்றனர்.

"ஆதலால், அவர் நெய்தற்ருெழிலைத் தான் தமது தொழிலாகக் கொண்டிருந்தாரெனக் கூறுதற்கு இடமில்லை."

—ஔவை. துரைசாமிப்பிள்ளை–பக். 76

ஆகவே, அச் செவிவழிச் செய்தி கூறும் 'நூல்' நெசவு நெய்யும் நூலாகத் தெரியவில்லை. ஆனுல்,

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

பகுத்துண்டு பல்லுயிரோம்பல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

என்ற குறட்பாக்களால் கூறப்படும் பனுவலாகிய நூலாக இருக்கலாம்.

வள்ளுவர் நூல் பெற்றது ஒரு சிறப்புச் செய்தியாகக் கூறப்படுகின்றமையால் சிறப்பான நூல் ஒன்றை வள்ளுவர் ஏலேலசிங்கனிடம் பெற்ருர் எனக்கொள்ளலாம். அவ்வாறு கொள்ளும்பொழுது, சிறப்புச் செய்தியை அறிவிப்பதற்காகவே அலை

கடலைச் சிங்கமெனக் கடந்து வந்த, வணிகனெனக் கருதப்படக் கூடிய வரலாற்றுச் சான்றுடன் தெளிவாக மயிலாப்பூரில் வாழ்ந்த புனிததோமைய ராகவே ஏலேலசிங்கன் இருக்கக் கூடிய வாய்ப்பு உண்டு. ஏலேலசிங்கன் என்ற இப் பெயரும் சிங்கமெனக் கடலைக்கடந்து வந்த தோமையரையே குறிக்க வாய்ப்புள்ளது என்பது ஜி. யூ. போப் அவர்களின் கருத்தாகும்.

4. வள்ளுவரின் நண்பர் புலால் உண்ணும் வழக்கமுடையவர் என்பதும், வள்ளுவரால் அவர் அவ் வழக்கத்தைக் கைவிட்டார் என்பதும் புனித தோமையருக்கு முழுவதும் பொருந்தக்கூடிய கருத்தாகும். மயிலாப்பூரில் சமணர் வாழ்ந்ததற்கான தெளிவான வரலாற்றுச் சான்றுகள் உள.

புலால் மறுத்தலில் மிகவும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட சமணர்களிடையே தோமையரின் கருத்துகள் சிறப்படைய வேண்டுமானுல், தோமையரும் புலால் உண்ணுவதை நிறுத்திப் புலால் மறுத்தலைக் கைக்கொண்டேயாக வேண்டும். அம்முறையில் புலால் மறுத்தல் கருத்து வள்ளுவரால் தோமையரிடம் வற்புறுத்தப்பட்டிருப்பது இயல்பே.

5. வள்ளுவர் தம் மனைவியைத் தேர்ந்தெடுத்த முறையே இங்கு மிகவும் ஆழ்ந்து நோக்கவேண்டியதாக உள்ளது.

வள்ளுவர், தமக்கு மனைவியாகக் கூடியவள் தாம் கொடுக்கும் மணலைச் சோருகச் சமைக்கக் கூடியவளாக இருக்கவேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கக் காரணம் என்ன ?

நம்மிடத்தில் மண நிலையில் மகள் ஒருத்தி இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். மேலே கண்ட நிபந்தனையைக் கூறிக்கொண்டு ஒரு

வாலிபன் நம்மை அணுகினால் நாம் அவனுக்கு என்ன மறுமொழி கொடுப்போம்? சற்று சிந்திக்க வேண்டிய குறிப்பு.

நாம் அவன் கூறும் நிபந்தனையை நிறைவேற்றிக் காட்டும்படி நம்முடைய மகளுக்குக் கூறுவோமா? அல்லது வந்த வாலிபனது மனோநிலையைப் பற்றி ஐயம் கொள்ளுவோமா? நிச்சயமாக வந்த வாலிபனது மனோநிலையை நாம் பாராட்ட மாட்டோம்.

நிபந்தனையை நிறைவேற்றிக் காட்டச் சொல்லும் தந்தை இருக்கமாட்டார் என்றே நாம் நம்பலாம். தந்தைக்குத் தம் மகளின் வாழ்வின் மீது அக்கரையுண்டு. ஆகவே உலகியலுக்கு முரண்பட்ட உள்ளம் கொண்ட ஒருவனுடன் அவள் வாழ முடியாது என்றே தந்தை முடிவு கட்டுவார்.

அப்படியானால் வள்ளுவர் உலகியலுக்கு முரண்பட்டவர்தானா?

> உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார்.

எனக்கூறும் வள்ளுவர் கண்டிப்பாக உலகியலுக்கு முரண்பட்ட முறையில் நடந்துகொண்டிருக்க முடியாது அப்படியானால் மேலே கண்ட செவி வழிச் செய்தியின் உட்பொருள் என்னவாயிருத்தல் கூடும்?

இங்கு ஏற்படும் இடர்ப்பாட்டைப் புனித தோமையரைப் பற்றிய செவிவழிக் குறிப்புகள் நீக்கிக்காட்டுகின்றன. எவ்வாறு?

புனித தோமையர் தமிழகத்தில் நற்செய்தித் தொண்டாற்றுங்கால், வழிபாட்டிற்கெனக் கோவில் கட்டியதாகவும், அக் கோவில் கட்டும் பணியில்

ஈடுபட்ட உதவியாளர்களுக்குக் கூலியாக மணலையே கொடுத்ததாகவும், அம் மணலைக் கொண்டு சென்றவர்கள் அதைச் சமையல் செய்த காலை அது சோருக மாறியதாகவும் தோமையரைப் பற்றிய குறிப்புகள் கூறுகின்றன. ('அடியவர்கள் முழு நம்பிக்கையுடன் வேண்டினால் கல்லும் உணவாக மாறும்' என்ற இயேசு பெருமானின் அருள்மொழி இங்கு நினைவுகூரற்பாலது.)

இதனுடன் வள்ளுவரையும் இணைத்துப் பார்க்குங்காலை வள்ளுவரின் சிறப்பு வெளிப்படுகிறது.

மணல் நிச்சயமாக சோருக மாறும் என வள்ளுவரும் நம்பி, தோமையரிடம் மணலை வாங்கி வந்தாலும், வள்ளுவரையும், அவர் கொண்டுவந்த மணலையும் ஏற்று, சோருக மாற இருக்கும் மணலைச் சமைக்க, வள்ளுவரைப் போன்ற இணைந்த நம்பிக்கை கொண்ட ஒரு பெண் வள்ளுவர்க்குத் தேவை. அவளே அம்மணலை ஏற்றுச் சமைக்க முன் வருவாள்.

அந்நம்பிக்கையில்லாத ஒரு பெண்ணை மனைவியாகப் பெற்றிருந்தாலோ, அதன் விளைவை விவரிக்க வேண்டிய தேவையில்லை. மணலை வாங்கி அதைக் கொண்டுவந்தவன் முகத்திலேயே வீசி எறிவாள் அல்லவா?

ஆகவேதான் தம்மைப் போன்ற நம்பிக்கை கொண்ட பெண்ணை வள்ளுவர் தேடினூர் எனலாம்.

இவ் விவரங்களை முறைப்படி விளக்கிக் காட்டும் வாலிபனை நாமும் ஐயப்படவோ, தள்ளவோ மாட்டோம் என்பதும் உறுதி. அந்நிலையில் அச் செய்தி வள்ளுவர்மீதுள்ள ஐயத்தை அகற்றுகிறது.

இதுவரை நாம் நோக்கியவைகளைத் தொகுத்துப் பார்த்தால் :—

1. கிறித்தவத் திருமறையின் தலைவராக விளங்கும் இயேசு பெருமானின் அடியவர்கள் தொடக்ககாலத்தில் சான்று கூறுகின்றவர்கள் என்ற பொருளில் 'சாட்சிகள்' என்ற பெயரால் மட்டுமே அழைக்கப்பட்டனர். கிறித்தவர் என்ற பெயர் அவர்கள் அறியாத ஒன்று.

2. கிறிந்தவத் திருமறையின் புதிய ஏற்பாட்டுக் கருத்துக்கள் கொண்ட வேறு நூல்கள், மற்ற மொழிகளில் வழங்கப்பட்டிருக்கலாம். புதிய ஏற்பாட்டைத் தொகுததவர்களுக்கு அது கிடைக்காமல் இருந்திருக்கலாம். பொன் எங்கிருந்தாலும் பொன் என்றே வழங்கப்படுவதைப் போன்று மறைக் கருத்துக்கள் எங்கிருந்தாலும் (மறை) எனவே போற்றப்பட்டிருத்தல் இயல்பு. அவ்வகையில் புனித தோமையர் மூலமாக, தமிழகத்திலும் அத்தகைய பகுதிகள் தோன்றியிருப்பதற்கான வாய்ப்பு இருக்கிறது.

3. தமிழில் தமிழ்மறை, பொதுமறை என (மறை) என்ற பெயரால் வழங்கப்படும் திருக்குறள், தமிழக சமயங்களில் எதைச்சார்ந்தது என்பது இது வரை அறிஞர்களால் அறியமுடியா நிலையில் அமைந்துள்ளது. அதே நேரத்தில் ஒரு மறைக்குரிய அத்தனை கருத்துக்களும் அதில் காணப்படுகின்றன. மறை என்ற நிலையில் அதையே பின்பற்றும் தனிக் கூட்டம் இன்றில்லாவிடினும், அதன் மறைத் தன்மையை மறுப்பவர் எவருமிலர். தங்கம் தங்கமாகவே விளங்குகிறது.

4. கிறித்தவத் திருமறை, சிலுவையில் தம் ஐம்புலனையும் பலியாக்கிய கடவுளையும், அவரைப்

பின்பற்றிச் சான்றுகளாக விளங்குகிறவர்களையும் விளக்குகிறது. அவ்வாறே திருக்குறளும் ஐந்தவித்தானாகிய கடவுளையும், அவனுடைய பொய்தீர் ஒழுக்க நெறி நிற்கும் சான்றோர்களையுமே விளக்கிக் கூறுகிறது.

5. வள்ளுவமாகிய தமிழ்மறையின் ஆசிரியரான திருவள்ளுவரும், விவிலியமாகிய திருமறையின் அடியவரான தோமையரும் சந்தித்திருக்கக் கூடும்; ஏன் நெருங்கிய வாழ்வு நடத்தினார்கள், என எண்ணக்கூடிய நிலையில் செவிவழிச் செய்திகள் அமைந்துள்ளன. புனித தோமையர் ஏலேல சிங்கன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றிருக்கலாம் என்ற கருத்தை மறுப்பதற்கான காரணம் எதுவும் இல்லை. பெஸ்க்கி என்ற இத்தாலியர் வீரமாமுனிவர் என அழைக்கப்பட்டமை ஒப்பிடத்தக்கது.

மேற்கண்ட கருத்துக்களை நாம் உறுதியாக ஏற்றுக்கொள்ள வேண்டுமானால், இயேசு பெருமானின் நேர் சீடரான தோமையர் மைலாப்பூரில் வாழ்ந்தது உண்மைதானா? அதற்கு வரலாற்றுச் சான்றுகள் உண்டா? அவரைப் பின்பற்றிய கூட்டம் பிற்காலத்திலும் அங்கு இருந்ததா? என்பனவற்றை வரலாற்று ஆதாரங்களுடன் விரிவாக நோக்கவேண்டுவது இன்றியமையாததாகும்.

# 4. தோமையரும் தமிழகமும்

தோமையர் இந்தியாவிற்கு வந்தமைக்கும், தமிழகத்தின் மயிலேயில் அடக்கம் பண்ணப்பட்டமைக்கும், மயிலேயில் அவரைப் பின்பற்றிய மக்கள் வழிவழியாக வாழ்ந்தமைக்கும் தக்க சான்றுகள் உள்ளன.

இதைப் பற்றிய விரிவான ஆராய்ச்சிக் குறிப்புகளும், வரலாற்றுச் சான்றுகளும் ஆங்கிலத்தில் ஏராளமாயுள்ளன. தமிழில் வெளிவந்த நூல்கள் மிகச் சிலவே. அவற்றுள் நமது ஆய்வுக்குப் பெரிதும் துணையாகக் கூடியது சென்னை மயிலைப் பேராயராக விளங்கும், டாக்டர் அருள்திரு. இரா. அருளப்பர் அவர்கள் 1971-ல் வெளியிட்ட "இந்தியாவின் அப்போஸ்தலர் புனித தோமையார்" என்னும் வரலாற்றுத் தொகுப்பாகிய சிறு நூல் ஆகும்.

இந் நூலில், 1. பழங்காலச் சான்றுகள், 2. மயிலாப்பூரில் கல்லறை, 3. கல்லறை வெளிப்படுத்தும் சான்றுகள், 4. கல்லறையின் மங்காப் புகழ் ஆகிய நான்கு தலைப்புகளின் கீழ், தோமையரைப் பற்றிய தெளிவான வரலாற்றுச் சான்றுகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை இங்கு விரிப்பின் பெருகும்.

ஆகவே அன்பர்கள் அவ்வரிய நூலை நேரடியாக நோக்கித் தெளிவார்களாக. தோமையரைப் பின்பற்றிய அடியவர்களைப் பற்றி, நமது ஆய்வுக்குத் தேவையான வேறு பல வரலாற்றுக் குறிப்புகளை பேராயர் அவர்கள் மனமுவந்து அளித்துள்ளார்கள். அவை கீழே கொடுக்கப்படுகின்றன:—

"இந்தியாவின் பல்வேறு பாகங்களில் புனித தோமையரைப் பின்பற்றிய இயேசுவின் அடியவர் வாழ்ந்தனர் என்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. கி. பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த புனித தோமையர் சேர சோழ பாண்டிய நாடென, முப்பெரும் பிரிவுகளாய் விளங்கிய தமிழ்நாட்டிலும், இயேசுவின் அடியவர் அடங்கிய சங்கங்களை நிறுவினார். தோமையர் உயிரோடிருந்த காலத்தில் மட்டுமல்லாது அதற்குப் பின்னரும் இயேசுவின் அடியவர்களின் சங்கங்கள் இருந்தன.

1. பெயர் பெற்ற வரலாற்றாசிரியராகிய ஹிப்பன் எழுதி வைத்துள்ளதாவது:—"மிளகு விளையும் மலையாள (மலபார்) நாட்டிலும், சொக்கோத்ரா தீவுகளிலும், இலங்கையிலும் திரளான இயேசுவின் அடியார் இருந்தார்கள். அந்நாடுகளில் அவர்களைக் கண்காணிக்கும் அத்தியட்சர்களும் (Bishop), குருக்களும், பாபிலோனியாவில் வாழ்ந்த, கத்தோலிக்கோஸ் என்னும் மதத்தலைவரிடம் குருத்துவ அபிசேகம் பெற்று வந்தனர்.

2. கி.பி. ஆறும் நூற்றாண்டில் இங்கு வந்த காஸ்மாஸ் இண்டிகோ புளூஸ்தீஸ் என்பார், இலங்கையிலும், இந்தியாவிலும், இயேசுவின் அடியவர்களும் கோயில்களும், குருக்களும், திருச்சங்கத்தினரும் இருந்ததாகக் கூறுகின்றார். அவர்

தனிப்பட்ட முறையில் மிளகு விளைகின்ற மலை நாட்டைச் சுட்டுகின்றார்.

3. கி.பி. 345 இல் சீரியா நாட்டினின்றும் சேர நாட்டிற்கு ஒரு பெரிய கூட்டமாக இயேசுவின் அடியவர்கள் ஒரு அத்தியட்சரோடு வந்ததாகத் திட்டவட்டமாகத் தெரிய வருகிறது. அப்போது சேர நாட்டில் சிறப்புற்றிருந்த 'பெருமாள்' அவர்களை வரவேற்றதாகவும், ஒரு வேளை சீரியாவுடன் வாணிகத் தொடர்பு கொள்ளலாம் என்ற நோக்கத்தோடு அவ்விதம் செய்திருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. கேரளமெங்கும் தங்கள் ஆதிக்கத்தைப் பரவச் செய்திருந்த இம்மக்களின் சமயத்தைக் குறித்து அறிய வேண்டுமென்ற ஆவல் இந்தப் பெருமாளுக்கு ஏற்பட்டிருக்கக் கூடும் என்று கருத இடமுள்ளது. இந்து மதம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்களை ஒன்றோடொன்றாக இவர் ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருந்தக்கால், இவர் இயேசுவின் சமயத்தில் மன நிறைவடைந்து அதைத் தழுவியிருக்கக் கூடும் என்று யூகிக்க இடமுண்டு. இதனால் நம்பூதிரிகள் வெறுப்படைந்து, இதுகாறும் தாங்கள் வாழ்ந்து வந்த இடத்தைத் துறந்து வெளியேறினர்.

இயேசுவின் அடியவர்களுக்குப் 'பெருஞ் செட்டி', அதாவது பெரிய வணிகர்கள் என்ற பட்டம் அளிக்கப்பட்டது. அவர்கள் பெரிதும் உயர்வடைந்திருந்தனர். "சீரிய நாட்டுக் கிறிஸ்தவர்களின் ஆதித்தோற்றம்" என்ற நூலின் ஆசிரியராகிய அநந்த கிருஷ்ண ஐயர் கூறுவது யாதெனில், "இவர்கள் மன்னனின் நேராட்சிக்குக் கீழ்ப்பட்டிருந்தார்கள். அவர்கள் அந்தந்த இடத்துத் தலைவர்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கவில்லை. அவர்கள் பலத்து, ஆற்றல்மிக்கோராய்த் திகழ்ந்தனர்.

அவர்களுடைய அத்தியட்சர்கள் மன்னரைப்போல் மதிக்கப்பட்டனர். நாட்டை ஆளும் மன்னரால் அவர்கள் மிகச் சிறப்பாய்ப் பாராட்டப் பட்டனர்.''

—''இந்தியாவில் கத்தோலிக்க சமுதாயம்''
கா. நா. சுப்பரமணியம்-பக்கம்—9

கொச்சி மன்னரின் அரண்மனை மேற்பார்வையாளர் 1940 ஆம் ஆண்டில் கண்டுபிடித்த பழம் பத்திரம் ஒன்றில் இவ்வுண்மை வற்புறுத்தப்பட்டுள்ளது. கி.பி. 317 இல் அவ்வட்டாரத்தில் வாழ்ந்த இயேசுவின் அடியவராகிய ஒரு மன்னரைக் குறித்து அவ்வேடு மறைமுகமாகக் கூறுகிறது. அம்மன்னர் பள்ளி வளவனூர் என்று வழங்கப்பட்டார். (அதாவது, அவர் ஒரு பள்ளியில் வசித்தவர். பள்ளி என்பது வைதீக சமயத்திற்குப் புறம்பான ஒரு சமயத்தாரின் வழிபாட்டிற்குரிய கோவில். அவர் ஒரு கோவிலின் மீது ஆட்சி செலுத்தி வந்ததோடு கூடப் பெரிதும் கௌரவிக்கப் பட்டவராகவும் திகழ்ந்தார்).

—'' இந்தியாவில் கத்தோலிக்க சமுதாயம் ''
கா. நா. சுப்பரமணியம். -பக்.—10 (1970)

4. மலையாள நாட்டில் பாரம்பரையாகக் கூறப்பட்டு வரும் ஒரு செய்தி யாதெனில், தோமா கானூ என்பார் தான் சீரியாவிலிருந்து இயேசுவின் அடியவர்களைக் கொண்டு வந்தார் என்பதும், கொச்சிக்கு அருகிலுள்ள வில்லியார் வட்டம் என்ற இடத்திலுள்ள சமுதாயத்திற்கு அவரே மூதாதையர் என்பதுமே. இச்சமுதாயம் பெருகினபோது அவர்கள் கேரளத்தின் எல்லாப் பாகங்களிலும் பரவினர். பிற்காலத்து நிகழ்ச்சியாக அறியப்பட்டுள்ளது யாதெனில், 1439ம் ஆண்டில் நான்காவது யுஜீனியஸ் என்னும் பாப்புவானவர் இந்நிலப்

பகுதியை யாண்ட தோமா மன்னரிடம் தூதுவர்களை அனுப்பினார்.

—'இந்தியாவில் கிறிஸ்தவ சமயத்தின் வரலாறு'
ஆசிரியர்-ஜார்ஜ் மார்க் மோரேஸ்-பக். 6 (1964)

இயேசுவின் அடியவர்களின் வாழிடங்கள் கம்போலங்கள், அங்காடிகள், தெருவுக்கள் என்று வெவ்வேறு பெயர்களுடன் வழங்கப் பட்டன. நாளடைவில் அத்தகைய குடியேற்றங்கள் திருவிதாங்கோடு, கொல்லம், காயங்குளம், கொல்லாடா, குண்டாரா, திருவல்லா, கோட்டையம், முட்டம், பாரூர், இரிஞ்சலக்கூடா, பாலூர் முதலிய இடங்களில் தோன்றின.

(மோரேஸ். பக்—67).

கி. பி. 7ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இயேசுவின் அடியவர் பாரசீகத்திலிருந்து வந்து கேரளத்தில்குடியேறினர். பாரசீகத்திலிருந்து அவர்கள் வந்தமையால், இயல்பாகவே தங்களைப் பாரசீகர் என்று அழைத்துக் கொண்டனர். விநயாதித்தன் என்ற மேலைச்சாளுக்கிய மன்னன் (681-696) கமேரா, காவேரா, பாரசீகா, சிம்மளம் ஆகிய நாடுகளை ஆண்ட மன்னர்களிடமிருந்தும், ஏனைய தீவுகளை ஆண்ட அரசர்களிடமிருந்து கப்பம் வாங்கினதாகக் கூறப்படுகிறது.

இவ்விடங்கள் கூறப்பட்டுள்ள வரிசை முறைமையை நோக்கினுல், பாரசீகர் என்போர் காவேரா நாட்டிற்கும் சிம்மள நாட்டிற்கும், அதாவது சோழ நாட்டிற்கும் இலங்கைக்கும் இடையேயுள்ளதும், கன்னியாகுமரி முனைக்கு வடக்கேயுள்ளதுமான, தமிழ்நாட்டில் குடியேறினர் என்பது தெளிவாகிறது.

'இந்தியாவில் கிறிஸ்தவ சமயத்தின் வரலாறு'
ஆசிரியர்-ஜார்ஜ் மார்க் மோரேஸ்-பக்கம்-63-64

5. கி.பி. 6-ம் நூற்றுண்டின் இறுதியில் அப்போஸ்தலராகிய புனித தோமையரின் கல்லறையைக் காணும் பொருட்டாக யாத்திரீகர்கள் பிரான்ஸ் தேசத்திலிருந்து மயிலாப்பூருக்கு வந்தனர். இந்த அப்போஸ்தலர் இரத்தச் சாட்சியாக மரித்துப் பல நூற்றுண்டுகளான பின்புங் கூட அவருடைய புகழ் உலகெங்கும் பரவியிருந்த உண்மையைப் பொதுவாகப் பலபேர் உணர்வதில்லை. பிரான்ஸ் தேசத்திலிருந்து வந்த யாத்திரீகர்களில் ஒருவராகிய தியடோர் என்பவரைக் குறித்து நமக்குச் செய்தி கிடைத்துள்ளது. அவர் தம்முடைய தாய் நாட்டிற்குத் திரும்பினபோது, தாம் மயிலாப்பூரில் கண்டவைகளையும் கேட்டவைகளையும் மக்களுக்கு எடுத்துரைத்தார். பிரான்ஸிலுள்ள டூர்ஸ் நகரைச் சேர்ந்த புனித கிரெகரியார் இக்குறிப்பை எழுதி வைத்துள்ளார். அவர் கூறும் பல செய்திகளுக்கிடையே மயிலாப்பூரில் துறவிகள் வாழும் மடம் ஒன்றும், மிகமிகப் பெரிய கோவில் ஒன்றும், இருந்ததாகவும், அக்கோவில் அலங்காரமான வேலைப்பாடுகளும் அமைப்பு முறையும் கொண்டதாகவும் இருந்ததெனக் கூறுகிருர்.

புனித கிரெகரியார் தாம் எழுதியுள்ளவற்றிற்கெல்லாம் கண் கண்ட சாட்சியாகத் தியடோரின் பெயரைத் திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்ருர்.

தற்போதுள்ள பேராலயத்தின் வளாகத்திலேயே இந்த மடம் இருந்திருக்க வேண்டும். 1970 ஆம் ஆண்டில் வளாகத்தைத் தோண்டினபோது, பல அடிப்படைச் சுவர்கள் காணப்பட்டன. இன்னும் முழுவதுமாகத் தோண்டினுல் இப்புகழ் வாய்ந்த மடத்தின் வேறு பல பாகங்களையும் காணக் கூடும்.

கி.பி. 1340 இல் அரபு நாட்டைச் சேர்ந்த அமிரு என்னும் வரலாற்றாசிரியர் புனித தோமையரின் கல்லறை அமைக்கப் பட்டிருக்கும் இடத்திற்குத் தனிப்பட்ட முறையில் சான்று கூறுவோராய், அது தாம் வசிக்கும் மடாலயத்தின் பீடத்திற்கு வலது புறத்தில் அமைந்துள்ளது என்று கூறுகிறார்.

இதற்கு இன்னும் பிற்பட்ட காலமாகிய கி.பி. 1504 இல் பாக்தாதிலிருந்து வந்த நான்கு அத்தியட்சர்கள், தாய் நாட்டிலிருந்த மகாகனம் பொருந்திய தங்கள் தலைவருக்கு(பேட்ரியார்க்குக்கு) எழுதின கடிதத்தில் மயிலாப்பூரிலிருந்த அதே மடத்தைக் குறித்துக் கூறியுள்ள செய்தி அமைந்துள்ளது.

இந்த மடத்தைக் குறித்து நாம் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய குறிப்பு யாதெனில், இது துறவிகள் பலர் ஒன்று கூடியிருந்து, தங்கள் காலத்தை வணக்கத்திலும் துறவறத்துக்குரிய ஒழுக்கங்களிலும் செலவழித்த இடமாக விளங்கியது மட்டுமன்றி, மேல் நாட்டில் கி. பி 6-ம் நூற்றாண்டில் திகழ்ந்த துறவறத்தின் தந்தையாகிய புனித பெனிடிக்ட் என்பாரின் காலத்திலிருந்தே மடங்கள் கல்வித்துறைக் கூடங்களாக விளங்கினது போலவே, இம்மடமும் கல்வியில் ஈடுபாடு கொண்டிருந்தது. ஆகவே மயிலாப்பூரிலிருந்த இந்த மடத்தில் படிப்பாளிகள் கட்டாயம் இருந்திருப்பர் என்று கூறுவதும், அன்னாரோடு சமயச் சார்பான தர்க்கங்களை நிகழ்த்த இங்குள்ள மற்ற அறிஞர்களுக்குப் போதிய வாய்ப்புகள் இருந்தன என்பதும் மிகைபடு கூற்றாகா.

6. (முன்னே கூறிய குறிப்பிலுள்ளபடி) பாக்தாதிலிருந்து வந்த நான்கு கல்தேய அத்தியட்சர்

களும் தங்கள் கடிதத்தில் மேலும் கூறுவது யாதெ னில், "இந்தப் பேறு பெற்ற நாடாகிய இந்தியா வில், நமது சமயத்தைச் சேர்ந்த 30.000 குடும் பங்கள் இருக்கின்றன. அவர்கள் வேறு கோவில் களைக் கட்டத் தொடங்கியுள்ளனர்; அவர்களுக்கு எல்லாப் பொருட்களும் நிறைவாய் வாய்த்துள் ளன," என்பதே. இந்தக் குடும்பங்கள் வாழ்ந்த நாடு மலையாள நாடு என்பதில் ஐயம் ஒன்றுமில்லை; ஏனெனில் இவ்விடத்திலிருந்து மயிலாப்பூர் 25 நாட் பயணத் தூரத்திலுள்ளது என்று கூறுகின்றனர்.

7. மயிலாப்பூரிலுள்ள புனித தோமையரின் ஆலயத்திற்குக் குறைந்தது இரண்டு முறையாவது வழங்கப்பட்ட மானியங்களே அவ்வாலயம் பெற் றிருந்த புகழுக்கும், அக்காலத்தில் இயேசுவின் அடியவர்களுக்கிருந்த சிறப்பிற்கும் உறுதியான சான்ருகும்.

கி.பி. 1523 ஆம் ஆண்டில் சான்தோம் தேவா லயத்தின் ஒரு பகுதியைத் தோண்டினபோது கிடைத்த கல்வெட்டு ஒன்று ஒரு மானியத்தைக் குறித்துச் சான்று பகர்கின்றது. தானே முதலியார் என்பார் ஆலயத்திற்கு வழங்கின மானியமே அது; அதாவது தரை வழியாகவும், கடல் வழியாகவும் நடந்த வாணிபம் அனைத்தின் மீதும் வசூலிக்கப் பட்ட சுங்க வரியில், ஒரு சதவீதம் ஆலயத்திற்குச் சேரவேண்டியது. அக் கல்வெட்டு இன்னும் அதிக மாகக் கூறினது யாதெனில், "வருங்கால மன்னர் களுக்கு ஓர் ஆணை; கொடிய தண்டனைகளுக்கு அவர்கள் ஆளாகாதபடி, சூரியனும் சந்திரனும் நிலைத்திருக்கும் வரைக்கும் அவர்கள் மானியம் வழங்கிஞேரின் உள்ளக் கிடக்கையை நிறை வேற்றியே தீரவேண்டும்." இந்தத் தானே முதலி யார் இயேசுவின் அடியவர்களுக்குத் தலைவராக

வும், செல்வங் கொழிக்கும் வணிகத் தொழில் ஒன்றை நடத்தியவராகவும் இருந்திருக்க வேண்டு மென்று தெரிகிறது. இதை வலியுறுத்தும் வகையில், கி.பி. 14-ம் நூற்றுண்டில் மயிலாப்பூரைக் காண வந்த மரீஞ்ஜெல்லி என்பார், சோழ மண்டலக் கரையிலுள்ள மயிலாப்பூரில் வாழ்ந்த புனித தோமா வைப் பின்பற்றியவர், "எஃகு உற்பத்தி முதலாளிகளாய்த் திகழ்ந்தனர்" என்று கூறு கின்றார்.

யூல் என்னும் வரலாற்றுசிரியரால், "காத்தே யும் அங்குச் செல்லும் வழியும்" என்ற நூலின் இரண்டாம் பகுதி, பக்கம் 377-378 இல் இச்செய்தி சிறிது வேறுபாட்டுடன் கூறப்பட்டுள்ளது. கோவி லுக்கு மானியம் வழங்கின வள்ளலின் பெயர் சாகாமோ மன்னர் என்றும், அவர் மயிலாப்பூரி லிருந்த புனித தோமையரின் ஆலயத்திற்கு நிரந்தர மானியமாக, மிளகும் வாசனைத் திரவியங்களும் சேமித்து வைக்கும் பண்டசாலையாகப் பயன்படும் படிப் பொதுமக்களுக்குரிய எஃகு வளாகத்தை வழங்கினரென்றும் கூறப்பட்டிருப்பதோடு, கிறிஸ்த வர்களுக்குரிய இச் சலுகையை யாரும் கைப்பற்றக் கூடாதென்றும், அதை மீறுவோர் கொலைத் தண்டனைக்குள்ளாவரென்றும் அதில் எழுதப்பட் டுள்ளது. இந்த சாகாமோ ஒரு வேளை மன்னர் மகாதேவனின் பின் சந்ததியாரில் ஒருவராய் இருந் திருக்கக் கூடும். "புனித தோமையரின் நடபடி கள்" என்ற தொன்னூலில் கூறப்பட்டுள்ளபடி, மன்னர் மகாதேவன் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவினவரென்றும், "தம் குதிரைமீது ஏறிச் சென்று சுற்றி வளைத்துக்கொள்ளக்கூடிய அளவு நிலத்தை"த் தாமே கோவிலுக்கு மானியமாய் வழங்கினரென்றுந் தெரிகிறது

(மெட்லிகாட் பக். 126)

"கொல்லத்தில் தரிசா ஆலயம் என்ற பெயர் வாய்ந்த ஆலயத்திற்கு வழங்கப்பட்ட செப்பேட்டு மானியங்கள் மூலம் அவ்வாலயம் புகழ் பெற்றுள்ளது. இவ்வேடுகளில் பல சலுகைகள் கூறப்பட்டுள்ளன. இவ்வாலயம் அழிந்துவிட்ட போதிலும் இச் செப்பேடுகள் நமக்குக் கிடைத்துள்ளன. ஆராய்ச்சியாளரின் பொதுவான கருத்துப்படி இச் செப்பேடுகள் கி.பி. 14-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவையல்ல. ("தோமைக் கிறிஸ்தவர்கள்," பொடிப் பாரா-பக். 68, 85). பல நூற்றாண்டுகளாகக் கிறிஸ்தவர்கள் எவ்வளவு மதிப்பும் சிறப்புமுடையோராய்த் திகழ்ந்தனர் என்பதை இச்சான்றுகள் யாவும் உணர்த்துகின்றன.

ஆறு செப்பேடுகள் அடங்கிய "கொல்லத்துச் சாசனம்" ஸ்தாணு ரவி என்னும் மன்னரால் வழங்கப்பட்டமையாலும், அவர் சோழ மன்னனாகிய முதலாம் ஆதித்தனின் சம காலத்தவராய் (877-907) இருந்தமையாலும், இவரது காலம் 9-ம் நூற்றாண்டு என்று சிலர் கணித்துள்ளனர். இச் சாசனத்தின் ஒரு பகுதி தமிழிலும், ஒரு பகுதி பல்லவி மொழியிலும், ஒரு பகுதி அராபிய மொழியிலும் எழுதப்பட்டு, யூத மதப் பிரமுகர்களால் கையொப்பமிடப்பட்டுள்ளது. இச் செப்பேடுகள் மூலமாக மலையாளத்தின் சமுதாய வாழ்க்கையில் கிறித்தவர்கள் வகித்திருந்த உயர்நிலை உறுதிப் படுத்தப்பட்டதென்று தெரிகிறது.

இரண்டாவது "மானியம்" மூன்று செப்பேடுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு செப்பேட்டின் பின்புறத்திலும், ஒரு சிலுவைக் குறியும் ஒரு மயிலின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன. (மயிலின் படம் மயிலாப்பூரைக் குறிக்குஞ் சின்னமோ என்று எண்ண இடந்தருகின்றது.)

முதல் செப்பேடு முன்னுரை போன்றுள்ளது. இரண்டாஞ் செப்பேடுதான் "மானியத்தைக்" குறித்துக் கூறுகிறது. இம் மானியம் யாதெனில், கோவிலுக்கு வழங்கப்பட்ட நிலங்கள், வீடுகள், விளை நிலங்கள், தோட்டங்கள், நதிகள் உல்லாசப் பொழுதுபோக்குக்குரிய நீர் நிலைகள், செல்வக் குவியல்கள், மாணிக்கங்கள், பூமிக்கு மேலுங்கீழு முள்ள நவரத்தினங்கள், கப்பல்கள், கடல்படு பொருட்கள், மரத்தடிகள் ஆகியவை. அத் துறை முகத்தில் வெளிநாட்டுக் கோவில்களுக்கென்று கப்பல்களில் ஏற்றப்படும் சரக்குகள் மட்டும் நீங்கலாக, ஏனைய சரக்குகள் மீது விதிக்கப்படும் சுங்கவரி யெல்லாம் ஆலயத்திற்குச் சேரவேண்டியது. சூரியனும் சந்திரனும் நிலைத்திருக்கும் வரைக்கும் இம் மானியங்கள் ஆலயத்திற்குச் சேரவேண்டியவை, என்று ஆலயத்திற்கு முன் செய்யப்பட்ட சபதத்தோடு இம் மானியங்கள் வழங்கப்பட்டன.

மூன்றும் செப்பேடு பின்வரும் முடிவுரையைக் கொண்டுள்ளது :—

"நல்லுலகை அடையும் பொருட்டாக இம் மானியம் வழங்கப்படுகிறது—இம் மானியங்களை ஆலயத்திற்கென்று காத்துக்கொள்ளும் மன்னர் அனைவரும் இவற்றைவிடப் பன்மடங்கு அதிகமாக அடைவர். இம் மானியங்களுக்குப் பாதகமாய் நடப்போரோ எழுபதாயிரம் ஆண்டு புழுக்களோடு நரகத்தில் வேதனைப்படுவர்."

இச்செப்பேடுகளின் சொல்லமைப்பை நோக்குங் கால், இம் மானியங்கள் மெய்யாகவே வழங்கப் பட்டவை என்று தோன்றுகிறது. தமிழ்மக்கள் கோவில்களுக்கு மானியம் வழங்கும் முறையையே இவைகளும் முழுவதுமாகப் பின்பற்றியுள்ளன.

இச் செப்பேடுகளைப் பற்றிய வரலாறு பின் வருமாறு கூறப்படுகின்றது :—

கி.பி. 1552இல் மைலாப்பூரிலிருந்த ரோமன் கத்தோலிக்கக் குருவானவராகிய பெண்தியாதோ குருவிடத்தில் வயது சென்ற பிராமணர் ஒருவர் வந்து, தோமையரின் காலத்திற்குச் சிறிது பின்பு வாழ்ந்த சில மன்னர்கள் மயிலாப்பூர் ஆலயத்திற்கு நிலங்களை மானியங்களாக வழங்கிய செய்தி அடங்கிய செப்பேடுகள் சில மறைந்தும், மறைக்கப்பட்டவையாகவும் கிடக்கின்றனவென்றும், குருவானவர் தமக்குத் தக்க வெகுமதி வழங்கினால், தாம் அவற்றை அருவக்குக் காட்டக்கூடுமென்றும் கூறினார். குரு அதற்கு இணங்கவே, அந்தணர் அவற்றைக் கொணர்ந்து அவருக்குக் காட்டினார். அத் தொல்லெழுத்துக்களைப் படித்துக் காட்டக் கூடிய பயிற்சி வாய்ந்தவர் யாரேனும் உளரோ என்று குருவானவர் தேடியபோது அவ்வாற்றல் படைத்த அந்தணர் ஒருவர், கன்னட நாட்டில் இருப்பதாகக் கேள்வியுற்று அவரை வரவழைத்தார். அந்தணர் ஏடுகளைப் படித்து நாம் மேலே கண்ட விளக்கங்களைக் கூறினார்.

கி. பி. 1122இல் ஒரு இந்திய அத்தியட்சர் ரோமாபுரிக்குச் சென்றபோது, புனித தோமையர் அடக்கம் பண்ணப்பட்டிருந்த நகரை ஆண்ட மன்னர் புனித தோமை நகரையே கோவிலுக்கு மானியமாக வழங்கிவிட்டார் என்று திட்டமாகக் கூறியதாகச் செய்தி ஒன்று உள்ளது. மயிலை, வெவ்வேறு மன்னர்களின் ஆட்சிக்குள் மாறிமாறிச் சென்றபோது இந்தக் கோவில் மானியம் புதுப்பிக்கப் பட்டிருக்கக்கூடும். —(Journal and Proceedings, Asiatic Society of Beugal (New Service) Vol. 19, 1923. No. 5 pp. 153-236.)

மயிலாப்பூரும் அதைச் சுற்றியிருந்த இடமும் விஜயநகரப் பேரரசுக்குக் கீழ் வந்தபோது அப் பேரரசை ஏற்படுத்திய ஆதிக்கர்த்தாக்களாகிய ஹரிஹரர், புக்கர் என்ற இரு சகோதரரில் ஒருவராகிய புக்கர், மயிலைக் கோவிலின் மானிய சாசனத்தைப் புதுப்பித்தார் என்பதற்குப் போதிய சான்று நமக்குக் கிடைத்துள்ளது.

வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள பள்ளிக்கொண்டா என்ற ஊரில் கிடைத்துள்ள கல்வெட்டு ஒன்றன் மூலம், இவ்வுண்மையை நாம் அறிய முடிகிறது. 1923–26-ம் ஆண்டிற்குரிய தென்னிந்திய வருடாந்தர சிலாசாசன அறிக்கையில் இதைக் குறித்த குறிப்பு அடங்கியுள்ளது. இந்த இரண்டு மானியங்களையும் குறித்த முழு வரலாறு மோரேஸ் நூலில் பக். 53–56இல் அமைந்துள்ளது.

இதுவரை நமக்குக் கிடைத்த வரலாற்றுச் செய்திகளிலிருந்து, திருவள்ளுவர் கி. மு. 30இல் பிறந்து கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனக் கூறும் அறிஞர்களாயினும் சரி, அதற்குப் பிந்திய காலத்தில் வாழ்ந்தவரே எனக் கூறும் அறிஞர்களாயினும் சரி, அவர்கள் யாவரும் 'வள்ளுவர்க்கு இயேசு பெருமானின் அடியார்களுடன் தொடர்பு இருந்திருக்கவேண்டும்' என்ற கருத்தை மட்டும் மறுக்க முடியாது என்பது திண்ணமாகிறது. ஆகவே வள்ளுவர்க்கும் இயேசு பெருமானின் அடியவர்களுக்கும் உள்ள திட்டமான தொடர்பு, வரலாற்றுக் குறிப்புகளால் உறுதிப் படுத்தப்படுகிறது எனலாம்.

இங்கு திருக்குறள் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, திருக்குறளை உலகமறியச் செய்தவரும், தன்னை ஒரு 'தமிழ் மாணவன்' என்றே அழைத்துக்கொண்டவருமான ஜி. யூ. போப் என்

னும் ஆங்கிலப் பாதிரியாரின், கூற்றும் நோக்கத் தக்கது.

" திருக்குறளின் ஒப்பற்ற ஆசிரியர் இனவேறு பாடு பாராட்டாதவர் என்பதையும், அவருடைய சிறந்த நண்பர் திரைகடல் மீது செல்லும் கப்பல் தலைவர் என்பதையும், அவர் சாந்தோமில் வசித்த வர் என்பதையும், அவர் சமய ஆராய்ச்சியில் சிறந்த தத்துவங்களையே தெரிந்துகொள்பவர் என்பதை யும், கிறித்தவ சமயத்தின் ஆதிக்கம் சுற்றிலும் பரவியிருந்த சூழ்நிலையில் அவர் வாழ்ந்தார் என் பதையும், அவரியற்றிய நூலின் பல பகுதிகள் மிகவும் வியக்கத்தக்க முறையில் கிறித்தவக் கருத் துக்களையே கொண்டுள்ளன என்பதையும் நினைவு கூரும்போது, புலவருக்குப் பக்திப்பரவசம் ஊட்டின வற்றில் கிறித்தவத் திருமறையும் இருந்திருக்க வேண்டுமென்று எவ்வித ஐயத்திற்குமிடமின்றி யான் உறுதியாகக் கூறக்கூடும்."

# 5. தடுப்புச் சுவர்கள்

மேலேயுள்ள போப்பையர் கூற்றில், திருவள்ளு வர்க்குப் பக்திப் பரவசம் ஊட்டியவை வேறு பலவும் இருந்தனவென்னும் குறிப்பும் உள்ளது. இவ்வாறு போப்பையர் நினைப்பதற்குக் காரணமாய் இருந் தவை எவை?

1. உரையாசிரியர்களின் விளக்கங்கள்
2. பெயர்
3. மொழி
4. கருத்து
5. பண்பாடு.

இவைகளைச் சற்று ஆழமாக நோக்குவோம்.

## 1. உரையாசிரியர்களின் விளக்கங்கள்

இன்று நாம் திருக்குறளைப் படிப்பதற்குக் கருவி யாய் இருப்பவை உரையாசிரியர்களின் விளக்க வுரைகள். உரையாசிரியர்களின் விளக்கமின்றேல் நாம் திருக்குறளை நன்முறையில் அறிந்துகொள்ள முடியாதெனலாம். ஆனல் உரையாசிரியர்களின் நிலையையும் நாம் உள்ளத்திற் கொள்ளவேண்டும்.

திருக்குறள் எழுதப்பட்டு ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் எழுதப்பட்ட உரைகளே நமக்குக் கிடைத்துள்ளன. ஆயிரம் ஆண்டு வேற்றுமை, திருக்குறளுக்கும், உரைகளுக்கும் இடையே இருக்கிறது. திருவள்ளுவர் என்ன கருத்தில் நூலை எழுதினாரோ, அதே கருத்தை உரையாசிரியர்களால் உணர முடியும் என எதிர்பார்க்க முடியாது. தங்களால் உணர்ந்துகொள்ள முடியாத பகுதிகளுக்கு, உரையாசிரியர்கள், தாங்கள் உணர்ந்துகொண்ட அளவில் உரை எழுதுவதே இயல்பு. ஆகவே நூலாசிரியர் கருத்துக்கும், உரையாசிரியர் கருத்துக்கும் முரண்பாடு இருக்க வாய்ப்புண்டு. நூலாசிரியரின் கருத்துக்கு முரண்பட்ட உரைகளைக் கற்கும் மக்களும், அம் முரண்பாட்டிலிருந்து விடுபட வழியில்லையல்லவா? ஆகவே இன்று உரையாசிரியர் மூலமாகத் திருக்குறளைக் கற்று, 'முழுவதும் உணர்ந்தோம்' என எண்ணும் மக்களின் கருத்துக்கும், திருக்குறளை இயற்றிய ஆசிரியரின் கருத்துக்கும் மிகுந்த வேறுபாடும் முரண்பாடும் இருக்க வாய்ப்புண்டு. இதைப் பற்றி, டாக்டர் மா. ராசமாணிக்கனார் அவர்களின் கருத்தை நோக்குவோம்.

"திருவள்ளுவர் காலத்திற்கும் உரையாசிரியர் காலத்திற்கும் இடையில் ஏற்பட்ட சமுதாய மாறுதல்கள் பல. அரசியல் மாறுதல்கள் பல. வள்ளுவர் காலத்தில் சாதி இல்லை. சாதிகள் பல்கிப் பெருகிய காலத்தில் - ஒரு சாதிக்கு ஒரு நீதி கூறிய காலத்தில் – வாழ்ந்த உரையாசிரியர்கள், முன்பு கூறப்பெற்ற தொல்காப்பிய உரையாசிரியர்கள் போலவே, தத்தம் சமயச் சார்பு பற்றியும், தம் கால நிலைக்கு ஏற்பவும், தாம் கற்ற நூல்களுக்கு ஏற்பவும், தமக்குப் பல நூறாண்டுகளுக்கு முற்பட்ட திருக்குறளுக்கு உரை வரைந்தனர் என்பதை நாம்

நன்குணர்தல் வேண்டும். இந்த உண்மையை ஒவ்வொருவர் உரையும் நமக்கு அறிவுறுத்துகின்றன.

'ஐந்தவித்தான்' என்று தொடங்கும் குறளுக்கும், 'தென்புலத்தார்' என்று தொடங்கும் குறளுக்கும் பரிமேலழகர் வரைந்துள்ள உரையின் பொருந்தாமையே மேற்கூறிய உண்மையைப் புலப்படுத்துவதாகும். ஆதலின் திருக்குறளின் கருத்தை உள்ளவாறு அறிய விரும்புவோர், அவர் காலத்திலிருந்த சங்க நூல்களையும், சமய நூல்களையும், பிற நூல்களையும் நன்கு பயின்ற பின்னரே உரையாசிரியர்களின் உரைகளைப் படித்துக் குறளின் கருத்தைத் தெளிதல் நல்லது.''

—டாக்டர் மா. இராசமாணிக்கனர்,
தமிழ் இலக்கிய வரலாறு சங்ககாலம்-பக். 126

ஆகவே இடைக்கால, உரை எனப்படும் வண்ணக் கண்ணுடியை நீக்கி நோக்குகிறவர்களுக்கேயல்லாது, மற்றையவர்க்கு வள்ளுவத்தின் மெய் வண்ணத்தைக் காணமுடியாது. கருப்புக் கண்ணுடியை அணிந்து நோக்குகிறவர்களுக்குப் பொருளும் கருப்பாகவே தோற்றமளிக்கும் என்பது மெய்யல்லவா? ஆகவே இடைக்காலத்தில் ஏற்பட்ட திருக்குறள் உரைகள், குறளை அறிந்துகொள்ள ஓரளவு பயன்படுகின்றன என்பதுடன், குறளாசிரியரின் கருத்துக்கு முரண்பட்ட கருத்தையும் நமக்கு ஏற்றிவிடுகின்றன என்பதையும் மறுப்பதற்கில்லை.

## 2. பெயர்

தமிழகம் என்ற நிலையில் சங்க காலத் தமிழகத்திற்கும், தற்காலத் தமிழகத்திற்கும் வேற்றுமையுண்டு. சங்க காலத்தில், சேர சோழ பாண்டியர்,

ஆகிய முப்பெரு வேந்தர்களின் நாடு, தமிழகம் என அழைக்கப்பட்டுத் தமிழ் மொழியும் பயிலப்பட்டு வந்தது. ஆனால் இடைக்காலத்தில் தமிழகத்தின் முதல் பிரிவான சேர நாடு, மற்ற இரு நாடுகளிலு மிருந்து பிரிக்கப்பட்டு, மொழியாலும் பண்பாலும் வேறுபடுத்தப்பட்டுவிட்டது. தமிழ் மொழியுடன் வடமொழி கலந்து, மலையாளம் எனப் புது மொழி யாகவும் மாற்றப்பட்டுவிட்டது. தற்காலத்தில் தமிழ்நாடு என்பது சோழ நாடு, பாண்டிய நாடு ஆகிய இரண்டை மட்டுமே குறிக்கிறது. ஆகவே சிதைக்கப்பட்ட தமிழகத்தில் வாழும் நமக்கும், சிதைக்கப்படாமல் ஒற்றுமையுடன் விளங்கிய சங்க காலத் தமிழர்களுக்கும் இவ்வகையில் சில வேற்று மைகள் இருப்பது இயல்பு. அடுத்தது, சங்ககாலச் சமயங்களுக்கும் தற்காலத்திய சமயங்களுக்கும் இடையேயுள்ள வேற்றுமையாகும். சங்ககாலச் சமயங்களின் தன்மை வேறு. தற்காலச் சமயங் களின் தன்மை வேறு. இதை விரிப்பின் பெருகும். மூன்றாவதாக நாம் காணப்போவதே மிக முக்கிய மானது. இங்கு நமது ஆய்வுடன் நேரடித் தொடர் புடையது.

சங்க காலத்தில் நம் தமிழகத்தில் தோமையர் மூலமாகப் பரவிய இயேசுவின் சமயத்திற்கும், தற்காலத்தில் நாம் காணும் கிறித்தவ சமயத்திற் கும் மிக அதிகமான வேறுபாடு உண்டென்பது நாம் ஆழ்ந்து நோக்கத்தக்கது. தோமையரைப் பின் பற்றிய இயேசுவின் அடியவர், திருமறைக் கூற்றின் படி 'சாட்சிகள்' என்று அழைக்கப்பட்டிருப்பர் என் பதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை. ஏனெனில் 'கிறித்தவர்' என்பது பிறகாலத்தில் ஏற்பட்ட பெயர் என்பதுடன், தோமையரோ அவர் கூட்டத்தினரோ அறிந்திருக்கவே முடியாத ஒரு பெயருமாகும். இன்னொரு குறிப்பும் இங்கு நோக்கத்தக்கது.

கிறித்தவத் திருமறையை நம் தமிழகத்தில் 17 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். ஆகவே திருமறையின் தமிழ் மொழி 17ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதாகும். அதிலும் தமிழின் மறுமலர்ச்சிக் காலமாகிய, 20 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு முன்னும், 17 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும், தமிழ் வடமொழியுடன் அதிக மாகக் கலந்த மணிப்பவள நடை உயர்வாக எண்ணப்பட்ட இடைக்காலத்தில், இதன் மொழி பெயர்ப்பு வெளியே வந்துள்ளது. ஆகவே தமிழ் மொழியின் மறுமலர்ச்சிக் காலமாகிய இற்றைய நாளில் 'கிறித்தவத் தமிழ்' என நம்மால் ஒதுக்கக் கூடிய, வடமொழி கலந்த தமிழை அம் மொழி பெயர்ப்பு உருவாக்கிற்று எனலாம். இக் கிறித்தவத் தமிழில், அதாவது வடமொழி கலந்த மணிப்பவள நடையில், சங்க காலத்திய இயேசுவின் அடியவர் களுக்குக் கொடுக்கப்படக்கூடிய பெயரே 'சாட்சி கள்' என்பது. இது பொருந்துமா?

சங்கத் தமிழ் வடமொழிக் கலப்பற்றது. ஆகவே சங்ககாலத்திய இயேசுவின் அடியவர்களுக்கு வடமொழிக் கலப்புடைய பெயர் உறுதியாக இருந் திருக்க முடியாது. அப்படியானால் தோமையரைப் பின்பற்றிய, இயேசுவின் அடியவர்களுக்கு என்ன பெயர் இருந்திருக்கக் கூடும்?

'சாட்சிகள்' என்ற வடமொழிச் சொல்லின் நேர் தமிழ்ச் சொல் எதுவோ, அதுவே அவர்களுக் குப் பெயர் என உறுதியாகக் கூறலாம்.

*வடமொழி - சாட்சி, சாட்சி கூறுகிறவர்கள் - சாட்சிகள்*

*தமிழ் - சான்று, சான்று கூறுகிறவர்கள் - சான்றுகள்*

'சான்றுகள்' என்பது சான்றாக விளங்கும் அஃறிணைப் பொருட்களுக்கும், சான்று கூறும்

உயர்திணை மனிதனுக்கும் பொதுவாக இருப்பதால், மனிதர்களை மட்டுமே பிரித்துக் காட்டக்கூடிய சொல்

சான்று + அவன் = சான்றவன்

சான்று + அவர் = சான்றவர்

என்பதுடன், ஆண்மையாகிய வீரத்துடன் சான்று கூறும் செயல்,

சான்று + ஆண்மை = சான்றாண்மை

எனவும் அழைக்கப்பட ஏதுவாகிறது.

ஆகவே சங்க காலத்திய இயேசுவின் அடியவர் 'சான்றவர்' எனவும், அவர்கள் ஆண்மையுடன் இயேசு பெருமானாகிய ஐந்தவித்தானுக்குச் சான்று கூறும் செயல் 'சான்றாண்மை' எனவும் அழைக்கப் பட்டிருப்பதே முறை. திருவள்ளுவர்க்கும் இயேசு வின் அடியவர்களுக்கும் தொடர்பு இருந்தது உறுதியே என்பதை முன்னர் கண்டோம். திரு வள்ளுவர் இயேசுவின் அடியவர்களுடன் தொடர்பு கொண்டதுடன் நில்லாது, அக் கொள்கையைத் தாமும் ஏற்றுக்கொண்டிருப்பாரானால், சான்றவர், சான்றாண்மை ஆகிய இரண்டையும் வற்புறுத்தித் தெளிவாகக் கூறவேண்டியது அவருடைய கடமை யாகும். அவ்வகையில் திருக்குறளில் சான்று உண்டா? என நோக்கினால், உண்டு என்பதைச் சான்றாண்மை என்ற அதிகாரமே நமக்குக் கூறு கிறது. அவ்வதிகாரத்தின் இறுதிக் குறட்பாவினுள் இதைத் தெளிவாகக் காட்டுகிறார் வள்ளுவர்.

*சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்*
*தாங்காது மன்னோ பொறை.*

சான்றவரைக் கூறும் இவ்வதிகாரத்திலேயே வள்ளு வர், சான்றவரின் மறுபெயராகச் 'சான்றோர்' எனவும் கூறுகிறார்.

குணநலம் சான்ரோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

ஆகவே, சான்றின் அடிப்படையில் சான்றவர், சான்ரோர் என்ற பெயர்கள் தோன்றுகின்றன என்பது எவ்வித ஐயத்திற்கும் இடமின்றித் தெளிவாகிறது. இதற்கு விளக்கமாக இந்நூலின் 53, 54ஆம் பக்கங்களும் அமைந்துள்ளமை நோக்கத்தக்கது.

ஆகவே தற்காலக் கிறித்தவத் தமிழில் 'சாட்சிகள்' என்ற பெயரும் சங்ககாலத் தனித் தமிழில் 'சான்ரோர்' என்ற பெயரும் சுட்டும் பொருள் ஒன்றே என்பது தெளிவு. சான்று கூறு பவர் சான்ரோர் என அழைக்கப்படுவாரா? என ஐயங்கொள்ளுவோர், சைவசமயப் பெரியாரும், தற்காலத் தமிழ் மறுமலர்ச்சிக்கு உறுதுணையாயிருந் தவருமான, ஆசிரியர் மறைமலையடிகளாரின் கருத் தினையும் நோக்கித் தெளிக.

"இருதிறத்தார் வழக்குகளையுங் கேட்டு நடு நின்று சான்று சான்று கூறுவாரான சான்ரோரும் வந்து தாமிருக்குமிடத்தே வீற்றிருந்தனர்."

—மாணிக்கவாசகர் வரலாறு-பக். 79

## 3. மொழி

மேலே நாம் காணும் குறிப்பு, சங்க காலத்திய இயேசு பெருமானின் அடியவர்களின் மொழி நடைக் கும், தற்கால அடியவர்களின் மொழி நடைக்கும் இடையேயுள்ள தொடர்பை எடுத்துக்காட்டுகிறது. இப்படியே இன்று தமிழகக் கிறித்தவர்களிடையே பெருவழக்காக வழங்கப்படும், சுவிசேஷம், மனஸ் தாபம், மனுஷன், சுவிசேஷ ஊழியம், ஞானஸ்நா னம் முதலியன, தமிழ்மக்களுக்கு விளங்கிக்கொள்ள

முடியாக் கிறித்தவத் தமிழ் நடையாகும். அப்படியே கடவுள் மனிதனுக்குக் கொடுத்த 'கட்டளை'யைக் 'கற்பனை' என்ற பெயரால் அழைக்கின்றனர். கட்டளை எங்கே! இவர்கள் கூறும் கற்பனை எங்கே! கட்டளையையே இவர்கள் கற்பனையாக்கிவிட்டார்கள் என்றால் மற்றவற்றைப் பற்றிக் கூறுவானேன்!!

ஆகவே இன்றைய கிறித்தவத் தமிழையும், சங்க காலத் தமிழையும் ஒப்பிட்டு நோக்கி உவமை கூறினால், அது தமிழ் மொழிக்கும் தமிழிலிருந்து பிரிந்து வேற்று மொழியாகிவிட்ட மலையாள மொழிக்கும் இடையேயுள்ள தொடர்பே பொருந்தும். மலையாளம் வேறு மொழி, தமிழ் வேறு மொழி. அப்படியே இன்றையக் கிறித்தவத் திருமறை வேறு மொழி; சங்ககாலச் சான்றோர் மறை வேறு மொழி எனலாம். (கிறித்தவத் திருமறையின் மொழி நடையில் ஓரளவு திருத்தம் செய்த பெருமை கத்தோலிக்கப் பெருமக்களுக்கு உண்டு. அண்மைக் காலத்தில் வெளிவந்த அன்னாரின் புதிய ஏற்பாடே இதற்குச் சான்று. இது தமிழ் அறிஞர் பலரின் பாராட்டைப் பெற்றது.)

ஒரே பொருளைக் குறிப்பதில் தமிழ் மொழியும் மலையாள மொழியும் சொல்லமைப்பால் வேறுபடினும் அடிப்படைக் கருத்து ஒன்றாக இருப்பது போலவே கிறித்தவத் தமிழும், சங்கத் தமிழும் மொழி நடையில் வேறுபடினும் அவற்றின் உட்பொருள் ஒன்றே.

## 4 கருத்து

அடுத்து நோக்க வேண்டிய குறிப்பு – மொழி பெயர்ப்புக் கருத்து ஆகும். இன்று நமக்குக் கிடைக்கும் கிறித்தவத் திருமறையின் மொழி

நடையையே இதுவரை பார்த்தோம். இப்போது நோக்க வேண்டியது மொழிபெயர்ப்பில் கருத்து ஆகும்.

உள்ளத்தில் தோன்றியவைகளை வெளிப்படுத்த மொழி பயன்படுகிறது. ஆயினும் உள்ளத்தில் தோன்றிய அத்தனையையுமே மொழி வழியாக வெளிப்படுத்திவிடலாம் எனக் கூற முடியாது. மொழியும் ஓரளவு குறைபாடுடையதே. உள்ளத்தில் தோன்றிய கருத்து ஒன்றை, ஒருவர் எழுதி வெளிப்படுத்தும்பொழுது, அதன் முழுமை மேலும் ஓரளவு குறைகிறது. வெளிப்படுத்தப்பட்ட எழுத்தைப் பிறிதொருவர் படித்து, அதன் கருத்தையுணருங்கால், கருத்து மேலும் அதிகமாகக் குறைவடைகிறது. ஏனெனில், படிப்பவர் இவருடைய சொந்த அநுபவத்துடன் இணைத்துக் கருத்தைப் புரிந்துகொள்ளுகிருரேயன்றி, எழுதியவர் எண்ணத்தையே படிப்பவரும் அடைகிருர் எனக்கொள்ள இயலாது. இப்பொழுது படிப்பவர் அதை வேறு மொழியில் எழுதுகிருர், எனக்கொண்டால் கருத்து மேலும் அதிகமாகக் குறைவுபட ஏதுவுண்டு. ஏனெனில் ஒரு மொழியின் கருத்தை வேறு ஒரு மொழியில் கூறும்பொழுது, அங்கே பல இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. அந்த வேறு ஒரு மொழியிலிருந்து மூன்ருவதாக ஒரு மொழியில் மொழிபெயர்க்கப்படுமாளுல் அக்கருத்து எவ்வளவு மாற்றமடையும் என்பது சொல்லத் தேவையில்லையல்லவா?

மேலே கூறிய அத்தனை மாற்றங்களையும் அடைந்த பின்னரே, இயேசு பெருமானின் அருள் மொழிகள் திருமறைக் கருத்தாக இன்று நமக்குக் கிடைக்கின்றன.

1. இயேசு பெருமான் வெளிப்படுத்தியவை
2. சீடர்கள் ஒவ்வொருவரும் கேட்டவை
3. சீடர்கள் ஒவ்வொருவரும் வெளிப்படுத்தியவை
4. அவர்களிடம் பலர் கேட்டவை
5. கேட்ட பலர் வெளிப்படுத்தியவை
6. அவை கிரேக்கம் போன்ற மொழிகளில் எழுதப்பட்டமை
7. கிரேக்க மொழியிலிருந்து கிறித்தவத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டமை
8. கிறித்தவத் தமிழிலிருந்து மற்றத் தமிழர் புரிந்துகொள்ளல்
9. புரிந்துகொண்ட அளவுக்குச் சங்கத் தமிழுடன் இணைத்துப் பார்த்தல்.

இங்கு திருவள்ளுவரையும், 20-ம் நூற்றுண்டுத் தமிழனையும் ஒப்பிட்டால் இடையே 5 படிகள் உள்ளன. திருவள்ளுவர் இயேசு பெருமானின் நேர் சீடருடன் தொடர்பு கொண்டவராஞல், இயேசு பெருமானின் பொய்தீர் ஒழுக்க நெறியைப் பற்றிய அவருடைய கருத்துக்கும் மொழி நடைக்கும், நம்முடைய கருத்திற்கும் மொழி நடைக்கும் வேற்றுமை இருந்தே தீரல் வேண்டும் என்பது சுட்டாமலே விளங்கக் கூடிய ஒன்று.

## 5. பண்பாடு

இன்று தமிழகத்தில் நம்மிடையே இருக்கும் கிறித்தவத்திற்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும் இணைப்பை எதிர்பார்க்க முடியாது. இன்றுள்ள கிறித்தவம்

தமிழர்களுக்கு எவ்வாறு கிடைத்தது? தமிழ்மொழி பேசப்படும் சோழ பாண்டிய நாட்டிலுள்ள இன்றையக் கிறித்தவர்கள் அத்தனை பேரும், ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகட்கு உட்பட்ட காலத்தில், தாங்களாகவோ அல்லது தங்கள் முன்னோர் மூலமாகவோ கிறித்தவர்கள் ஆனவர்களே. இவர்களுக்குக் கிறித்தவத்தை அறிமுகப்படுத்தியவர்கள், வாணிபத்திற்காகவோ அல்லது ஆளும் பொருட்டோ வந்த ஐரோப்பியர்களே. ஆசியாவில் தோன்றிய கிறித்தவம், ஐரோப்பாவுக்குச் சென்று, ஏறத்தாழ ஆயிரத்து ஐநூறு ஆண்டுகள் அங்கிருந்து-அந்தப் பண்பாட்டில் இணைந்து, பின்னர் மீண்டும் ஆசியாவிலுள்ள நம் நாட்டிற்கு வந்துள்ளது. அதைப் பின்பற்றுபவர்களே இன்று நம்மிடையே வாழும் கிறித்தவர்கள்.

ஆனால் சான்றோர்கள் என அழைக்கப்படும் சங்க காலத்திய இயேசு பெருமானின் அடியவர்களோ, பண்பாட்டில் இக் கிறித்தவர்களினின்றும் மாறுபட்டவர்கள் எனலாம்.

எவ்வாறு?

இயேசு பெருமானுடன் உறைந்து, அவர் வாய்மொழியை நேரிடையாகக் கேட்ட, இயேசு பெருமானின் நேர் சீடராகிய தோமையரிடம், நேரிடையாக இயேசு பெருமானைப் பற்றிய சான்றினைக் கேட்டுச் சான்றோரானவர்களே சங்க காலச் சான்றோர். அச் சான்றோர் இயேசு பெருமானின் வழியைப் பின்பற்றுகிறவர்களாகவும், ஆனால் தமிழ்ப் பண்பாடு சிறிதும் மாறாத நற்றமிழர்களாகவுமே விளங்கி இருப்பர் என்பதில் எவ்வித ஐயமும் இருக்கக் காரணம் இல்லை. சங்க காலத்தில் இயேசு பெருமானின் அடியவராகிய தோமையருடன், திரு

வள்ளுவர் நெருங்கிப் பழகித் தாமும் ஒரு சான்றோ ராக மாறியிருப்பாரானால், இயேசு பெருமானின் கருத்துக்கள் வள்ளுவர் வழியாக எம்முறையில் வெளிவந்திருக்கும். விதை மட்டுமே தோமையரிடம் பெற்றதாக இருக்கும். விதை மரமாவதற்கு வேண்டிய மற்றையப் புறக்கருவிகள் அத்தனையும், தமிழ்ப் பண்பாட்டில் ஊறியதாகவே இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்வகையில் இயேசுவின் நேர் சீடராக இல்லாத, ஆனால் இயேசுவின் நேர் சீடருடன் தொடர்பு கொண்டு, கிறித்தவத் திருமறையின் புதிய ஏற்பாட்டில் பெரும் பகுதியை எழுதி, கிறித்தவத்திற்கே ஒரு புத்துணர்ச்சியை ஏற்படுத்திய, பவுலாகிய சின்னப்பரைத் திருவள்ளுவருடன் ஒப்பிடலாம். இருவரும் இயேசு பெருமானுடைய நேர் சீடருடன் தொடர்புகொண்டவர்களே எனக் கருதினால், யூதேய நாட்டில் சின்னப்பர் எவ்வாறு இயேசுவின் விடுதலைக் கொள்கையையும், யூத சமயத்தையும், கிரேக்க ஞானத்தையும் இணைத்தாரோ, அவ்வாறே தமிழகத்தில், இயேசுவின் விடுதலைக் கொள்கையையும், தமிழர் ஞானத்தையும், இங்குள்ள பண்பாட்டையும் இணைக்க வேண்டியது வள்ளுவருடைய கடமையாகும். அதையே வள்ளுவரும் செய்துள்ளார் எனத் துணிந்து கூற இடம் உள்ளது. இவ்வகையில் சின்னப்பரின் விளக்கங்களுக்கும், திருவள்ளுவரின் விளக்கங்களுக்கும் வேற்றுமை காணப்படலாம். காணப்பட வேண்டியது இன்றியமையாததுமாகும். புலால் மறுத்தலையே தங்கள் அடிப்படைக் கொள்கையாகக் கொண்ட சமணத் தமிழர்களிடையே, புலால் உண்ணும் கொள்கை நிலைபெற முடியுமா? உறுதியாக முடியாது. திருவள்ளுவரும் பிறப்பில் சமணராயிருந்திருப்பின், அவர் தோமையரின் கொள்கையைப் பின்பற்றியதற்காகப்

புதிதாகப் புலாலை உண்டுவிட முடியுமா? புலால் உண்ணுமாறு மற்றவர்களைக் கூற முடியுமா? ஒரு நாளும் முடியாது. இந் நாட்டிற்கேற்ப புலால் உண்ணக் கூடாது என மற்றவர்களுக்குக் கூற வேண்டியதுடன், தமக்கு இயேசு பெருமானின் பொய்தீர் ஒழுக்க நெறியை விளக்கிக் கூறிய, தோமையரிடம் புலால் உண்ணும் வழக்கம் இருந் திருக்குமாயின், அதையும் திருத்தி இந்நாட்டிற் கேற்ப உண்ணுதிருக்குமாறு கேட்டுக்கொள்ள வேண்டியதே அவர் கடமையுமாகும். அப்படியே வள்ளுவரும் செய்திருக்கக் கூடும் என்பதை, ஏலேலசிங்கனையும் தோமையரையும் இணைக்கக் கூடிய செவிவழிச் செய்தி நமக்கு எடுத்துக்காட்டு கிறது. இப்படியே மற்றைய தமிழ்ப் பண்பாடுகளை யும் பின்பற்றுமாறு தோமையர் கேட்டுக்கொள்ளப் பட்டிருப்பார் என்றே நாம் நம்பலாம்.

ஆனால் தற்காலக் கிறித்தவர்களின் நிலையோ இதற்கு நேர் மாறானதாகும். வந்தவர்களைத் தங்கள் பண்பாட்டைப் பின்பற்றும்படி கேட்டுக் கொள்ளுவதற்கு மாறாக, தாங்கள் தங்கள் பழைய பண்பாட்டை எல்லாம் இழந்து, தாங்கள் தமிழர் என்பதையும் மறந்து, கண்ணை மூடிக்கொண்டு வந் தவர்களின் பண்பாட்டைப் பின்பற்றினர்; பின் பற்றுகின்றனர். ஆகவேதான் மற்றத் தமிழர்கள், தமிழர்களாகிய இக்கிறித்தவர்களைத் தங்களுடன் இணைத்து, ‘இவர்களும் தமிழர்களே’ என ஏற்றுக் கொள்ளவே பின்னடைகின்றனர். இக்கிறித்தவர் களும், உடலால் தமிழர்களேயன்றி உள்ளத்தாலும், பண்பாட்டாலும் அன்னியர்களே. அன்னியர்களை இந்நாட்டு மக்கள் சற்று ஐயக்கண் கொண்டு நோக்குவது இயல்புதானே. அந்நிலையிலேயே இவர்களும் நோக்கப்படுகின்றனர். இவர்களோ

அதை எண்ணிப் பார்ப்பதாகத் தெரியவில்லை. மிகச்சிலரே இதற்கு விதிவிலக்கு எனலாம்.

அண்மைக் காலத்தில் எனக்கு ஏற்பட்ட அனுபவம் ஒன்றை இங்கு கூருமல் இருக்க முடியவில்லை.

தமிழகத்தில் சான்றோர் கூட்டம் ஏற்படக் காரணமான தோமையரின் திருப் பெயரைக் கொண்ட குரு ஒருவருடைய இல்லத்திற்குச் சென்றிருந்தேன். அப்போது அவர் வீட்டில் இல்லை. அவருடைய மழலைச் செல்வங்கள் இரண்டும் வீட்டில் இருந்தனர். என்னைக் கண்ட சிறிது நேரத்தில் நகையாடத் தொடங்கினர். காரணம் என்ன என ஆழ்ந்து நோக்கினேன். அவர்கள் நகைப்புக்குக் காரணமானவை, எனது உடை; நான் பேசிய மொழி. அச்செல்வங்கள் இரண்டும் முழு ஆங்கிலப் பண்பாட்டில் வளர்க்கப்படுகின்றனர். வீட்டில் பேசுவதும் ஆங்கிலமே. ஆகவே தமிழ் உடையில் தமிழ் பேசிக்கொண்டு வரும் தமிழன் ஒருவனைக் கண்டால் அவர்களுக்கு நகைப்பே எஞ்சுகின்றது. அவர்களின் தாய் ஆங்கிலமாது என எண்ணிவிட வேண்டாம். தாயும் தமிழ்ப்பெண்; தந்தையும் தமிழர். பிள்ளைகளும் தமிழ்ச்செல்வங்களே. ஆனல், அந்தோ! தமிழ் நாட்டில் வாழும் தமிழர்களாகிய அவர்களின் உள்ளம் தமிழ் அறியா உள்ளம். அவர்களின் பண்பாடும் தமிழ்ப் பண்பாட்டிற்கு முரண்பட்டது. இவ்வுள்ளங்களையும் பண்பையும் கொண்ட இவர்கள் தமிழர்களின் நெஞ்சிலே எவ்வாறு இடம்பெற முடியும்? இன்றையக்கிறித்தவர்களில் பெரும்பகுதி இவ்வகையினரே எனலாம்.

ஆகவே சங்ககாலச் சான்றோரை, இக்காலக் கிறித்தவர்களை அளவுகோலாகக் கொண்டு, நோக்க

முடியாது என்பது திண்ணம். சான்ருேரின் பண்பாடு வேறு; கிறித்தவர்களின் பண்பாடு வேறு. ஆயினும் இவ்விரு கூட்டத்தினரின் அடிப்படைக் கொள்கை ஒன்றே என்பதில் மட்டும் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை. இதுவரை நாம் நோக்கியவைகளைத் தொகுத்துப் பார்த்தால், திருக்குறள், இயேசுவின் அடியவராகிய சான்ருேரின் கொள்கையாகவே இருந்தாலும், நாம் அதை அறிந்து கொள்ள முடியாதபடி தடுப்பவை:—

1. உரையாசிரியர்களின் விளக்கங்கள்
2. பெயர். சான்ருேர்—கிறித்தவர்
3. மொழி. சங்கத்தமிழ்—கிறித்தவத் தமிழ்
4. கருத்து. தோமையர் கருத்து—பலபடி கடந்து வந்துள்ள கருத்து
5. பண்பாடு. தமிழ்ப்பண்பாடு—ஐரோப்பியப் பண்பாடு.

இவ்வைந்து தடுப்புச் சுவர்களில் சில போப்பையரைத் தடுத்திருக்கக் கூடும்.

ஆகவே அவர் திருவள்ளுவரின் உள்ளத்தை முழுமையாக அறியமுடியா நிலையில் இருந்திருக்கலாம். இருப்பினும் திருக்குறளைக் கற்ற தமிழ்க் கிறித்தவர்களைவிட, அவர் எத்தனையோ படிகள் அதிகம் கடந்து, வள்ளுவரின் உள்ளத்தை உணர்ந்தார் என்பதை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். அதற்குக் காரணம், தமிழ்க் கிறித்தவர்கள் தங்கள் உள்ளத்தில், தாங்கள் ஆங்கிலேயர்களே என நினைக்கும் பொழுது, ஒரு ஆங்கிலேயர், தம்மை ஒரு 'தமிழ்மாணவன்' என அழைக்க வேண்டுமானுல், அவர் உள்ளத்தால் தமிழராக விளங்கியமையே யாகும். ஆகையால்தான் அவரைத்

திருக்குறள் மட்டுமல்லாது, திருவாசகமும், நாலடியாரும் ஈர்த்தன. இன்றையத் தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்திட்டபெருமை, கால்டுவெல், போப், வீரமா முனிவர் போன்ற மேல்நாட்டுப் பாதிரிகளைச் சாரும் என்பதை மறுக்கும் தமிழர் யாரும் இருக்கமாட்டார்கள் என்றே நம்புகிறேன். தமிழின் சிறப்பைப் அவர்கள் ஆங்கிலத்தில் எழுத, தமிழைப் படிக்காது பழித்த தமிழர்கள், ஆங்கிலத்தில் அதைப் படித்துத் தமிழின் பெருமையை உணர்ந்து, பின் தமிழ் வளர்ச்சிக்கு உழைத்தனர் என்பது வரலாறு கூறும் மெய்யாகும்.

இப்போது நாம் மேலே நோக்கிய ஐந்து தடுப்புச்சுவர்களையும் உள்ளத்திற்கொண்டு, அவைகளைக் கடக்கும் சரியான வழியைத் திட்டமிட்டு, அதிகக் கவனமாய்க் கடந்து சென்றால் மட்டுமே, மறைக்கப்பட்டுள்ள மெய்ப்பொருளைக் காண முடியும் என்பதை அன்பர்கள் உளளத்தே கொண்டு, வள்ளுவமாகிய சான்றோர் நெறியையும், விவிலியமாகிய கிறித்தவ நெறியையும், ஒப்பிட்டு நோக்க முன் வருவார்களாக. இனி திருமறையையும் தமிழ் மறையையும் ஒப்பிட்டு நோக்குவோம்.

# 6. சான்றாண்மை

தமிழகத்தில் இயேசு பெருமானின் அடியவர் கூட்டம், 'சான்றோர்' என அழைக்கப் பட்டிருக்க வேண்டும் என்பதைப் பார்த்தோம்.

## சால்பு

இயேசு பெருமான் பகைவர் கையிலகப்பட்ட காலை, அவருடைய சீடர் நடு நடுங்கிப் பல இடங்களிலும் மறைந்து கொண்டனர். அவருள் வீரமிக்கவரான பேதுரு மட்டும், இயேசுவைத் தூரத்தே பின்பற்றி வந்தார். ஆனால் அவரை ஒரு வேலைக்காரப் பெண், அடையாளம் கண்டுகொண்ட போது அவர் தமக்கு இயேசுவைத் தெரியாது எனக்கூறி மறுத்து விட்டார்.

அதாவது ஒரு எளிய வேலைக்காரப் பெண்ணுக்கும் பயந்தார். (லூக்கா 22:56–60 மாற்கு 14: 66-72).

அப்படிப்பட்டவர், இயேசு சிலுவையிலறையப் பட்டு, மரணமடைந்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்த பின் இயேசுவின் உயிர்த்தெழலுக்கு சான்றாக மாறியகாலை, அவர் பழைய,ஒரு வேலைக்காரப் பெண்ணுக்கும் பயந்த பேதுரு அல்லர். அவர் ஒரு புது மனிதர்.

சா.—9

வெளிப்படையாக ஆயிரக்கணக்கான மக்களுக்கு மத்தியில் வீரத்துடன் சான்று கூறினர். (அப் 2:14) மக்களிடம் மட்டுமன்று, அரசாங்க அதிகாரிகள் அவரைக் கைது செய்து விசாரணை நடத்திய போதும், வீரத்துடன் சான்று பகர்ந்தார். அவர்கள் அவரைக் கொலை செய்வதாக மிரட்டிய போதும், சிறிதும் அஞ்சாது ஆண்மையுடன் சான்று பகர்ந்து, சான்று பகர்வதிலே ஆண்மையுடையவராக, அதாவது சான்று+ஆண்மை–சான்ருண்மையுடையவராக விளங்கினர்.

அற்பவேலைக்காரப் பெண்ணுக்கும் பயந்து நடுங்கிய பேதுரு எங்கே? சான்ருண்மையுடன் விளங்கி, எத்தகைய துன்பத்திலும் ஊழிபெயரினும் தாம் பெயராமல் சான்ருண்மைக்கு ஆழி என விளங்கிய பேதுரு எங்கே !!

அப்படியே சான்று பகர்ந்த சான்றவர் அனைவரும் சான்று கூறுவதிலே உயிரை விடத் துணிந்தனரே யன்றி, சான்று கூறுவதை விட்டுவிட மறுத்தனர். இத்தகைய வீர ஆண்மையே சான்று கூறுகிறவர்களுக்கு வேண்டும். அப்போது தான் அவர்கள் உண்மையான சான்றவர்களாக விளங்க முடியும்.

இந்த நிலையில் திருவள்ளுவர் இயேசுவின் அடியவராகிய சான்றோராக விளங்கியிருப்பாரானல், இத்தகைய சான்று கூறுதலின் இன்றியமையாமையைக் கூறியிருக்க வேண்டும்.

சான்று கூறுவது சாதாரணச் செயல் அன்று. ‘பானையில் இருந்தால் தான் அகப்பையில் வரும்’ என்ற பழமொழிப்படி, தம் உள்ளத்தில் அந் நற் செய்தியால் நிறைந்தவர்களே, மற்றவர்களுக்கு அதை எடுத்துக் கூற முடியும். உள்ளம் அந்நற்

செய்தியால் நிரப்பப்படும்பொழுது, அவ்வுள்ளம் எல்லா நற்செயல்களாலும் நிரப்பப்படுகிறது. அவர்கள் எல்லா நற்குணமும் நிறைந்த சால்புடையவர்களாக விளங்குவார்கள். சால்புடையவரே சிறந்த சான்றோராக விளங்க முடியும்.

இவ்வாறு அவர்கள் உள்ளத்தை எல்லா நற்குணங்களாலும் நிரப்பி, அவர்களைச் சால்புடையவராக்கிச் சான்றினை ஆண்மையுடன் சொல்லும் திறனை அளிப்பவரே ஆவியானவர்.

பரிசுத்தாவியைப் பெற்று, உள்ளம் நிரம்பியவர்கள் எல்லா நற்குணங்களாலும் நிரப்பப்படுகின்றனர். எல்லா நற்குணங்களாலும் நிரப்பப்பட்டவர்கள் தாங்கள் அடைந்த இன்பத்தை மற்றவர்களும் அடையும் பொருட்டு, மற்றவர் பால் அன்புள்ளவராக, அந் நற்செய்தியை மற்றவர்களுக்கும் சான்றாக அறிவிக்கிறார்கள். அவ்வாறு சான்று கூறுகிறவர்கள் எதற்கும் அஞ்சாது ஆண்மையுடன் கூறும் காரணத்தால் அவர்கள் சான்றுண்மையுடையவர்களாகத் திகழ்கின்றனர்.

ஆகவே ஒருவன் பரிசுத்தாவியால் நிரப்பப்பட்டவுடன் எல்லா நற்குணங்களும் அவனில் தோன்றுகின்றன. எல்லா நற்குணங்களும் பெற்ற சால்புடையவன் ஆண்மையுடன் சான்று கூறுகிறான்.

ஒருவன் பரிசுத்தாவியைப் பெறுவதும், சால்புடையவனாக மாறுவதும் உள்ளத்தில் நடைபெறும் செயல். வெளியுலகுக்கு அது தெரியாது.

ஆனால் பழைய மனிதன் மாறி, புதிய நிலையில் ஆண்மையுடன் கூடிய சான்றோனாக விளங்கும் புது மனிதனே வெளியே தெரிகிறான்.

பழைய மனிதனுகிய பயந்த பேதுரு நமக்குத் தெரியும். புதிய சான்றோனுகிய சால்புடைய பேதுரு எவ்வாறு வந்தார்?

இதுவே இடைப்பட்ட செயல்.

வானருட் சக்தியின் செயல்.

ஆகவே ஒருவன் சான்று கூற, சால்பாகிய குணம் வேண்டும். அச்சால்பாகிய குணத்தைக் கொடுப்பவர் பரிசுத்தாவி. எனவே ஒருவனிடம் பரிசுத்தாவி வரும்பொழுது, அவன் சால்பாகிய வல்லமையைப் பெற்று, எவ்விடத்தும் சான்று கூறும் சான்ருண்மையைப் பெறுகிருன்.

"பரிசுத்த ஆவி உங்கள்மேல் வரும்போது, அவரது வல்லமையைப் பெற்று, எருசலேமிலும், யூதேயா, சமாரியா முழுவதிலும், மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள்" என்ருர். [அப்:1:8]

சால்புடையவனும் சான்ரேனும் ஒருவனே எனினும் சால்புடைமைக்கு உட்காரணம் உண்டு. சான்ருண்மை வெளிப்படையாகக் காணக் கூடியது.

சால்புடைமை அகநிகழ்ச்சி.

"உண்மையின் ஆவியானவர் வந்தபின்
நிறை உண்மையை நோக்கி உங்களை வழிநடத்துவார்"
[யோ. 16:13]

"ஒருவன் என்னுள்ளும் நான் அவனுள்ளும்
நிலைத்திருந்தால் அவன் மிகுந்த கனி தருவான்"
[யோ. 1:55]

கனி என்பது, நல்லொழுக்கத்தின் பயனுய் ஏற்படும் நற்செயல்களையே குறிக்கும்.

ஆகவே நிறை உண்மையாம் நிறை நல்லொழுக்கமாகிய சால்புடைமைக்குக் காரணம் பரிசுத்தாவி. அவரின்றி உலகில் ஒழுக்கம் நிலைபெறுவதில்லை.

*நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்*
*வானின் றமையா தொழுக்கு.*

வானின்றி ஒழுக்கு அமையாது. இக் குறட்பாவில் நீர் வேறு, வான் வேறு எனப் பிரித்துவிடுகிறார்.

ஆவியை மழைபோல் ஊற்றும் பரிசுத்தாவியானவரே வான். அவர் இன்றி ஒழுக்கம் இல்லை.

"நான் மனுமக்கள் யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன்" [யோவேல் 2:28]

('வான் எது?' காண்க.)

பரிசுத்தாவியானவர் செயல்படக் காரணமானவர், உலகில் மனிதனாக வந்து சிலுவைப் பொறிவாயில் தம் ஐம்புலனையும் பலியுணவாகிய அவியாக்கியதுடன், 'நானே வழி' என்று பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி, அவ்வொழுக்க நெறியில் நின்றவர்களுக்கு அழியா நீடு வாழ்வையளிக்கும் இயேசு பெருமானே.

*பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறி நின்றார் நீடுவாழ்வார்.*

ஆகவே உலகில் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டியவர் ஐந்தவித்தானாகிய இயேசு பெருமானே. அவ்வொழுக்க நெறியில் நிற்பதற்கு ஆற்றலைக் கொடுப்பவர் 'வான்' ஆகிய பரிசுத்தாவியானவரே.

இப்பொய்தீர் ஒழுக்கப் பண்பே சால்பு. சான்று கூறும் சான்றோர்க்கு இன்றியமையாப் பண்பே இச் சால்பு.

ஆண்மையாகிய வீரம் இருவகையில் தோன்றுகிறது. வாலறிவனாகிய இறைவனை அறிய வேண்டிய முறைப்படி அறிந்து அவனைப் பற்றிச் சான்று கூறும் தன்மையில் ஆண்மையுடன் விளங்கல் சான்றாண்மை. வாலறிவனாகிய இறைவனை அறிய வேண்டிய முறைப்படி அறியாது, அற்பமானவைகளை அறிந்து, அப் புல்லறிவில் ஆண்மை கொளல் புல்லறிவாண்மை.

நல்லறிவாகிய
சான்று கூறலில் ஆண்மைகொளல் = சான்றாண்மை.

கற்கவேண்டியதைக் கல்லாத நிலையில்
புல்லறிவில் ஆண்மைகொளல் = புல்லறிவாண்மை.

திருவள்ளுவர் 133 அதிகாரங்களுள் 'ஆண்மை' என்பதை இணைத்துச் சான்றாண்மை, புல்லறிவாண்மை ஆகிய இரு அதிகாரங்களை மட்டுமே கூறியுள்ளார். அன்புடைமை போன்ற பிறவெல்லாம் உடைமை. ஆனால் இவ்விரண்டு மட்டுமே ஆண்மை.

இவ்விரண்டு நிலைகளையும் தம் வாழ்விலேயே உணர்ந்தவர்கள் உண்டு. ஆண்மை இருக்க வேண்டியது அவசியம். ஆனால் அவ்வாண்மை அறியவேண்டியதை அறியா நிலையில் தோன்றுமானால் அது புல்லறிவாண்மையாகிவிடும். அறிய வேண்டியதை அறிந்து, சால்பாகிய குணத்தை அடைந்த பின் தோன்றுமானால் அது சான்றாண்மையாய்ச் சிறப்படையும்.

புல்லறிவாண்மை மற்றவர்களைத் துன்புறுத்துதலில் நாட்டத்தைக் கொடுக்கும். ஆனால் சான்றாண்மை எல்லோர் மேலும் அன்பை ஏற்படுத்தி, பிறர் கொடுக்கும் துன்பத்தையும் பொறுத்து, அதனால் ஏற்படும் அழிவுக்கும் தன்னை ஒப்படைக்கும்.

## சான்றாண்மையின் தூண்கள்

சான்று + ஆண்மை = சான்று கூறலில் ஆண்மை

சான்று கூறல் சான்றோர் ஒவ்வொருவரின் விருப்பத்தையும் பொறுத்தது அன்று. அது அவர்கள் மேல் விழுந்த கடமை. இயேசு பெருமானைப் பின்பற்றும் சான்றவன் ஒவ்வொருவனும், தன் கடமையை அறிந்து சான்று கூறுதலாகிய ஆண்மையை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு மேற்கொள்ளுகிறவர்களுக்கு உலகில் நல்லவை என எவையுண்டோ அவைகளையெல்லாம் செய்ய வேண்டியதும் அவர்கள் கடமையாகும்.

கடன்என்ப நல்லவை எல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

சான்றாண்மை இயற்கையில் வரும் குணம் அன்று. அது அடைந்துகொள்ள வேண்டிய பண்பு. அவ்வாறு சான்று கூறுவது கடமையாகும். அக் கடமையுடையோர்க்கு நல்லனயாவற்றையும்செய்ய வேண்டியதும் கடமையாகும்.

இதைக்குறித்துப் பரிசுத்த பவுலாகிய சின்னப்பர் கூறுவதாவது,

"நற்செய்தி அறிவிப்பதுகூட நான் பெருமைப்படுவதற்குரியதன்று. அது என்மேல் சுமத்தப்பட்ட கடமையே"

[I கொரிந்தியர் 9:16]

சான்றோர் நற்செய்தியை அறிவிப்பதும், சால்பாகிய தன்மையை அடைந்திருப்பதும், தூய ஆவியால் நிரப்பப்பட்டிருப்பதுமாகிய சிறந்த இயல்புகளையெல்லாம் ஒருங்கே உடையவராக, குணநலம் நிறைந்தவராக விளங்குகிறார்கள். சான்றோர்க்கு நலம் அல்லாததாகத் தோற்றுகின்ற பிற நலம் எந்த நல்ல நலத்துள்ளும் சேராதது. அதாவது, பிற நலம் தோற்றத்தால் நலமாகத் தோற்றினும் உண்மை நலம் ஆகாது:

குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

ஆகவே, எல்லா நற்குணங்களாலும் நிரப்பப்பட்டவர்களே சான்றோர்எனப்படுவர். எல்லா நற்குணங்களும் என்றால், அவை யாவை?

அச்சிறந்த குணநலன்கள் எவை? பரிசுத்தாவியால் நிரப்பப்பட்டவர்களே சால்புடையவர்களாகிறார்கள். சால்புடையவர்களே சான்றோர். ஆகவே சான்றோர்க்கு இருக்கவேண்டிய சால்பு எத்தகையது? சால்பின் கண் அடங்கியுள்ள குணங்கள் எத்தகையன? எவ்வெக் குணங்கள் சால்பாயுள்ளன?

இயேசு பெருமானைப் பற்றிச் சான்று கூறும் ஒருவனுக்கு வேண்டிய முதல் தலைமையான குணம் எது? அன்பு! இதைக் குறித்து இயேசு பெருமானின் கட்டளையாகப் பரிசுத்த மத்தேயு கூறுவதாவது:—

"உன்கடவுளாகிய ஆண்டவருக்கு முழு உள்ளத்தோடும், முழு ஆன்மாவோடும், முழு மனத்தோடும் அன்பு செய்வாயாக. இதுவே எல்லாவற்றிலும் பெரிய முதன்மையான கட்டளை.

இரண்டாவது இதையொத்ததே; உன் மீது நீ அன்பு காட்டுவதுபோல் உன் அயலான் மீதும் அன்பு காட்டுவாயாக. திருச்சட்டம் முழுவதற்கும் இறைவாக்குகளுக்கும் இவ்விரு கட்டளைகளும் அச்சாணி போன்றவை" என்றார். [மத். 22:36-40]

ஆகவே இயேசுவின் சான்றுக்கு முதல் தேவை அன்பு. அன்பாகிய ஒளி உள்ளத்தே வந்தவுடன், அங்கு இது வரை இருந்த தீமையாகிய அழுக்கு வெளிப்பட்டுத் தோன்றுகிறது. இதுவரை அன்பற்றிருந்த காரணத்தால் தான்செய்வதெல்லாம் அவனுக்குச் சரியாகவே தோற்றமளித்தது. இப்போது அன்பாகிய ஒளியில் பார்க்கும்பொழுது, அன்பற்ற முறையில் தான் செய்த தீமையான செயல்களாம் பாவமாகிய அழுக்கு வெளிப்பட்டுத் தோன்றுகிறது. ஆகவே பாவத்தைக்கண்டு, அதாவது தனது கடந்த கால கருமத்தைக்கண்டு நாணமடைகிறான்.

"தன்பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்." [நீதிமொழிகள் 28:13]

ஆகவே முதலில் அன்பு;

இரண்டாவது நாணம்.

தவறான செயல்களுக்கு நாணம் தோன்றிய உள்ளத்தில் தீய செயல்கள் மாறி நற்செயல்கள் தோற்றமளிக்கின்றன. தனக்கு வேண்டும், தான் மட்டுமே வாழ வேண்டும் என்ற நிலைமாறித் தன்னைப்போலவே யாவரும் வாழ வேண்டும்; தன் பொருள் அடுத்தவர்களுக்கும் பயன்பட வேண்டும்; தானும் மற்றவர்களும் ஒன்றே; தான் விரும்புதலைப் போன்று மற்றவர்களும் விரும்பக்கூடும் என்ற யாவரும் ஒத்த நிலையை அறிகிறான்.

> ''ஆகையால் உங்களுக்குப் பிறர் என்னென்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்களோ, அவற்றையெல்லாம் நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். இறைவாக்குகளும் திருச்சட்டமும் இதுவே'' மத்தேயு. [7:12]

இது ஒப்புரவு அறிதல். ஆகவே ஒப்புரவறிந்து நன்மையே செய்து வாழுகின்றவன், தனக்கு மறறவர் செய்யும் தீமைகளையும் உணர வேண்டியவனாகிறான். தான் நன்மை செய்யும் பொழுது தனக்கு மற்றவர் தீமை செய்வதையுணருங்கால் அவன் உள்ளம் அவர்கள் மேல் வருத்தங்கொள்ள நேரிடுகிறது. ஆனால் அவர்கள் மீதும் அவனுக்கு அன்பு ஏற்படுகின்ற காரணத்தால் அவர்கள் மீது அவனுக்குக் கருணை ஏற்படுகிறது. கருணையாகிய இரக்கமாம் கண்ணோட்டம், மற்றவர்கள் செய்யும் தவறுகளை மன்னிக்கும் மனப்பான்மையை உண்டாக்குகிறது. இம்மன்னிப்பின் மனப்பான்மையாம் கண்ணோட்டம் ஒவ்வொரு சான்றவனுக்கும் அடிப்படைக் குணமாய் அமைய வேண்டியது. ஏனெனில் இவன் தவறு இறைவனால் மன்னிக்கப்பட, அதாவது இறைவனிடம் கண்ணோட்டத்தை எதிர்பார்க்கும் இவன், மற்றவர்களிடம் கண்ணோட்டம் கொள்ளவேண்டும்.

"மனிதருடைய குற்றங்களை நீங்கள் மன்னிப்பீர்களாகில், உங்கள் வானகத் தந்தை உங்களையும் மன்னிப்பார். நீங்கள் மனிதரை மன்னிக்காவிடில், உங்கள் தந்தையும் உங்கள் குற்றங்களை மன்னியார்." (மத்:6:14-15)

ஆகவே கண்ணோட்டம் அவசியம்.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம் ஆகிய நான்கு குணங்களும் சான்று கூறும் சான்றவரின் அகத்தே நிகழுபவை. இவை அத்தனையும் சான்று கூறுகிறவர்களுக்கிருக்க வேண்டிய சால்பு. ஆனாலும் இவை அத்தனையும் சிறப்படைவதற்குக் காரணமானது சான்று கூறலாம் வாய்மையிலேயே அடங்கியுள்ளது. வாயினால் மெய்யாகிய இறைவனைக் கூறிச் சான்று பகர்தலே வாய்மை.

"நம்மேல் அன்பு கூர்ந்து, தம் அருளால் முடிவில்லாத ஆறுதலும், நல்ல நம்பிக்கையும் அளித்த நம் தந்தையாகிய கடவுளும், நம் ஆண்டவராகிய இயேசு கிறித்துவும் உங்கள் உள்ளங்களுக்கு ஆறுதல் அளித்து, எல்லா வகையான நற்செயலிலும், நற்சொல்லிலும் உங்களை உறுதிப்படுத்துவாராக."

(II தெசலோனிக்கேயர் 2:16,17)

"உலகெங்கும் போய்ப் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியினை அறிவியுங்கள்" (மாற்கு. 16:15)

ஆகவே மெய்யாகிய இறைவனை உள்ளத்தால் உணர்தல், உள்+மெய் = உண்மை. அந்த மெய்யை வாயினால் அறிவித்துச் சான்று கூறலே வாய்மை (வாய்+மெய் = வாய்மை) அம் மெய்ப்பொருளாகிய இறைவனை உணர்ந்து, சொல்லி, அவனுக்கு வேண்டியவைகளை மெய்யாம் உடலால் செய்வதே மெய்மை (மெய்+மெய்).

வாயால் மெய்யாகிய இறைவனைக் குறித்துச் சான்று பகர்தலே வாய்மை.

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்துசால் பூன்றிய தூண்.

இவை ஐந்தும், சான்று கூறும் சான்றவர்களுக்கு அடிப்படைக் குணமாகிய சால்பைப் பற்றிக் கூறியிருப்பதாலும், கிறித்தவ நூலாகிய திருமறையிலும் இவ்வைந்து குணங்களே அடிப்படையாகக் கூறப்பட்டுள்ளமையாலும் இதைப் பற்றிய விளக்கத்தை விரிவாகக் காண்பதும் இன்றியமையாததாகும்.

சால்பின் கூறுபாடுகள் ஒவ்வொன்றையும் வள்ளுவரின் வழியில், திருமறையின் ஒளியில் காண்போம்.

## 1. அன்புடைமை

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் தூய்மையோடு
ஐந்து சால்பூன்றிய தூண்.

'அன்புடைமை' என அதிகாரத் தலைப்பிட்டு அதை அறத்துப்பாலின் எட்டாம் அதிகாரமாக வைத்துள்ளார் வள்ளுவர். சால்பூன்றிய தூண் ஐந்தனுள் முதலிடம் பெறுவது அன்புடைமையே.

திருமறையிலும் எல்லாவற்றிலும் சிறப்பாகக் கருதப்படுவது அன்பே. [கலாத். 5:23] ஆவியின் கனிகளில் முதலிடம் பெறுவது அன்பு. சின்னப்பராகிய பரிசுத்த பவுல், கொரிந்தியர்களுக்கு எழுதிய முதலாம் திருமுகத்தில் இவ்வன்பினை விளக்கிக் கவிதையாகப் பாடியுள்ளார். அது ஒரு தனி அதிகாரமாக அமைந்துள்ளது. [I கொரிந். 13].

இவ்வதிகாரத்தின் கீழ் கத்தோலிக்கத் தமிழ் மொழிபெயர்ப்பின் அடிக்குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளதாவது :—

> "அன்பு ஞானக்கொடைகளில் மிகச் சிறந்த கொடையாகும். அதில்தான் கிறிஸ்தவ சால்பு வாழ்வு அடங்கியுள்ளது."

ஆகவே கிறித்தவ சால்பு அன்பே. யாவற்றினும் தலைசிறந்ததும் அன்பே.

> "எனவே விசுவாசம், நம்பிக்கை, அன்பு ஆகிய மூன்றுமே நிலையாய் உள்ளன. இவற்றுள் தலைசிறந்தது அன்பே."
>
> [I கொரிந். 13:13]

இறைவன் பேரின்ப மயமானவன். தனது பேரின்பத்தில் பங்குகொள்ளும்படியாகவே மனிதனைப் படைத்தான். மனிதன் படைக்கப்பட்டமைக்குக் காரணம் இறைவனின் அன்பே.

> "அன்புக்குரியவர்களே, நாம் ஒருவர்க்கொருவர் அன்பு செய்வோமாக. ஏனெனில், அன்பு கடவுளிடமிருந்து வருகிறது; அன்பு செய்பவன் எவனும் கடவுளிடமிருந்து பிறந்துள்ளான். அவனே கடவுளை அறிவான். அன்பு செய்யாதவனோ கடவுளை அறிவதில்லை. ஏனெனில் அன்பே கடவுள்."
>
> [I யோவான் 4:7–8]

அன்பின் மயமான கடவுள் தம் பேரின்பப் பெருக்கில் பங்குகொள்ளும்படியாக, மனிதனைப் படைத்துத் தம் அன்பை வெளிப்படுத்தினர்.

கடவுளின் பேரின்பத்தில் பங்குகொள்ளும்படியாகப் படைக்கப்பட்ட மனிதன், கடவுளின் அன்பை உணராது அவர் கட்டளையை மீறி, அவரை விட்டுப் பிரிந்து துன்பத்திற்காளாயினன். மனிதனடையும் துன்பத்தைக் காணச் சகியாத அன்பின் கடவுள், தாமே மனிதனாக வந்து, அவன் துன்பத்தைத் தாம் ஏற்றுத் தம்மைத் துன்பத்திற்கு ஒப்புக் கொடுத்துச் சிலுவையில் துன்பத்தைச் சகித்தார். இதன் மூலம் மனிதனுக்கு விடுதலையாம் பேரின்ப வழியைக் காட்டினார். இவ்வாறு தம்மையே பலி யாக்கித் தாம் மக்களிடத்தில் கொண்ட அன்பை வெளிப்படுத்தினார்.

"கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார்
இதனால் அன்பு இன்னதென்று அறிந்தோம்."

[I யோ. 3:16, எபேசி. 5:2]

"நாம் கடவுளுக்கு அன்பு செய்ததில் அன்று
அவரே நமக்கு அன்பு செய்து
நம்பாவங் களுக்குப் பரிகாரமாகத்
தம் மகனை அனுப்பியதில்தான்
அன்பின் தன்மை விளங்குகிறது."

[I யோவான் 4:9-10]

ஆகவே, அன்பு வெளிப்பட்டது. அன்பை அடக்கிக்கொள்ள முடியாது. அன்பை அடக்கிக் கொள்ள முடியாக் கடவுள் அன்பின் மிகுதியால் மனிதனைப் படைத்தார். அவன் நெறி தவறியகாலை அவனுக்காகத் தாமே வந்து அடக்க முடியா அன்பைச் சிலுவையில் வெளிப்படுத்தினார்.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கண்நீர் பூசல் தரும்.

அன்பை அடைத்து வைக்கும் தாழ்ப்பாளும் உண்டோ? அன்புடையவரின் சிறு கண்ணீரே

உள்ளே இருக்கும் அன்பைப் பலரும் அறிய வெளிப்படுத்திவிடும்.

அடக்க முடியா அன்பை வெளிக்காட்டும் செயலாகக் கண்ணீரைக் கூறும் காரணம் என்ன? துன்பமடைவோர் துன்பம் கண்டு, துன்பம்கொள்ளும் உள்ளம், துன்பக்குறியான கண்ணீரை வெளிப்படுத்தி அன்பைப் புலப்படுத்துகிறது.

ஆகவே அன்பிற்கும், அன்பின் காரணமாக அடையும் துன்பத்திற்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. அன்பில்லா உள்ளம் துன்பமடைய விரும்பாது. அன்புள்ள உள்ளம் துன்பத்தை ஆர்வமுடன் ஏற்றுக்கொள்ளுகிறது. ஆகவே அன்பு அடக்கமுடியா ஒன்று. அதைக் கண்டுகொள்ளும் வழி துன்பக் குறியே.

அன்பை வெளிப்படுத்தும் துன்பக்குறி வெறும் கண்ணீர் மட்டுமன்று. கண்ணீர் விட்டு உள்ளம் உருகி உள்ளத்தால் அன்பு கூர்வது செயலில் வெளிப்பட்டுத் தோன்ற வேண்டும். செயலில் வெளிப்படா எண்ணம் பயனற்றது. அன்பு எவ்வாறு செயலில் வெளிப்படும்? அன்பு தன் உடைமைகளை மட்டுமல்லாது தன்னையே மற்றவர்களுக்காகக் கொடுத்துவிடும். அதில் எவ்விதத் தயக்கமும் இருக்காது. தன்னை விரும்புபவர், வெறுப்பவர் ஆகிய அனைவருக்காகவும் தன்னையே தியாகம் செய்வது பூரண அன்பு. (ரோ. 5:8) தன்னை விரும்புகிறவர்களுக்காக மட்டுமே செய்தல் முழு அன்பு ஆகாது. ஏன்? அது அன்பே அல்ல. ஒரு விதத்தில் சுயநலமே.

ஆகவே முழு அன்பு, தன்னையே மற்ற அனைவருக்காகவும் தியாகமாக்கிவிடும். அன்பற்ற உள்ளமோ தன்னை மற்றவர்களுக்காகக் கொடுப்ப

தற்குப் பதில், மற்றவர் உடைமையும்கூட தனக்கே வேண்டுமென விரும்பும். அன்பு தன்னைக் கொடுக்கும். அன்பற்ற உள்ளம் எல்லாவற்றையும் தனக்கே வேண்டுமென விரும்பும்,

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

"கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். இதனால் அன்பு இன்னதென்று அறிந்தோம். ஆகவே, நாமும் நம்முடைய சகோதரர்களுக்காக நம் உயிரைக் கொடுக்க வேண்டும்." [I யோ. 3:16]

('சகோதரர்' என்பது கடவுளால் படைக்கப் பட்ட மனிதர் யாவரும் நம் சகோதரர்களே என்ற கருத்தில் ஆளப்பட்டுள்ளது.)

இவ்வாறு மற்றவர்களுக்காகத் தம் எலும்பையும் கொடுத்தவர் யார்?

இதற்குரிய விடையைத் தமிழ் முனிவர் திரு. வி. கலியாணசுந்தரனார் கூறுகின்றார்:—

அன்பேநீ ஆதலினால் ஆருயிர்கள் பொருட்டுன்
அழகுடலை வதைக்கவிட்டாய்; அருளுயிரை நீத்தாய்;
இந்நிலத்தில் அச்செயலை எக்குரவர் ஏற்றார்?
இளங்கன்னி வயிற்றுதித்த இறைமை மணிவிளக்கே,
அன்பினிலே குறையிருந்தால் அருஞ்செயலை ஆற்றல்
ஆகாதே ஆகாதே! 'அன்புடைய அறவோர்
என்பும் பிறர்க்குரியர்' என எழுந்த மொழிக்குகந்த
இலக்கியமா யிலங்கி நிற்கும் ஏசுகுருநாதா!
(கிறிஸ்துவின் அருள் வேட்டல்)

திரு. வி. க. அவர்களின் கூற்றுப்படி திருக்குறள் இலக்கணம், அதற்கு முந்திய இலக்கியமே இயேசு பெருமானின் வாழ்க்கை.

இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் இயம்பலின் இயேசு பெருமானின் வாழ்க்கையாகிய இலக்கியத்திற்கு, வள்ளுவமாகிய இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது என்பது திரு. வி. க. அவர்களின் கூற்று.

அன்பும் இறைவனும் ஒன்றே என்ற கருத்தில் 'அன்பே நீ ஆதலினால்' என்றார்.

வேறு ஒருவரும் இயேசு பெருமான் செய்த செயலைச் செய்ய வில்லை எனக்கூறுமுகத்தான், 'இந்நிலத்தில் அச்செயலை எக்குரவர் ஏற்றார்?' என வினா எழுப்புகின்றார்.

''அன்பினிலே குறையிருந்தால், அருஞ்செயலை ஆற்றல் ஆகாதே ஆகாதே'' என அவர் கூறுவது,

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

என்னும் நீத்தார் பெருமைச் செய்யுளை நினைப்பூட்டுகிறது. ஆகவே இறைவனின் அன்பு இயேசு பெருமானின் சிலுவை வழியாக வெளிப்பட்டது. கடவுளின் அன்பைக் கண்டோம். அவ்வன்பை நாம் மற்றவர்களிடத்தும் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

கடவுளின் அன்பை இயேசுவின் மூலமாகக் கண்ட நாம். ஆழ்ந்து நோக்கினால், மனிதராகிய நம்மை இறைவன் படைத்ததும், காத்து வருவதும், நம்மைக் கடவுளின் பிள்ளையாக விளங்கச் செய்வதும், அவ்வன்பினாலேயே என்பது நன்கு விளங்கும்.

''பரமதந்தை நம்மிடம் காட்டிய அன்பு
எவ்வளவு என்று பாருங்கள்!
நாம் கடவுளின் மக்கள் என அழைக்கப்படுகிறோம்;
அவருடைய மக்களாகவே இருக்கிறோம்''

[1 யோவான் 3:1]

ஆதியில் கடவுள் தம் அன்பின் மிகுதியால் தமது பேரின்பத்தில் பங்கு கொள்ளும்படி மனிதனைப் படைத்து, அவனுடைய நன்மையின் பொருட்டு, அவனுக்காகவே மற்ற எல்லாவற்றையும் படைத்தார். படைக்கப்பட்டவை யாவும் அம்மனிதனின் ஆட்சிக்குட்பட்டன. தாம் படைத்த மனிதனும் ஆதாமை (ஆதாம் = மனிதன்) இன்பத் தோட்டமாம் ஏதேனில் வைத்தார். அங்கு அம்மனிதன் தினமும் கடவுளுடன் உறவாடி இன்பத்தில் திளைத்துக் கொண்டிருந்தான்.

மற்றப்படைப்புகளை எல்லாம் சொல்லால் படைத்த இறைவன், மனிதனை மட்டுமே சிறப்பான முறையில் படைத்தார். எபிரேய எழுது முறையில் விவரித்தால், தம் சாயலாகக் கடவுள் மனிதனை உருவாக்கினார். மனிதனின் உயிர் கடவுளிடமிருந்து இவனுக்கு வந்தது. மற்றவற்றின் உயிருக்கு அச்சிறப்பு இல்லை. இதுவே மனிதனுக்கும் மற்ற உயிரினங்களுக்குமுள்ள அடிப்படை வேற்றுமையாகும்.

ஆகவே மனிதனுள் இருக்கும் பெறுதற்கரிய உயிர்க்கும், அவனுடைய எலும்பு முதலான உடலுக்கும், இயைந்த தொடர்புக்குக் காரணம், இறைவனின் பேரின்பப் பங்கீடாகிய அன்போடியைந்த வழக்கே ஆகும்.

அன்போடியைந்த வழக்கென்ப ஆயிருர்க்கு
என்போடியைந்த தொடர்பு.

இவ்வாறு இறைவனின் பேரின்பத்தில் பங்கு கொள்ளும்படியாக, இறைவனின் பேரன்பால் உருவாக்கப்பட்ட மனிதன், பேரின்பத்தில் நிலைகொண்டானா? இல்லை! மனிதன் தனது கீழ்ப்படியாமையால் இறைவனுக்கும் தனக்கும் ஒரு பிளவை

ஏற்படுத்திக்கொண்டான். இறைவனின் கட்டளையை மீறியதால் ஆதிமனிதன் தன்னைத் தேடி வந்த கடவுளைச் சந்திக்க முடியாமல், மரங்களினிடையே தன்னையும், இலைகளிடையே தன் உடலையும் மறைக்க வேண்டிய நிலை வந்தது.

ஆகவே கீழ்ப்படியாமையாகிய குற்றம் மனிதனைப் பேரின்பத்திலிருந்து பிரித்தது.

மனிதன் தனது மீறுதலினால் பேரின்பத்தில் பங்குகொள்ள முடியாத நிலைமையை ஏற்படுத்திக் கொண்டதுடன், துன்பத்தையும் வலிய ஏற்றவனாக மாறினான்.

அன்பின் வடிவான இறைவன், மனிதன் அடைந்துள்ள துன்ப நிலைக்கு இரக்கங்கொண்டார். அவன் மீது மீண்டும் அன்பு கூர்ந்தார். கடவுளின் அன்பு மனிதனின்மீது, ஆர்வமென்னும் ஞான நேயத்தை ஈன்றது. அந்த ஞானநேயம் மனிதனோடு தடைபட்டிருந்த தொடர்மாகிய நட்பு என்னும் நாடாச் சிறப்பாகிய பேரின்பத்தை ஈன்றது.

ஆகவே பேரின்பத்திலிருந்து தனது கீழ்ப்படியாமையால் தன்னைப் பிரித்துக் கொண்ட மனிதனின் மேல், இறைவனின் அன்பு, ஆர்வமாகிய ஞானநேயத்தை ஈன்று, அந்த ஞானநேயம் பிரிந்த மனிதனைச் சேர்க்கும் நண்பாகி, அந்நண்பு நாடாச் சிறப்பாகிய பேரின்பத்தை ஈன்று, மனிதன் மீண்டும் இறைவனுடன் பேரின்பத்தில் பங்கு கொள்ளும் வாய்ப்பினை ஏற்படுத்தியது.

அன்பீனும் ஆர்வமுடைமை அது ஈனும்
நண்பெனும் நாடாச் சிறப்பு.

இறைவனின் தொடர்பாம் பேரின்பமாகிய நாடாச் சிறப்பு, மனிதனுக்கு ஏற்பட்ட முறை

என்ன? இன்பத்தை அனுபவிக்கிறவர்களைக் கேட்போம்.

"அவ்வின்பத்தை அடைந்து இன்புறுகிறவர்களின் சிறப்பிற்குக் காரணம் என்ன? என்று அவர்களை நாம் வினவினால் அவர்கள், 'அன்பு உற்று அமர்ந்த வழக்கு' என்பர்," எனக்கூறுகிறார் வள்ளுவர்.

அதாவது அன்பாகிய கடவுளே, மனிதனைத் தம்முடன் நண்பாக்கும் பொருட்டு, மனித உருவை ஏற்று, மனிதரோடு பூமியில் அமர்ந்த வழக்கே, இவ்வையகத்திலே இன்புற்றார் எய்துஞ் சிறப்புக்குக் காரணமாகும் எனப்படுகிறது.

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு.

"நான் என் தந்தையின் கட்டளைகளைக் கடைப்பிடித்து,
அவருடைய அன்பில் நிலைத்திருப்பது போல,
நீங்களும் என் கட்டளைகளைக் கடைப்பிடித்தால்
என் அன்பில் நிலைத்திருப்பீர்கள்.
என் மகிழ்ச்சி உங்களில் இருக்கும்படியும்,
உங்கள் மகிழ்ச்சி நிறைவு பெறும்படியும்,
நான் உங்களுக்கு இதெல்லாம் கூறினேன்,
நான் உங்களிடம் அன்பு கூர்ந்தது போல
நீங்களும் ஒருவரிடம் ஒருவர் அன்பு கூரவேண்டு
எனது கட்டளை" [மென்பதே
[யோவான் 15:10-12]

அன்பு மனித உரு எடுத்த காரணத்தால் வையகத்தில் இன்பம் தோன்றியது. அவ்வின்பத்தை அனுபவிக்கிறவர்களைக் கேட்டால் அவர்கள் அன்பே மனித உருவில் வந்த வழக்கைக் கூறுகிறார்கள்.

அன்பாகிய இறைவன் மனித உருவில் வந்த வுடன் மனிதன் இன்பத்தை உணர்ந்துவிட்டானா? இல்லை. அவ்வின்பத்தை மனிதன் அடையும் பொருட்டு அவ்வன்பாகிய இறைவன் செய்த செயல் முக்கியமானது. அச்செயல் என்ன?

அன்பு அறத்திற்கு மட்டுமே சார்பு என்பர். அது அறியாதவர் கூற்று. மறத்திற்கும் அவ்வன்பே துணையாகிறது.

அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

அன்பு மறத்திற்கும் துணையாயிற்று? எவ்வாறு? அன்பாகிய இறைவனின் இன்பத்தில் பங்குகொள்ள முடியாமல் மனிதனைத் தடுத்தது மனிதனின் மீறுதல். மீறுதல் மனிதனை அடிமைப்படுத்தியது. அடிமைப்பட்ட மனிதனை விடுவிக்க அன்பே மனிதனாக உருக்கொண்டதுடன், மனிதனின் மீறுதலாகிய தவற்றுக்குத் தக்க தண்டனையைத் தானே தன் உடலில் ஏற்றது. மனிதன் அவனுடைய மீறுதலுக்குத் தண்டனையாகக் கொல்லப்பட வேண்டியதற்குப் பதிலாகத் தன்னையே பிணையாகப் பலியாய் ஒப்புக் கொடுத்தது அன்பு.

தன்னையே கொல்லுதலாகிய மறச்செயலுக்கும் இறைவனின் அன்பு துணையாயிற்று. அம்மறச் செயலுக்குக் காரணமும் மனிதர் மீது அவர் கொண்ட அன்பே.

ஆகவே அறத்திற்கு மட்டுமின்றி மறத்திற்கும் அன்பே துணையாயிற்று. அம்மறச்செயலின் மூலம் இறைவனின் அன்பு மக்களுக்கு விளங்கிற்று.

"கிறிஸ்து தம்மையே நறுமணம் வீசும் காணிக்கையும் பலியுமாக நம்மை முன்னிட்டுக்

கையளித்து உங்கள்மேல் அன்பு கூர்ந்து போல், நீங்களும் அன்புகொண்டு ஒழுகுங்கள்."
(எபேசியர் 5:2)

மறத்திற்குத் தன்னைக் கையளித்த அவ்வன்பை அறிவது மட்டுமன்றி, அவ்வன்பை உள்ளத்தில் ஏற்றுக்கொண்டு, மற்றவர்களுக்கும் அன்பு காட்ட வேண்டும். அவ்வாறு அவ்வன்பை உள்ளத்தில் ஏற்றுக்கொண்டு, மற்றவர்களுக்கு அதை வெளிப் படுத்தாவிடில், அவ்வன்புக்கும் நமக்கும் தொடர்பு அற்றுவிடுகிறது.

தொடர்பறவே அறத்தின்படி, மீறுதலுக்காக நியமிக்கப்பட்ட தண்டனை நம்மை வந்தடை கிறது.

எலும்பையும் நமக்காகக் கொடுத்து, மறத் திற்குச் சார்பாகி, விடுதலையை ஏற்படுத்தி வைத் திருக்கும் அன்பை, நாம் உள்ளத்தில் ஏற்றுக் கொள்ளாவிட்டால், நமக்கு விடுதலை கிடைக்காமல் போகும் காரணத்தால், நியதியின்படி வரவேண்டிய தண்டனையை, நியதியாகிய அறம் நமக்களித்து, எலும்பற்ற புழுவை வெயில் வருத்துவதைப் போன்று வருத்தும்.

என்பில தனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

ஆகவே அன்பாகிய இறைவனை உள்ளத்தே கொண்டு, அவ்வன்பை மற்றவர்களுக்குக்காட்டாத வாழ்க்கையானது எவ்விதத்திலும் பயனற்றதாகும். அவ் வாழ்க்கை நாளுக்குநாள் வளர்ச்சியுடைய தாகத் திகழாமல், நாளுக்குநாள் அழிந்துகொண் டிருக்கும் பாலை நிலத்திலுள்ள பட்டமரத்திற்கு ஒப்பானதாகும்.

அன்பு அகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

வற்றல் மரம் தளிர்ப்பதரிது. பாலை நிலத்தில் அது நிகழ்வது எண்ணமுடியாதது. வன்பாலையில் எண்ணவே முடியாதது. அவர்களுடைய உயிர் வாழ்க்கைதான் பயனற்றது என எண்ண வேண்டாம். உயிர் வாழ்க்கைக்குக் காரணமான அவர்கள் உடலாம் யாக்கையும் பயனற்றதாகும். யாக்கை பல்வகை உறுப்புக்களால் இயைந்தது. அவ்வுறுப்புக்களை,

1. புறத்துறுப்புக்கள்,
2. அகத்துறுப்புக்கள்,

என இருவகையாகப் பிரிக்கலாம்.

புறத்துறுப்புக்களைவிட, அகத்துறுப்புக்களே மிகவும் சிறந்தவை. எல்லா உடல்களையும் இயக்குவது உயிர். அவ்வுயிர் புறத்தே தோற்றமளியாக் காரணத்தால் அகத்துறுப்பாகக் கருதப்படுகிறது. அவ்வுயிர் இறைவனிடமிருந்து வந்தது. இறைவன் அன்புமயமானவன். இறைவனிடமிருந்து வந்த அவ்வுயிரும் அன்புருவாய்த் திகழவேண்டியது. இறைவனை அறிய வேண்டிய உயிரும், அவனை அறிவது அதன் அன்பின் மூலமே. அன்பாம் இறைவனை அறியாத, அபில்லாத வாழ்க்கையால் யாது பயன்?

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு.

அன்பிலவர்க்குப் புறத்துறுப்பு எவன் செய்யும்?

மண்ணோர் மொழிகளிலும் விண்ணோர் மொழிகளிலும்
நான் பேசினும், அன்பு எனக்கில்லையேல்
ஒலிக்கும் வெண்கலமும், ஓசையிடும் தாளமும் ஆனேன்.

இறைவாக்கு வரம் எனக்கு இருப்பினும்
மறைபொருள் யாவும் எனக்குத் தெரிந்தாலும்
அறிவு அனைத்தும் எனக்கு இருந்தாலும்
மலைகளைப் பெயர்த் தகற்றும் அளவுக்கு
விசுவாசம் என்னிடம் இருப்பினும்
அன்பு எனக்கில்லையேல், நான் ஒன்றுமில்லை.
எனக்குள்ள தெல்லாம் நான் வழங்கினும்
எரிப்பதற்கு என் உடலைக் கையளித்தாலும்
அன்பு எனக்கில்லையேல் எனக்குப் பயன் ஒன்றுமில்லை.
[I கொரிந். 13:1-3]

அன்பில்லா உறுப்புக்கள் எவ்விதத்திலும் பயனுடையன அல்ல. உறுப்புக்களின் பயன் அன்பே.

இதுவரை நாம் பார்த்து வந்தவைகளிலிருந்து தொகுத்து நோக்கக்கூடிய குறிப்புகள் :—

இறைவன் அன்புமயமானவர். அன்பின் காரணமாகவே தமது பேரின்பத்தில் பங்கு கொள்ளும்படியாக மனிதனைப் படைத்துத், தமது உயிர்ச் சக்தியால் அவனுக்கு உயிர் கொடுத்தார். மனிதன் தனது கீழ்ப்படியாமையால் இறைவனின் பேரின்ப நிலையிலிருந்து தன்னைப் பிரித்துக்கொண்டு துன்பத்துக் கடிமையாயினன்.

துன்பத்திலிருக்கும் மனிதனைக் கண்ட அன்பு மயமான இறைவன், மனிதனின் துன்பத்தைத் தாமே ஏற்று, அவனுக்குப் பதிலாகத் தம்முயிரைச் சிலுவையில் தியாகம் செய்ததார். அவன் உயிரை அடிமைத் தளையிலிருந்து விடுவித்தார். விடுவித்த அவ்வன்பை உணர்வதே சிறப்பு. அவ்வன்பை உணர்ந்தவன், மற்றவர்களுக்கும் அவ்வன்பைக் காட்டுகிறன். அவ்வன்பில்லா உடம்பால் யாதும் பயன் இல்லை.

எனவே உயிர் இயங்கும் வழியே அன்பு மய மானதுதான். அப்படிப்பட்ட அன்பு அகத்தில் இல்லா உடம்பு, வெறும் எலும்பும் தோலும் சேர்த்து யாக்கப்பட்ட ஒன்றேயொழியச் சிறப்பானதன்று.

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

"நான் உங்களுக்கு அன்பு செய்தது போல் நீங்களும் ஒருவருக்கொருவர் அன்பு செய்யுங்கள்." [யோ. 13:34] "தேவைப்படு வது அன்பின் வழியாய்ச் செயலாற்று" விசு வாசமே." [கலாத். 5:6]

"அன்பு எனக்கில்லையேல் நான் ஒன்று மில்லை." [1 கொரிந். 13:2]

## 2. நாணுடைமை

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்து சால்பூன்றிய தூண்.

ஆண்மையுடன் கூடிய சிறந்த சான்றாக விளங் கும் ஒருவன் தன் உள்ளத்தில் அன்பின் வடிவான இறைவனை யுணர்ந்து, தானும் அவ்வண்பாக மாறி, மற்றவர்களிடத்தும் அவ்வன்பை வெளிப்படுத்த வேண்டியது அவனது தலையாய கடன் ஆகும்.

இவ்வாறு உள்ளத்தில் அன்பின் ஒளிதோன்றிய பின்னர் அடுத்து நடைபெறுவது என்ன? ஒளி வந்த இடம் விளக்கம் பெறுகிறது. விளக்கத்தில், இதுவரை அங்கு இருந்த மாசு வெளிப்பட்டுத் தோன்றுகிறது. இருளில் மறைந்திருந்த மாசு ஒளியில் வெளிப்பட்டுத் தோன்றுதல்தானே முறை?

தான் இதுவரை, செய்ய வேண்டியதைச் செய்யாதிருந்ததும், செய்ய வேண்டாததைச்

செய்ததுமான, உண்மை அன்புக்கு மாறுகச் செயல் பட்ட மாசு தெளிவாக விளங்கித் தோன்றுகிறது.

தோன்றவே, உள்ளம் தவறுன செயலுக்கு நாணமடைகிறது. ஒருவன் தவறு செய்வதிலிருந்து விடுதலை பெறவேண்டுமானல் முதலில் அவனுக்குத் தான் செய்வது தவறு என்ற உணர்வு வரவேண்டும். தவறு என்று உணரும் உணர்வே நாணத்தை உண்டாக்குகிறது. நாணம் அவனைப் பழைய வழியிலிருந்து திரும்பிப் புது வழியாம் பொய்தீர் ஒழுக்க நெறிக்குக் கொண்டு வருகிறது.

இவ்வாறு மனத்தின் போக்கு வேறு திசைக்குத் திரும்பலே 'மனந்திரும்பல்' எனக் கிறித்தவர்களால் அழைக்கப்படுகிறது.

நாணுடைமையும் மனந்திரும்பலும் ஒரே நிகழ்ச்சியே தன்னிடத்திலுள்ள தவறுன செயல் களுக்காக நாணமடையும் ஒருவனுடைய மனம், பின்பு வேறு திசையில் திரும்பிச் செயல்படுகிறது.

ஆகவே அன்பாகிய ஒளியைப் பெற்ற உள்ளம், தன்னிடமிருந்த மாசாகிய கருமங்கண்டு, நாண மடைந்து ஒளியின் பாதைக்குத் திரும்புகிறது.

இந்த நாணத்திற்கும், பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய குணங் களில் ஒன்றுகிய நாணத்திற்கும் வேற்றுமையுண்டு.

இது கருமத்தால் நாணுதல். அது பெண்களுக் குரிய நாணம்.

*கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்*
*நல்லவர் நாணுப் பிற.*

இவ்வாறு கருமத்திற்கு நாணி, மனந்திரும்பலே மாந்தர்ச் சிறப்பு. மக்களுக்கும் மாக்களுக்கும் உள்ள அடிப்படை வேற்றுமை என்ன? இயற்கை வழியே,

அதாவது உள்ளம் சென்ற வழியே செயல்படுவது மாக்கள் பண்பு; நன்மை எது, தீமை எது, எனப் பகுத்தறிந்து நல்வழியில் செயல்படுவது மக்கள் பண்பு 'உயர்திணை என்பது மக்கள் சுட்டே' (தொல்காப்பியம்). அவ்வாறு நல்வழியில் செல்ல விரும்புங்கால், தான் விரும்பும் நன்மையைச் செய்யாது, விரும்பாத தீமையைச் செய்யுங்கால் அதற்கு நாணமடைதலே மாந்தர்ச் சிறப்பு.

ஆகவே மாந்தர்க்குச் சிறப்பு நாணுடைமையே. மற்ற ஊண் உடை முதலியன உயிர்க் கெல்லாம் பொது.

> ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
> நாண்உடைமை மாந்தர்ச் சிறப்பு.

உடையைக் கூறிய காரணத்தால் உடையணியும் மனிதனைச் சுட்டினார். உயிர்க்கெல்லாம் என்றதனால் மக்கள், மாக்கள் யாவரையும் சுட்டினார். மாந்தர்ச் சிறப்பு என்றதனால், மாந்தராகும் சிறப்புத் தன்மையை வெளிக்கொணர்ந்தார்.

அதாவது, உடையணிந்த உயிரினமாம் மனிதர் யாவரும் மனிதர் அல்லர். உள்ளத்திலே நாண் உடைமையே மாந்தர்ச் சிறப்பு என்பது வற்புறுத்தப்படுகிறது.

உலகில் உயிரினங்கள் எண்ணற்றவையாய் வாழுகின்றன. அவை நம் கண்களுக்குப் புலப் படுவது எவ்வாறு? அவற்றின் உடலைக்கொண்டே அறிகிறோம். நாம் பார்ப்பது அவற்றின் உடலாம் ஊனையே. ஊனைக்கண்ட பின்னரே அவ்வூனை இயக்கும் உயிர் அதன் உள்ளே உண்டு என ஊனால் உயிரை அறிகிறோம். உயிரைக் காட்டுவது ஊன்.

அவ்வாறே ஒருவரிடம் சால்பு ஆகிய நிறைந்த தன்மையுண்டா என்பதை அறிவது எவ்வாறு? சால்பு வெளியே தெரியக்கூடிய காட்சிப் பொருள் அன்று. ஆகவே அதை அறிவது கடினம். இருப்பினும், ஊனால் உயிரை அறிவதைப் போன்று சால்பினை அறியும் வாய்ப்பு ஒன்றுண்டு. ஒருவரிடம் கருமத்திற்கு நாணும் நாணம் உண்டா என்பதை நாம் காண முடியும். எவனிடம் கருமத்திற்கு நாணும் நாணம் உண்டோ, அவனிடம் நிச்சயம் சால்பு உண்டு என உணரலாம். ஊனால் உயிரையும் நாணால் சால்பையும் அறியலாம்.

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு.

நாணுடைமை யாவர்க்கும் நன்மையையே பயப்பது. ஆகவே நாண் என்னும் நன்மை என்றார்.

"யாவும் ஊழ்வினைப் பயன்! நான் என் செய்வேன்? விதிவழியே செயல்பட்டேன். ஆகவே என்மேல் தவறில்லை. என்னை நடத்தும் ஊழ்வினையே என்னை இவ்வாறு செய்யத் தூண்டிற்று," எனத் தன் செயலுக்கு வேறொரு காரணம் கற்பித்துத் தன் கருமத்திற்கு ஒருவன் நாணாதிருப்பானானால் அவனிடம் சால்பு இல்லை என அறிவாயாக" எனக் கூறுகிறார் வள்ளுவர்.

நாணினை உணர முடியா மற்றவர்களை விட்டு விடுவோம். நாணினை உணர வேண்டிய சான்றவரை எடுத்துக்கொள்ளுவோம். நல்ல பயிரிடையே தீய களைகளும் தோன்றுவதைப் போன்று, சான்றோரிடையே சால்பில்லாக் களைகளும் தோன்றுவதுண்டு. அவர்கள் ஆட்டு மந்தையிடையே ஆட்டுத் தோலைப் போர்த்த ஓநாய்கள் போன்று

உலவக்கூடும். மேலெழுந்தவாரியாக நோக்கினால் அவர்களைக் காணுதல் முடியாது. ஆழ்ந்து நோக்கினால் மட்டுமே காண முடியும்.

இயேசு பெருமானின் நற்செய்திக்குச் சான்று கூறும் சான்றோரிடையே, இப்படிப்பட்ட களையொன்று தோன்றியிருப்பதாக வைத்துக்கொள்வோம். அவர்களை அறிவது எவ்வாறு?

அவர்கள் வெளித் தோற்றத்தில் சான்றோரே. ஆனால் உள்ளே அவர்களுக்கு இருக்க வேண்டிய சிறந்த அணியாகிய நாணுடைமை இல்லையானால் அது அவர்களுக்கு மட்டுமல்ல; அக் கூட்டத்தவர்க்கே பிணியன்றோ? அவர்கள் எவ்வாறு பீடு நடை போடமுடியும்? அப் பிணி அவர்களை அழித்துவிடுமே!

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை.

சான்றோர்க்கு அணி நாணுடைமை. அந் நாணம் தனக்காக மட்டுமே இருக்குமானால் அதுவும் சிறப்புடையதன்று. தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற கொள்கைப்படி, தான் நாணத்தினால் அடையும் நன்மையை, மற்றவர்களும் அடையும் பொருட்டுச் செயல்படுவதே சான்றோர் கடமை. ஆகவே அவர்கள் தம் பழிக்காக நாணுவதுடன் பிறர் பழிக்காகவும் நாணவேண்டும். மற்றவர்களும் தாம் அடைந்துள்ள நிலையை அடையவேண்டும் என விரும்புவதே சான்றோர் நிலை. அவர்கள் சான்று கூறுவதன் நோக்கமும் அதுவே. ஐந்தவித்த அறவோனாகிய இயேசு பெருமான் தமது மாணவர்களுக்குக் கற்றுக் கொடுத்ததுவும் இதுவே.

இயேசு பெருமான், தமது மாணவர்கள் ஒவ்வொருவரும் இறைவனிடம் வேண்டுதல் செய்யும் போது, தனக்காக மட்டும் வேண்டுதல் செய்யாது மற்றவர்களுக்காகவும் வேண்டுதல் செய்யக் கற்பிக்கின்ருர்.

"விண்ணுலகிலுள்ள எங்கள் தந்தாய்......
எங்களுக்கு மன்னியும்." ('எனக்கு' மன்னியும் என்ருது, 'எங்களுக்கு').

இவ்வாறு தன் பழியுடன் பிறர் பழிக்காகவும் நாணுபவர்களே நாணுக்கு, உறைபதி என்னும் சிறப்பைப் பெறுவர் உலகமும் இவர்களை இவ்வாறே கூறும்.

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

நாணுக்கு உறைபதியாகிய இவர்கள், பிறர் பழி கண்டவிடத்து, அப் பழியைத் தூற்ருது, அப் பழியிலிருந்து அவர்களை விடுவிக்கவே முயற்சிப்பர். அம் முயற்சியே விடுதலைச் செய்தியாம் நற்செய்தியை அறிவித்தல் ஆகும்.

பிறர் பழியே எளிதில் நமக்குத் தெரியக்கூடிய தாகையாலும், அதைக் கொண்டு தன் பழியைக் கண்டுகொள்ளலாம் என்பது கொண்டும், பிறர் பழியை எண்ணி, அவர்களைக் குறைகூறுவதற்குப் பதில் அவர்கள் பழிக்காக நாணும் நாணம் சிறந்தமையானும், பிறர்பழி முன்னும், தன்பழி பின்னும் கூறப்பட்டது.

பிறர் பழி தன் பழி ஆகிய இவைகளுக்காக நாணும் இந்நாணம், எல்லாவற்றிலும் மேன்மையானது. உயர்வைக் கொண்டுவரக் காரணமானது. உலகையும் விட ஒருவனுக்கு மேலானது. சிறந்த

சான்ரேோர் இந்த நாணயமாகிய வேலியைத்தமக்குப் பாது காவலாகக் கொள்ள விரும்புவார்களேயன்றி பரந்து பட்ட இவ்வுலகைப் பெரிதாக எண்ணமாட் டார்கள். அதாவது அவர்களுக்கு முன்னர் நாணம், உலகம் இவ்விரண்டில் நாணமே சிறப்படைகிறது. உலகம் தாழ்வடைகிறது. அவர்கள் உலகினும் சிறப்பாக நாணத்தை மதிக்கின்றனர்.

நாண்வேலி கொள்ளாது மன்ரேோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

மேலானவர் நாணமாகிய வேலியைக் கொள் ளாது வியன் ஞாலத்தைப் பேணமாட்டார் அன்ரேோ? மேலாயவரின் நிலே இதுவே. கீழானவர் நாணத்தை வேலியாகக் கொள்ளாது, உலகையே வேலியாகக் கொள்வர். அவ்வேலி அழிந்து அவர் களும் அழிவர். உண்மை வேலி நாணமே. அதுவே ஒருவனே அழியாமல் காக்கவல்லது. உல கினும் உயர்ந்தது.

நாணம் உலகினும் உயர்வானது. பாது காப் பளிப்பது. ஒருவனுக்கு உலகைக் காட்டிலும் உயர் வானது அவனது உயிர். அந்த உயிருடன் ஒப் பிடுங்கால் நாணின் நிலே என்ன? உயிரா, நாணமா, எது உயர்ந்தது? உயிருக்காக நாணத்தை இழப்பது சிறந்ததா? அல்லது நாணத் திற்காக உயிரை இழப்பது சிறந்ததா?

''ஒருவன், தான் செய்த கருமத்திற்காக நாணு தல் தவறு. செயல்படும் முறை எப்படிப்பட்டதாயி னும், அதன் முடிவு நல்லதாளுல் போதும். ஆகவே ஒருவன் எந்தச் செயலேச் செய்தாலும் அச்செயலுக் காக நாணுதலும், நாணும்படியாகச் சொல்லுதலும் தவறு; இப்படிப்பட்ட தவருன கொள்கைகள் நாட் டில் கோழைகளே உருவாக்கும். வீரர்களேக்

கோழைகளாக்கும்; ஆகவே, இக்கொள்கையைப் பரப்புகிறவர்களும், கைக்கொள்ளுகிறவர்களும், நாட்டில் வாழத்தகுதியற்றவர்கள்; நாடு சிறப்படைய இக்கொள்கையுடையவர்களை அழிப்பதே சிறப்பு" என்ற ஒரு கொள்கை நாட்டில் மேலோங்கி, நாணுடைமையை வற்புறுத்துகிறவர்களுக்குச் சாவா? வாழ்வா? என்ற மரணவாழ்வுப் போராட்டம் ஏற்படுமாளுல் நாண் ஆள்பவர் நிலை என்ன?

நாணுடைமைக்காக உயிரைத் துறப்பரேயன்றி உயிர்ப்பொருட்டால் நாணைத்துறவார். இவ்வாறு நாணுக்காக உயிரைத் துறப்பவரே நாண் ஆள்பவர்.

> நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
> நாண்துறவார் நாண்ஆள் பவர்.

மேலாயவர் நாண் வேலி கொள்ளாது வியன் ஞாலம் பேணாததுடன், நாணால் உயிரையும் துறப்பர். அவர்களுக்கு எல்லாவற்றினும் சிறந்தது நாணுடைமையே. ஏனெனில் எல்லா நன்மையையும் தரத்தக்கது அதுவே. எல்லாச் சிறப்பிற்கும் அடிப்படைக் காரணமாய் இருப்பதும் அதுவே. தன்னுடைய பழைய நிலையை மாற்றித் தன்னைத் தவறில்லாப் புது மனிதனாக்குவதும் அதுவே.

நாணுடைமையின் சிறப்பைக் காட்டும் வள்ளுவர் நாண் இல்லாவிடத்து ஏற்படும் இழிவையும் காட்டுகிறார்.

தவறு செய்வது மனித இயல்பு. தவறே இல்லாத மனிதன் ஒருவனையும் காணமுடியாது. தவற்றுக்கு நாணித் திருந்துவதே மாந்தர்ச்சிறப்பு. நாணித் திருந்தாதவன் ஊனுடை உயிரேயன்றி மனிதனல்லன்.

பிறர் பழியும், தம்பழியும் நாணும், நாணுக்கு உறைபதியாகிய சான்றோர் ஒருவர், ஒருவனிடம் சென்று, அவன் செயலுக்கு அவர் நாணி, அவனுக்கு ஆக்கமளிக்கக் கூடியவைகளைக் கூறியும், அவன் அதை ஏற்றுக்கொள்ளாமலும், அவன் தன் செயலுக்காக நாணுமலும் இருப்பானாகில், அவனைக் கண்டு அறம் நாணமடைய வேண்டிய நிலை ஏற்படும்.

*பிறர் நாணத்தக்கது தான் நாணுனாயின்*
*அறம் நாணத் தக்க துடைத்து.*

அறம் அவனைக் கண்டு நாணமடைய வேண்டிய நிலை இருக்குமானுல் அவனது நிலை எவ்வளவு பயங்கரமானது?

அவனுக்கு மட்டுமே இழிவு ஏற்படுவதுடன் நின்று விடவில்லை. அவனைச் சார்ந்தவர்களும் இழிவையடைகின்றனர், சார்ந்தவர்களாகிய குலம் இவ்வாறு இழிவடைந்து தீமையால் சுடப்படுவதுடன் நின்று விடுவதில்லை. அவன் சார்ந்துள்ள கொள்கை பிழைபட்டு அதன் நலமும் சுடப்பட்டு விடுகிறது.

*குலஞ்சுடும் கொள்கை பிழைப் பின் நலஞ்சுடும்*
*நாணின்மை நின்றக் கடை.*

ஆகவே சிறந்த கொள்கை பிழைபடாதிருக்க, அதைக் கைக் கொள்ளுகிறவர் நாணுடைமையுடையவராகத் திகழ வேண்டும். அன்புடைய உள்ளத்தில் நாணம் இயல்பாகவே தோன்றிவிடும். ஒருவனிடத்தில் நாணம் இன்றேல் அவனிடத்து அன்பு நிலைகொள்ளாது. அன்பற்ற உள்ளத்தில் இறைவனுக்கு இடமில்லை.

எனவே சிறந்த கொள்கை பிழைபட்டு, அதன் நலமும் சுடப்படுவதற்குக் காரணம், அக்கொள்கை

யையுடைய மக்களின் நடத்தையே; உள்ளத் தன்மையே.

நற்செய்தியின் கொள்கை இந்த நாட்டில் முழுவதுமாய்ப் பரவாமைக்கும், பரவியது நிலைக்காமைக்கும் அக்கொள்கையைப் பின் பற்றிய மக்களும் காரணமாகலாம். இன்றும்—தமிழகத்தில் காணப்படும் நிலைஎன்ன? இயேசுவைப் பாராட்டத் தயங்கவில்லை; ஆனால் இயேசுவின் அடியவர் எனத்தங்களைக் கூறிக் கொள்ளுகிறவர்களைச் சந்தேகக்கண் கொண்டு நோக்குகிறது தமிழகம். காரணம், கொள்கையின் குறைபாடன்று; கொள்கையைக் கைக் கொள்ளும் மக்களின் குறைபாடு. இந்நிலையைக் கிறித்தவ அன்பர்கள் எண்ணிப்பார்த்தல் வேண்டும் என்பதை இக்குறட்பா சுட்டிக் காட்டுகிறது.

நாணத்தை உள்ளத்தே கொள்ளாத மக்கள் தோற்றத்தால் மக்களேயன்றி வேறில்லை. அவர்கள் அழிவைநோக்கிச் சென்று அழிவடையப் போகிறவர்கள். நாணத்தை உள்ளத்தே கொண்டவர்களோ நீடு வாழ்வு அடையப் போகிறவர்கள்.

நாண் அகத்திலே இல்லாதார் இயக்கம், நாணால் இயக்கப்படும் மரப் பாவையின் இயக்கத்தையொத்தது' நாண் இயக்கம் நின்றவுடன் மரப்பாவையின் தன்மை வெளிப்படுகிறது. அது உயிரற்றது.

> நாண் அகத்தில்லார் இயக்கம் மரப்பாவை
> நாணால் உயிர் மருட்டியற்று.

'மருட்டியற்று' என்ற சொல்லில், அரிய பொருளை அடக்கியுள்ளார் திருவள்ளுவர். இந்த மயக்கமாகிய மாயைதான் உலகை ஆட்டிவைக்கிறது. இதி

லிருந்து விடுதலையைக் கொடுக்க இறைவன் இப் பூவுலகிற்கு வந்தார்.

அன்பின் வடிவான இறைவனையுணர்ந்த உள்ளத்தில் அன்பு தோன்றுகிறது. அன்பாகிய ஒளி வந்த உள்ளத்தில் கருமமாகிய அழுக்கு வெளிப்பட்டுத் தோன்றுகிறது. கருமமாகிய அழுக்கைக் கண்ட உள்ளம் அதற்காக நாணுகிறது. இம்மாற்றம் அவனைப் புது மனிதனாக மாற்றுகிறது. அவனுடையமனம் இதுவரை சென்ற வழியிலிருந்து திரும்பி இப்போது வேறு திசையில் செல்லத் தொடங்குகிறது. இதுவே கிறித்தவ முறையில் ''மனந்திரும்பல்'' என அழைக்கப்படுகிறது.

''மனந்திரும்பும் ஒரு பாவியைக் குறித்து வானகத்தில் மிகுந்த மகிழ்ச்சியுண்டாகும்.'' [லூக்கா 15:7]

மனந்திரும்பிய பின்னர் நடைபெறுவதென்ன? கடவுளோடு ஒப்புரவாகுதல், மனிதரோடு ஒப்புரவாகுதல். இனி ஒப்புரவைக் காண்போம்.

## 3 ஒப்புரவறிதல்

*அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு*
*ஐந்து சால்பூன்றிய தூண்.*

''பழையன கழிந்து போயின. இதோ! புதியன தோன்றியுள்ளன. இவை எல்லாம் கடவுள் செயல் தான். அவரே கிறித்துவின் வழியாய் நம்மைத் தம்மோடு ஒப்புரவாக்கி, ஒப்புரவு செய்யும் திருப்பணியை எங்களுக்குக் கொடுத்தார். உள்ளபடியே கடவுள் உலகினரின் குற்றங்களுக்குரிய கடனைக் கணிக்காமல் அவர்களைக் கிறித்துவிற்குள் தம்மோடு ஒப்புரவாக்கினர்.'' [2 கொரிந்தியர்:5:17-19]

ஒப்புரவிற்கு மூலகாரணர் இறைவனே. தன்னை விட்டுப் பிரிந்து சென்ற மனிதனைத் தன்னோடு

மீண்டும் இணைக்கும்படியாக அவரே நம்மைத் தேடி வந்தார். அவர் நம்மைத் தேடிவந்ததுடன், தம்மையே நமக்காகச் சிலுவையில் தியாகம் செய்த தால், அன்பு இன்னதென நாம் உணர்ந்தோம். அவருடைய அன்பினுல் நாம் கடவுளுடன் ஒப்புர வானும் கடவுளோடு ஒப்புரவான அவ்வன் பைப் பருகிய நாம், மற்றவர்களும் அதைப் பரு கும்படியாக, மற்றவர்களுடனும் ஒப்புரவை ஏற் படுத்தக் கடன்பட்டவர்களாகிறோம்.

ஒப்புரவு கைம்மாறினை எதிர்பார்த்து நடை பெறுவதில்லை. உலகினை வாழவைப்பது மழை. மழை பெய்யாவிடில் உயிர்கள் நிலை பெறமுடியாது. மழை உலகிடம் என்ன கைம்மாறு எதிர் நோக்கிப் பெய் கிறது? உலகம்தான் அதற்கு என்ன கைம்மாறு செய்ய முடியும். அவ்வாறே ஒப்புரவும் கைம்மாறு வேண்டாக் கடப்பாடாகும்.

> "அவர் நல்லோர் மேலும் தீயோர் மேலும் தம் கதிரோனை உதிக்கச் செய்கிறார். நீதி யுள்ளோர் மேலும், நீதியற்றோர் மேலும் மழை பொழியச் செய்கிறார். உங்களுக்கு அன்பு செய் கிறவர்களுக்கே நீங்கள் அன்பு செய்வதால், உங்களுக்கு என்ன கைம்மாறு கிடைக்கும்"
> மத்தேயு. 5:45,46

கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு.

> "கர்த்தர் எனக்குச் செய்த எல்லா நன் மைகளுக்காகவும். அவருக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்." சங்கீதம் 116:12

ஆகவே கடவுள் மனிதர் மீது அன்பு கூர்ந்த தும், மனிதர்களுக்காக யற்ற எல்லாவற்றையும் கொடுத்ததுடன் அமையாது, தம்மைப் பலியாகக்

கொடுத்து, மீட்பாகிய செல்வத்தைச் சேர்த்து வைத்திருப்பதும் கைம்மாறு கருதியன்று. அவருக்கு மக்கள் செய்யக்கூடிய கைம்மாறும் உண்டோ? ஆனால் அதே நேரத்தில் அவரிடம் மீட்பாகிய விலையேறப்பெற்ற செல்வத்தைப் பெறற மக்களுக்கு ஒரு கடமையுண்டு. தாங்கள் பெற்ற அச்செல் வத்தைத் தாங்கள் மட்டுமே வைத்துக் கொள்ளாது அதை மற்றவர்களுக்கும் கடத்த வேண்டும். தான் பெற்ற உலகப் பொருட்களை மற்றவர்களுக்கு, அதா வது பொருள் இல்லாத வறியவர்களுக்குக் கொடுப் பதே ஈகை. உலகப் பொருளைத் தாண்டி, மிக விலை மதிப்புள்ள ஆன்மீகப் பொருளாகிய மீட்பைத் தான் பெற்றுக்கொள்வதுடன், அதை மற்றவர்களுக்கும் கொடுப்பதே ஒப்புரவு. ஆகவேதான் வள்ளுவர் ஈகையைத் தனி அதிகாரமாகவும், ஒப்புரவைத் தனி அதிகாரமாகவும் வைத்ததுடன், ஒப்புரவைச் சான்றோனுடன் இணைத்து, சான்றோனுக்குரிய ஐந்து தூண்களில் நடுத்தூணாகவும் வைத்தார். ஐந்து குணங்களில், அன்பும் நாணும் அவன் ஒரு வனுக்கே நன்மை. கண்ணோட்டமும் வாய்மையும் மற்றவர்களுக்கும் நன்மை. இவ்வாறு, தான் பெற்ற இன்பத்தை மற்றவர்களுக்கும் கொடுக்கும் தன்மை தோன்றுவதற்குக் காரணமாய் இருப்பதே, நடு நாயகமாக விளங்கும் ஒப்புரவறிதல் ஆகும்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே, ஏற் பட்டிருந்த பெரும் பிளப்பைச் சரிப்படுத்தி, கடவு ளுக்கும் மனிதனுக்கும் ஒப்புரவை ஏற்படுத்திய வரே ஐந்தவித்தானாகிய இயேசு பெருமான்.

> "முன்னே நீங்கள் இறைவனோடு உற விழந்து நின்றீர்கள். அவர் மீது பகையுள்ளம் கொண்டவர்களாய்த் தீய செயல்களில் மூழ்கி இருந்தீர்கள். இப்பொழுதோ உங்களை மாசு

மறுவும், குறைபாடுமின்றிப் பரிசுத்தர்களாய்த் தம் திருமுன் நிறுத்த இறைவன் விரும்பி, கிறித்துவினுடைய ஊனுடலில் அவருடைய சாவின் வழியாக உங்களைத் தம்மோடு ஒப்புரவாக்கினார்.'' கொலோ. 1:21,22.

''சிலுவையில் அவர் சிந்திய இரத்தத்தால் சமாதானம் உண்டாக்கி, விண்ணிலும் மண்ணிலும் உள்ள யாவற்றையும் அவர் வழியாகத் தம்மோடு ஒப்புரவாக்க விரும்பினார்''
கொலோ 1:20

ஆகவே இயேசு பெருமான் சிலுவையில் தாளாற்றித் தந்த விலைமதிப்பற்ற பொருளாகிய மீட்பைப் பெற்று ஒப்புரவாகிய அடியவர்கள், தாங்களும் மற்றவர்களுக்கு அதை வெளிக்காட்ட வேண்டும்.

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

இந்த ஒப்புரவிற்கு நிகரான நன்மை உலகில் வேறெதுவும் இல்லை. இவ்வுலகில் மட்டுமல்லாது புத்தேளுலகத்தும் இதற்கு நிகர் வேறு இல்லை.

புத்தேளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

கடவுளோடு இணைந்து உறவாடுவதைவிடச் சிறந்த வேறு ஒன்று, இங்கு மட்டுமல்லாது எங்குமே இருக்கக் காரணம் இல்லையல்லவா? ஆகவே, தனக்குக் கடவுளுடன் இருந்த பிளப்பு நீக்கப்பட்டுக், கடவுளுடன் ஒப்புரவான நிலையில் தான் அடையும் இன்பத்தை மற்றவனுக்குக் கொடுக்காமல் இவனால் இருக்க முடிவதில்லை. 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என மற்றவர்களுக்

கும் இவ்வின்பத்தின் ஒப்புரவை விரிவு படுத்தி, மற்றவர்களையும் இதற்குள் கொண்டு வந்து சேர்க்கிறான். மற்றவர்களும் இன்பமடையக் காரணமாகிறான். இன்பத்தில் உயிர் வாழ்கிறான்.

ஆனால் எவன் ஒருவன் இவ்வாறு தான் பெற்ற இன்பத்தை மற்றவனுக்கும் கொடுத்து, மற்றவனும் தான் அடையும் இன்பம் அடைவதைக்கண்டு மகிழவில்லையோ, அவனுள் உயிர் இல்லை என்பதே பொருள். அதாவது உயிர்க்கு உயிராய் விளங்கும் இறைவன் இல்லை. இறைவனுடன் அவனுக்கு ஒப்புரவு இல்லை.

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

அதாவது அவன் உயிர் இருப்பவகனுகக் காணப்பட்டாலும், ஒப்புரவாகிய இன்பத்தை மற்றவர்களும் அடையக் காரணமாய் இல்லாமையால், ஒப்புரவாகிய இன்ப உயிர் இல்லாச் செத்தவனைகவே கருதப்படுவான்.

ஆகவே ஒத்தறியக் கூடிய உணர்ச்சி மிக்கவன் என்ன செய்கிறான். தான் பெற்ற இன்பத்தைத் தான் மட்டுமே அடக்கி வைத்துக்கொள்ளுவதில்லை. மற்றவர்களுக்கும் அது பயன்படும்படியாகச் செயல் படுகிறான். தான் பெற்றதை மற்றவர்களுக்குக் கொடுக்கிறான். கடவுளோடு ஒப்புரவாகிய காரணத்தால், பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்பட்டு, அவ்வாவியின் நிரப்புதலை மற்றவர்களும் அடையும்படியாக, மற்றவர்களுடன் ஒப்புரவை ஏற்படுத்துகிறான். இவன் பெற்ற வானுகிய மழைநீர் மற்றவர்களுக்கும் பயன்படுகிறது.

இதை உவமையாகக் கூறக்கூடுமானுல் ஊருக்கு மத்தியிலுள்ள ஊருணி, தன் அளவில், தான்

மட்டுமே எதுவும் மக்களுக்குப் பயன்பட முடியாது. ஆனல் வான் பொழிந்து, நீரால் நிரப்பப்படுமானல் அந்நீர் மற்ற யாவருக்கும் பயன்படுகிறது.

ஊருணி நீர்நிறைந் தற்ருல் உலகவாம்
பேரறி வாளன் திரு.

ஊருணி தான் இடம்பெயராமல் இருந்து கொண்டு, தன்னிடம் வருகிறவர்களுக்குத், தன்னிடம் நீர் இருந்த காலத்து மட்டும் பயன்படுகிறது. தன்னிடம் உள்ள நீரையும், தன் முயற்சியினல் மற்றவர்களுக்குக் கொடாது, மற்றவர் முயற்சியால் தன்னிடம் வந்து பெற்றுக்கொள்ளும்படி இருக்கிறது. அதுவும் தான் நிரப்பப்பட்டிருக்கின்ற காலத்தில் மட்டுமே பயன்படுகிறது. ஆகவே இதை விடச் சிறந்த நிலை சான்ருேனில் உண்டு என்கிருர் வள்ளுவர்.

தன்னிடத்தில் தோன்றியிருக்கும் கனியைத் தான் வைத்துக்கொள்ளாது, மற்றவர் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும், மற்றவர்களுக்குக் கொடுத்தேவிடும் கனிமரத்தைப் போன்று செயல்பட வேண்டியது சான்ருேர் கடன்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்ருல் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

இப்பயன் மரத்தையும்விட உயர்ந்தபடி உண்டு. பயன்மரம், தன்னிடம் கனி இருந்தால் மட்டுமே, காலத்தில் கொடுக்கும். மற்றக் காலத்துப் பயன் குன்றி இருக்கும். ஆனல் சான்ருேனே அதையும் விடத் தாண்டிச் செயல்பட வேண்டும். தான் பெற்றதை மட்டுமல்லாது, மற்றவர்களுக்காகத் தன்னையே கொடுக்கவேண்டும். தன் அழிவுதான் மற்றவர்களுக்கு ஆக்கத்தை விளைவிக்கக் கூடுமானல், தன்னையே தியாகம் செய்யவும் இவன் பின்

வாங்கக்கூடாது. மருந்து மரம், தனது கனி, காய், பூ, இலை, தண்டு ஏன் வேர் வரை மற்றவர்களுக்குப் பயன்பட்டு, மற்றவர் வாழத் தான் மாழக்கொடுப்பதைப் போன்று, மற்றவர் பொருட்டு தன்னையே தியாகம் செய்ய வேண்டுவதே சான்றோர் கடன்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

பெருந்தகையானுக்கு உவமை கூறுங்கால் மருந்து மரத்தற்றால் எனக் கூறினால் போதும். வள்ளுவர் அதைத் தாண்டி 'மருந்தாகித் தப்பா மரத்தற்றால்' என, 'தப்பா' என்ற சொல்லின் மூலம் வேறு பல பொருளையும் விளக்கிக் காட்டுகிறார்.

மருந்துமரம் தன்னையே மற்றவர்களுக்காகக் கொடுத்து மற்றவர் பிணியைத் தீர்க்கிறது. அவ்வாறே, இறைவனிடமிருந்து பிரிந்த உலக மக்களை மீண்டும் இறைவனோடு ஒப்புரவாக்கவும், உலக மக்களின் பாவப்பிணியை நீக்கவும் தன்னையே சிலுவை மரத்தில் ஒப்புக்கொடுத்து மருந்தானார் இயேசு பெருமான்.

மருந்து மரத்திலிருந்து கிடைக்கக்கூடிய மருந்தானது, தப்பாமல் எல்லா நோயையும குணமாக்கும் எனக் கூற முடியுமா? முடியாது. ஆனால் இங்கு குறிக்கப்படும் மரம் 'தப்பாமரம்'. ஆகவே இது சாதாரண மருந்து மரத்திலிருந்து மாறுபட்ட சிறப்பு மரம்.

நோய் இருவகைப்படுகிறது. உடலுக்குத் தீமை பயப்பது உடல் நோய். உள்ளத்திற்குத் தீமை பயப்பது உள் நோயாகிய ஆன்ம நோய். சாதாரண மருந்து மரம் உடல் நோயை மட்டுமே நீக்குமேயன்றி ஆன்ம நோயை நீக்க முடியாது. உடல் நோயுடன் ஆன்ம நோயையும் நீக்கும்

தப்பாமரம் ஒன்றுண்டு. அம்மரத்தைச் சிந்தை செய்தால், இருவகை நோயினின்றும் விடுதலைபெற முடியும். அச் சிறப்புப் பெற்ற மரம் எது? அதுவே மக்களின் உடலுக்காகவும், ஆன்மாவுக்காகவும், மக்களுக்கும் இறைவனுக்கும் ஒப்புரவை ஏற்படுத்த, ஒப்புரவின் பெருந்தகையான இயேசு பெருமான் தம்மையே ஒப்புக்கொடுத்து மற்றவர்களுக்கு முன் மாதிரியாக வைத்துப்போன சிலுவை மரம்.

மரம் இங்கு ஆகுபெயராய் மரத்தில், மீட்பாகிய பொருளை ஈட்டிய இயேசு பெருமானைக் குறித்தது.

ஆகவே இயேசுவைப் பின்பற்றி இயேசுவுக்குச் சான்று கூறும் சான்றோர்கள் சிலுவை மரத்தைப் பின்பற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள் தங்களையே மற்றவர்களுக்காகக் கொடுக்க வேண்டியது அவர்களுடைய கடமையாகும்.

"ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால் அனுதினமும் தன்னைத்தானே வெறுத்து தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றி வரக் கடவன்," (கலாத். 6:14)

இக் கடமையை உணர்ந்த காட்சியவர்களாகிய சான்றோர், ஒப்புரவாகிய நன்மையைச் செய்ய இடமில்லா இக்கட்டான நிலையிலும் ஒப்புரவு செய்வதில் தீவிரித்து நிற்பார்களேயன்றி தமது இயலாமையைக் கண்டு சோர்ந்து போவதில்லை.

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர்.

இயேசு பெருமான் இவ்வுலக மானிட வாழ்வின் இறுதி நேரத்தில், தமக்குள்ள மேன்மை எல்லாம் விட்டு, சிலுவை மரத்தில் ஆணிகளால் அடிக்கப் பட்ட அந்தக் கடைசி நேரத்திலும், தம்மிடம் வேண்டிக்கொண்ட கள்வனுக்கு அருள்புரிந்த

அக்காட்சி, அவ்வொப்புரவின் தன்மை, கடனறி காட்சியவர் இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் என்பதை முன் மாதிரியாய் எடுத்துக்காட்டி விளக்குகிறது.

> " நாம் கடவுளின் பிள்ளைகளாயின், உரிமையாளர்களுமாய் இருக்கிருேம். ஆம், கடவுளின் செல்வத்திற்கு உரிமையாளர்களா ஞல் அவருடைய பாடுகளில் நாம் பங்கு பெறவேண்டும்." (ரோமர். 8:17)

நயனுடைய சான்ருேர் நல்கூர்ந்த நிலை எப்போது? உலகப் பொருளற்ற நிலையா? இல்லை, இல்லை. செய்ய வேண்டிய நன்மையைச் செய்ய முடியா நிலை ஏற்படுவதே. செய்யவேண்டிய நன்மையைச் செய்ய முடியா நிலை ஏற்படுவதைப் போன்று, நயனுடைய சான்ருேர்க்குத் துன்பம் கொடுப்பது வேருென்றும் இல்லை. செல்வமின்மை யால் ஏற்படும் வறுமை அவர்களுக்கு ஒரு பொருட் டன்று. அவர்கள் அதைப்பற்றிக் கவலைகொள்ளு பவர்களுமல்லர். அந்நிலை அவர்கள் மனம் விரும்பி ஏற்றுக்கொள்ளும் நிலையே. ஆனுல் செய்ய வேண்டிய நன்மையைச் செய்யமுடியா நிலையே அவர்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் நிலை. அதுவே அவர்கள் வறுமை நிலை.

> நயனுடையான் நல்கூர்ந்தா னுதல் செயும்நீர்
> செய்யாது அமைகலா வாறு.

" ஒப்புரவு செய்வது எளிதானதன்று. இன்பம் கொடுக்கக்கூடியதன்று. துன்பம் வரும். கேடு வரும் " என்று உங்களுக்குச் சொல்லப்படுமானுல் அதைக்குறித்து நீங்கள் கவலைகொள்ளத் தேவை இல்லை. ஒப்புரவு செய்வதினுல் வரும் கேடு தள்ளத் தக்கதன்று; கொள்ளத்தக்கது. அதுவும் எவ்வாறு

கொள்ளத்தக்கது ? தன்னிடத்திலுள்ள எல்லாப் பொருளையும் விற்றுவது கொள்ளத்தக்க பெருமை யுடையது மட்டுமன்று தன்னையே விற்றுவது கொள்ளத்தக்க பெருமையுடையது; ஏனெனில் அது அவ்வளவு சிறந்தது.

இயேசு பெருமானும் மனிதருக்கும் இறைவ னுக்கும் இடையே ஒப்புரவு ஏற்படும்படியாக, ஒப்புரவின் உள்ளம் கொண்டு, தம்மையே சிலுவை மரணமாகிய கேட்டிற்கு விற்று ஒப்புரவின் மேன்மை யைச் சம்பாதித்தார் அல்லவா ?

ஒப்புரவினால் வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

இயேசு பெருமானைப் பின்பற்றும் அவர் அடியவ ராகிய சான்றோரும், அவ்வாறே தங்களையே விற்று ஒப்புரவைப் பெறக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

அவர்கள் அடையும் கேடு பேரின்பத்திற்குக் காரணமானதேயன்றி துன்பத்திற்குக் காரணமான தன்று.

" நீதியினிமித்தம் துன்புறுத்தப்படுவோர் பேறுபெற்றோர்
ஏனெனில் விண்ணரசு அவர்களதே " (மத். 5:10)

" மனுமகன் பணிவிடை பெறுவதற்கன்று, பணிவிடை
புரியவும், பலருடைய மீட்புக்கு விலையாகத் தம்
உயிரை அளிக்கவும் வந்தார்." (மத். 20:28)

ஆகவே அவர் தம்மையே விலைக்கு விற்றார்.

" கிறிஸ்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார் ;
இதனால் அன்பு இன்னதென்று அறிந்தோம்.
ஆகவே நாமும் நம்முடைய சகோதரர்களுக்காக
நம் உயிரைக் கொடுக்கவேண்டும்." (I யோ. 3:16)

இவ்வாறு செய்யும் செயலே ஒப்புரவை ஏற்படுத்தும். ஒப்புரவு வந்த உள்ளத்தில் அடுத்துத் தோன்றுவது என்ன? அன்பு நாணத்தையும், நாணம் ஒப்புரவையும் பிறப்பித்ததைக்கண்டோம். மற்றவர்களுக்காகத் தன்னையே கொடுக்கும் உள்ளம் மற்றவர் செய்யும் தீமையை மன்னிக்கிறது. மன்னிக்கும் இரக்க குணமே கண்ணோட்டம்.

## 4. கண்ணோட்டம்

*அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு*
*ஐந்து சால்பூன்றிய தூண்.*

அன்பே உருவான இறைவனை அறிந்த உள்ளத்தில் அன்பின் ஒளி வீசுகிறது. அன்பின் ஒளிவந்த இடத்தில் அழுக்காகிய கருமம் வெளிப்பட்டு, அதன் காரணமாக நாணம் பிறக்கிறது. நாணிய உள்ளம் ஒப்புரவையறிந்து நன்மையைச் செய்கிறது. மற்றவர்களின் நன்மையையே எண்ணும் உள்ளம் மற்றவர் செய்யும் தீமையை மன்னிக்கிறது; மறக்கிறது. மன்னிக்கும் மனப்பான்மையே வள்ளுவரால் கருணை மிகுந்த கண்ணோட்டம் எனக் காட்டப்படுகிறது.

தனது கீழ்ப்படியாமையால் இறைவனிடமிருந்து பிரிந்து, துன்ப நிலையை அடைந்த மனிதனை மீண்டும் இறைவனோடு இணைக்கும்படியாக, இறைவன் மனித உருவை ஏற்று மனிதனாக இப் பூமியில் தோன்றினார். மனிதரின் துன்பத்தைத் தாம் ஏற்று இவர்கள் அடையவேண்டிய தண்டனையைத் தாம் அடைந்து மக்கள் மீது கண்ணோட்டமுடையவராய்த் தம்மையே சிலுவை மரணத்திற்கு ஒப்புக் கொடுத்து, மக்களுக்கு மன்னிப்பைச் சம்பாதித்து வைத்தார். அவர் சிலுவையில் சம்பாதித்த மன்னிப்பின் காரணமாகவே இவ்வுலகம் நிலை பெற்று, மக்கள் நீடு வாழ்வடைகின்றனர்.

ஆகவே கண்ணோட்டம் (மன்னிப்பு) எனப்படும் மிகப்பெரும் அழகு (நன்மை) இருக்கின்ற காரணத்தால்தான் இவ்வுலகம் நிலைபெற்றிருக்கிறது.

கண்ணோட்டம் என்னும் கழிபெருங்காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு.

இயேசு பெருமானால் ஏற்படுத்தப்பட்ட கண்ணோட்டத்தைப் பெற்ற சான்றோர், மற்றவர்களிடத்தும் கண்ணோட்டத்துடன் விளங்க வேண்டுவது இன்றியமையாததாகும். மற்றவர்களை மன்னிக்கும் மனம் அற்றவனுக்கு மன்னிப்பு இல்லை. இதைத் திட்டமாக உணர்த்துவதற்காகத்தான் இயேசு பெருமான் தம்முடைய சீடர்களுக்குக் கற்றுகொடுத்த வேண்டுதலில்—

"எங்களுக்கு எதிராகக் குற்றம் செய்தவர்களை நாங்கள் மன்னித்துள்ளது போல, எங்கள் குற்றங்களை மன்னித்தருளும்" [மத் 6:12]

எனக் கற்றுக் கொடுத்ததுடன் அதற்கு விளக்கமும் கொடுத்தார்.

"மனிதருடைய குற்றங்களை நீங்கள் மன்னிப்பீர்களாகில், உங்கள் வானகத்தந்தை உங்களையும் மன்னிப்பார். மனிதரை நீங்கள் மன்னியாவிடில், உங்கள் தந்தையும் உங்கள் குற்றங்களை மன்னிக்க மாட்டார்."

[மத் 6:14-15.]

இரக்கமுடையோர் பேறு பெற்றோர்,
ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர். [மத் 5:7.]

பத்தாயிரம் பொற்காசு கடன்பட்ட ஒருவன், தன் அரசனால் மன்னிக்கப்பட்டுத் திரும்புங்கால், தன்னிடம் நூறு வெள்ளிக் காசு கடன்பட்ட உடன் ஊழியனுக்கு மன்னிக்க மறுத்த காரணத்தால், தான்

பெற்ற பத்தாயிரம் பொற்காசு மன்னிப்பை இழந்து துன்பத்திற்காளாயினன். [மத் 19:23-35]

ஆகவே உலகியல், கண்ணோட்டத்துள் அடங்கியுள்ளது. அத்தகைய கண்ணோட்டம் இல்லாதவர் வாழ்ந்தும் வாழாதவர்களே. அவர்கள் வாழ்வது உண்மையில் நிலத்திற்குப் பாரமேயன்றி பயனில்லை.

கண்ணோட்டத்துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

மன்னிக்கும் மனப்பான்மையுள்ளவனே மனிதன். மற்றையான் பாரமே பூமிக்கு. மனித வாழ்க்கையையும் மன்னிக்கும் இயல்பையும் பாடலுக்கும் பண்ணுக்கும் ஒப்பிடலாம். பண் சிறந்தால் பாடலும் சிறக்கும். பண் சிறப்பின்றேல் பாடலும் சிறப்படையாது. பண்ணும் பாடலும் ஒருங்கியைந்து நடைபெறுங்கால் அது நனி சிறப்புப் பெறும். கண்ணாகிய பாடலும் கண்ணோட்டமாகிய பண்ணும் இசையாவிடில் கண்ணாகிய பாடல் பயனற்றதாகும்.

பண்என்னும் பாடற்கு இயைபின்றேல் கண்என்னும்
கண்ணோட்டம் இல்லாத கண்.

முகத்தில் காட்சியளிப்பது கண். கண்ணின் பயன் கண்ணோட்டம். வெளியுலகுடன் தொடர்பு கொள்ளும் கருவியாய் இருப்பது கண். வெளியுலகிலுள்ள யாவருடனும் இணைந்து வாழ்வதற்கு அவசியமானது கண்ணோட்டமாம் இரக்க குணமாகிய மன்னிக்கும் மனப்பான்மை. இக்குணம் இல்லாதவனுடைய கண்கள் முகத்தில் உளபோலக் காட்சியளிப்பினும் அதனால் பயன் என்ன?

உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.

''உன் வலக்கண் உனக்கு இடறல் உண்டாக்கினால் அதைப் பிடுங்கி எறிந்து விடு''
மத் 5:29

'அளவினால் கண்ணோட்டம்' என்பதனால் கண்ணோட்டம் காட்ட வேண்டிய அளவு குறிக்கப்பட்டது எத்தனை முறை மன்னிப்பது என்ற அளவு விளக்கப்படுகிறது.

''பின்னர் இராயப்பர் அவரை அணுகி, "ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு எதிராகக் குற்றஞ் செய்து வந்தால், நான் அவனை எத்தனை முறை மன்னிப்பது? ஏழு முறை வரைக்குமா?'' என்று கேட்டார். அதற்கு இயேசு கூறியதாவது; "ஏழு முறை என்றன்று, எழுபது முறை ஏழு முறை என உனக்குச் சொல்லுகிறேன்'' என்றார் [மத் 18:21-22]

முகத்திற்கு அழகைக் கொடுக்கும் அணிகலமாகத் திகழ்வது கண். அக்கண்ணிற்கு அணிகலமாகத் திகழ்வது கண்ணோட்டம். கண்ணிற்கு அழகைக் கொடுக்கும் கண்ணோட்டம் இல்லாவிடத்து அது அழகிழப்பதுடன் அருவருக்கவும் படவேண்டியதாகிறது. கண்ணோட்டமுடையகண் அணிகலனுடைய கண்ணாக யாவராலும் விரும்பப்படுகிறது. கண்ணோட்டமில்லாக்கண், புண்ணென அதையுடையவர் துன்பமடையக் காரணமாவதுடன், நோக்குகிறவர்களுக்கும் அருவருப்புணர்ச்சியைக் கொடுக்கிறது.

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும்.

கண் அதன் நிலை மாறினால் புண் ஆகும். மரத்திற்கும் மனிதனுக்கும் ஒரு தொடர்புண்டு.

மரத்தை வளர்ப்பது மண். அம்மரத்தை அழிப் பதுவும் அம்மண்ணே. மண்ணில் நிலை பெறும் மரம் தன் கடமையைச் செவ்வனே ஆற்றும் வரை அம்மண் அம்மரத்தை வளர்க்கிறது. என்று அம் மரம் தன் கடைமையை செய்யவில்லையோ அன்றே அம்மரத்தை அம்மண் அழிக்கிறது. மரத்தின் கடமை என்ன? மரத்தின் ஒவ்வொரு பகுதியும் மண்ணிலிருந்து தான்பெற்ற சாரமாம் சக்தியை அடுத்த பகுதிக்குக் கடத்த வேண்டும். தான் பெற் றதை மற்றதற்குக் கொடுக்க வேண்டும். தான் பெற்றதைக் கொடுக்காத விடத்து அம்மரம் அழியத் தலைப்படுகிறது. வளர்த்த மண்ணே அதை அழித்து விடுகிறது.

இவ்வாறே மனிதர்களும் தாங்கள் பெற்ற மன் னிப்பாம் கண்ணோட்டத்தை மற்றவர்களிடமும் காட்டக் கடமைப் பட்டவர்கள். மற்றவர்களுக்கு இவர்கள் மன்னியாவிடத்து, இவர்களும் மன்னிப் பைப் பெருது அழிவர். [மத் 18:23-35]

ஆகவே மண்ணோடு இயைந்த மரத்தைப் போன்று, கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் அழிவர்.

மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்து கண்ணோடா தவர்.

இவ்வதிகாரத்தைத் தகுந்த முறையில் புரிந்து கொள்ளாக் காரணத்தால் உரையாசிரியர் யாவரும் இக்குறட்பாவுக்கு உரை கூறுங்கால் இடரலடைந்து, தகுந்த பொருள் கூற முடியா நிலையை அடைந்துள் ளமை கூர்ந்த மதியினரால் நோக்கத் தக்கது.

கண்ணை அழகுபடுத்துவதும், கண்ணையுடைய மனிதனைச் சிறப்பிப்பதும் கண்ணோட்டம். கண் ணோட்டத்துடன் ஒத்தியங்க வேண்டிய அக்கண்,

கண்ணையுடைய மனிதன் தன்நிலை மாறியவிடத்து, அம்மனிதன் அழிவதற்குக் காரணமாயும் அமைந்து விடுகிறது.

கண்ணோட்டமும் மண்ணைப்போன்று ஒரு பொது விதியை யுடையது என்பதே வள்ளுவர் கொள்கை. ஆகையால்தான் கண்ணோட்டத்துள்ள துலகியல் என்றார். நமது மேன்மைக்கும் அடிப்படைக் காரணமாய் இருப்பதுவும் இம்மன்னிப்பே. இறைவன் நமக்கு ஈட்டியுள்ள மன்னிப்பில் நாம் பங்குபெற, மற்றவர் தவற்றை நாம் மன்னிக்க ஆயத்தமாயிருக்க வேண்டும். "எங்களுக்கு விரோதமாய் குற்றம்...........மன்னியும்".

மண்ணோடியையாத மரம் உயிரற்றதாயினும் காலம் நீட்டிக்கும் தன்மை பெறலாமெனக் கருதி, அதை நீக்கி 'மண்ணோடியைந்த மரம்' என்றார்.

தன் தலைவனிடம் அதிகத் தொகைக்கு மன்னிப்பைப் பெற்ற ஒரு வேலைக்காரன், தன் உடன் ஊழியனுக்குச் சிறு தொகையை மன்னியாக் காரணத்தால், மன்னிப்பைப் பெற்றும் அதைக் காத்துக் கொள்ளாது இழந்து துன்பத்திற்காளாயினான். [மத் 18:23-35]

மன்னிக்கும் மனப்பான்மை இல்லாதவர் பார்க்கவேண்டியதைப் பார்க்கும் 'கண்' இல்லாதவராவர். பார்க்கவேண்டியதைப் பார்க்கும் கண் உடையாரிடம் கண்ணோட்டம் இல்லாமை இல்லை.

> கண்ணோட்டம் இல்லவர் கணணிலர் கண்ணுடையார்
> கண்ணோட்டம் இன்மையும் இல்.

"குருடனுக்குக் குருடன் வழிகாட்ட முடியாது. வழிகாட்டப் புகுந்தால் இருவரும் குழியில் விழுவர்." ஊனக்கண் குருட்டைவிடக் கேடு

பயப்பது ஞானக்கண் குருட்டே. யாருக்கு ஞானக் கண் குருடு? அதாவது உண்மையான குருடன் யார்? என்பதை, அறிய உதவும் கருவியே கண்ணோட்டம்.

ஆகவே கண்ணோட்டம் உலகிலுள்ள ஒவ்வொருவருக்கும் தேவை. பிறர் செய்யும் தவறு களை மன்னிக்கிறவர்களே தாங்கள் செய்யும் தவறு களிலிருந்து மன்னிப்பைப் பெறுகின்றனர். ஆகவே ஒவ்வொருவனும் மற்றவர் செய்யும் தவறுகளை மன்னிக்கவேண்டும். இது முடியுமா?

மனிதன் தன்னுடைய குற்றத்தால் தண்டனைக் குள்ளானன். அவனுக்குத் தண்டனை காத்திருக் கிறது. இறைவன் கடமை, தவற்றுக்கேற்ற தண்டனையை அவனுக்கு அளிப்பதே.

இறைவன் மனிதர்மீது கண்ணோட்டம் கொண் டார். கண்ணோட்டம் கொண்ட இறைவன் கருமத் தையும் சிதைக்கக் கூடாது. ஆகவே கருமமும் சிதையாமல், கண்ணோட்டமும் கொள்ளும் வழி யைக் காட்டினர். எவ்வாறு?

மனிதன் பெறவேண்டிய தண்டனை நிறை வேற்றப்பட்டது. கருமம் சிதையவில்லை. மனிதர் மீது கண்ணோட்டமும் காணப்பட்டது. எங்கே?

சிலுவை மரமாகிய பொறிவாயில். சிலுவை மரம் காட்டி நிற்கும் நெறி இதுவே. கருமத்தின்படி உலக மக்களுக்கு வரவேண்டிய தண்டனையை அவர்களுக்குப் பதிலாகத் தாம் ஏற்றுக் கருமத்தைச் சிதையாமல் காத்தார். தண்டனையடைய வேண் டிய மக்கள் மீது கண்ணோட்டம் கொண்டு, அவர் களைத் தப்புவித்துக் கண்ணோட்டத்தின் காவல ஞனர்.

கருமம் சிதையாமல் கண்ணேடை வல்லார்க்கு
உரிமையுடைத்திவ் வுலகு.

இது துன்பத்தின் வழி. சிலுவையின் வழி. இது சாதாரண மக்களால் பின்பற்ற அரிதானது. ஆனால் சான்றோர் செல்லவேண்டிய வழி.

"ஒருவன் என்னைப் பின்பற்றி வர விரும்பினால் அவன் தன்னைத்தான் வெறுத்து அநுதினமும் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்றக் கடவன்" லூக் 9:23

"தன் சிலுவையை சுமந்துகொண்டுச் என்னைப் பின்செல்லாதவன் என் சீடனாயிருக்க முடியாது" லூக் 14:27

ஆகவேதான் கண்ணேட்டத்திற்கும் துன்பத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு இருக்கிறது.

துன்பம் அடையப் பின் வாங்குகிறவர்கள் கண்ணேட்டமுடையவர்களாகத் திகழமுடியாது. துன்பத்தை ஏற்க மனமற்று, கண்ணேட்டமாகிய மன்னிப்பை எதிர் நோக்குகிறவர்களுக்கு மன்னிப்பு ஒருபோதும் கிடையாது.

ஆகவே கண்ணேட்டம் உனக்கு வேண்டுமா? துன்பத்தை ஏற்றுக் கொள்.

யாருக்காகத் துன்பத்தை ஏற்றுக் கண்ணேட்டத்துடன் விளங்கவேண்டும்? உறவினர்களுக்காகவா? அல்லது உலகில் நல்லவர்களுக்காகவா? அல்லது நமக்கு வேண்டியவர்களாகிய நண்பர்களுக்காகவா? இல்லை! இல்லை!! நம்மோடு தொடர்பே இல்லாதவர்களாகிய நொதுமல் என்ற நிலையிலுள்ளவர்களுக்கு மட்டுமன்று, நம்முடைய

அழிவு ஒன்றையே நோக்கமாகக் கொண்டு, நம்மைத் துன்புறுத்தி அழிப்பதில் மகிழ்வு கொள்ளும், நம் பகைவர்களுக்காகவும், நாம் துன்பத்தை ஏற்றுக் கண்ணோட்டம் கொண்டு பொறுத்தாற்று தலே தலைமையான பண்பாகும்.

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும் கண்ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

ஒறுத்தாற்றும் பண்பினராகிய உரோமப் போர் வீரர்கள், தம்மைக் கொல்லும் பொருட்டுச் சிலுவையிலறைந்த காலை, அவர்கள் மீதும் கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பை உலகுக்குக் காட்டியவ ராகிய இயேசுபெருமான் கூறிய தென்ன?

"தந்தையே, அவர்களை மன்னியும், ஏனெனில் தாங்கள் செய்வது இன்னதென்று அவர்களுக்குத் தெரியவில்லை." லூக்கா 23:34

'நானே வழி' எனக் கூறி வழிகாட்டிய இயேசு பெருமான் வழி நடக்கும் அடியவருக்கும் அது கடமையன்றோ?

ஆகவே கண்ணோட்டம் உலகில் நிலைபெற வேண்டுமானால் துன்பத்தை ஏற்றுக் கொள்ளு வதைத் தவிர வேறு வழியில்லை. துன்பத்தின் வழியாகவே கண்ணோட்டத்தை அடைய முடியும்.

அண்டத்தின் தலைவனும் ஆண்டவன், இவ் வுலக மனிதர் மீது அன்பு கொண்டான். உலக மக்கள் தங்கள் இருவினையின் காரணமாக, துன்ப மாகிய இருளில் சேருவதை அறிந்தான் அவ்விரு ளிலிருந்து அவர்களை மீட்டு அவர்களுக்கு நீடு வாழ்வை அளிக்கும் பொருட்டு, அருவமாக எங்கும் நிறைந்துள்ள அவன் உருவமாகி, ஐம்புலனை ஏற்று மனிதனானான். வேண்டுதல் வேண்டாமை

இலாஞகிய அவன், கருமம் சிதையாமல் கண்ணே டும் பொருட்டாக சிலுவைப் பொறிவாயில் ஐம் புலனேயும் அவித்து (பலியிட்டு), நயத்தக்க நாகரீக மாகிய மன்னிப்பை நிலைநாட்டினுன்.

இயேசு பெருமான் சிலுவையில் பலியாஞர். இதில் ஒரு முக்கிய குறிப்பை நாம் நோக்க வேண்டும். அவர் மற்றவர்களால் பலியாக்கப் பட்டாரா? அல்லது அவர் தம்மைத்தாமே பலியாக் கிஞரா?

அவர் கடவுளின் உருவமானவர் என்ருல் அவரை மற்றவர்கள் பலியாக்க முடியாது இதைப் பற்றிய விவிலியப் பகுதியை நோக்குவோம். இயேசு பெருமான் கூற்று :-

> "ஆடுகளுக்காக என் உயிரைக் கொடுக் கிறேன். என் உயிரை மீண்டும் பெற்றுக் கொள்ளும்படி நான் அதைக் கையளிக்கிறேன். எனதுயிரை என்னிடமிருந்து பறிப்பவன் எவனுமில்லை. நாஞகவே என் உயிரைக் கையளிக்கிறேன். உயிரைக் கையளிக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு. அதை மீண்டும் பெற்றுக் கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு".

அருளப்பர் 10:15-19.

வரலாற்று மனிதஞகிய இயேசுவைத் தவிர உலகில் தோன்றிய வேறு எந்த மனிதனும் இவ் வாறு கூறியது கிடையாது. கூறவும் முடியாது.

அவர் தம்மைத்தாமே பலியாக்கியது—அக நிகழ்ச்சி. மற்றவர்களால் பலியாக்கப்பட்டது—புற நிகழ்ச்சி.

இயேசு பெருமான் சிலுவையில் பலியானது ஏதோ எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியன்று. எல்லாம் முன்குறிக்கப்பட்டு ஒரு திட்டத்தின்படி, படிப்படியாக நிறைவேற்றப் பட்டவையே.

உலகின் முன்னே அவர் சிலுவையில் அடிக்கப் பட்டார். ஆனால் அதற்கு முன் அவர் பெய்து வைக்கப்பட்டுத் தயாராயிருந்த நஞ்சினை உண்டார். அவர் நஞ்சுண்டது அக நிகழ்ச்சி, சிலுவையில் அடிக்கப்பட்டது புற நிகழ்ச்சி. அவர் நஞ்சினை உண்டார் எனக் கூறுவது பலருக்கு வியப்பாகத் தோற்றமளிக்கலாம். திருமறைக் குறிப்பின்படி முன்னர் அவர் நஞ்சுண்டமையாலேயே பின்னர் அவரைச் சிலுவையிலடிக்க முடிந்தது.

இயேசு பெருமான் சிலுவையிலடிக்கப்படுவதற்கு முன்தினம் கெத்சமெனேத் தோட்டத்தில், இறை நிலையுடன் உறவாடுகிருர். அவரது உண்மை நிலை அவருடைய மாணவர்களுக்குத் தெரியும் பொருட்டு வார்த்தைகளாக வெளிவருகின்றன.

மனிதனுக வந்துள்ள இறைவனுகிய இயேசு பெருமான், முழு இறை நிலையுடன் உறவாடுகிருர்.

உலகின் இருவினையாகிய மீறுதலாம் பாவம் யாவும் ஒன்று சேர்க்கப்பட்டு, ஒரு பாத்திரத்தில் பெய்யப்பட்டு, அவர் முன் வைக்கப்பட்டுள்ளது. கொல்லும் நஞ்சாகிய அப்பாவம் அழிக்கும் தன்மையுடையது. பாவமாகிய நஞ்சினுல் அழிக்கப்பட இருக்கும் மக்கள் மீது இறைவன் அன்பு கூர்ந்ததினுல், அவர்களை அதினின்றும் விடுவிக்கும் பொருட்டு, அந் நஞ்சினைத் தாம் உண்ண ஆயத்தமாகிருர். இங்கு இறைவன் மனித நிலையிலும்

இறை நிலையிலும் உறவாடுவதை இறையருள் பெற்றோர் நன்கு உணர முடியும்.

"என் தந்தையே கூடுமானால் இத்துன்பக் கலம் என்னை விட்டு அகலட்டும். எனினும், என் விருப்பப்படி அன்று, உமது விருப்பப்படி ஆகட்டும். [மத்தேயு 26:39]

"என் தந்தையே, நான் குடித்தாலொழிய இத்துன்பக்கலம் அகல முடியாதெனின் உமது விருப்பப்படியே ஆகட்டும்". [மத்தேயு 26:42]

'தந்தை எனக்குக் கொடுத்த துன்பக்கலத்தில் நான் குடிக்காதிருப்பேனா? [யோவான் 18:11]

ஆகவே இயேசு பெருமான் சிலுவையிலடிக்கப் படுவதற்கு முன்பே துன்பக்கலத்தில் குடித்தார். இது அக நிகழ்ச்சி.

உலக மக்களுக்கு நயத்தக்க நாகரிகமாம் மன்னிப்பை அருளும் பொருட்டு பெயக்கண்டும் நஞ்சுண் டமைந்தார் இயேசுபிரான்.

> பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்.

"நாம் கடவுளுக்கு அன்பு செய்ததில் அன்று.
அவரே நமக்கு அன்பு செய்து,
நம் பாவங்களுக்குப் பரிகாரமாகத்
தம் மகனை அனுப்பியதில்தான்
அன்பின் தன்மை விளங்குகிறது.
அன்புக்குரியவர்களே,
கடவுள் நமக்கு இவ்வாறு அன்பும் செய்தார் எனில்,
நாமும் ஒருவர்க்கொருவர் அன்பு செய்தல் வேண்டும்."

[1 யோ. 4:10-11]

உண்மை நாகரிகத்தை விரும்புபவர் பிறர் பொருட்டு துன்பமாகிய நஞ்சினை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வர் தங்கள் அழிவைக் குறித்துக்கவலை கொள்ளார். ஏன்? பிறர்பொருட்டு ஏற்படும் துன்பம் அழிவைக் கொடுப்பதாகத் தோற்றமளித்தாலும் அது கொடுப்பது உண்மையில் ஆக்கமே. ஆகவே தான் வள்ளுவப் பெருந்தகை நஞ்சுண்டு அழிவர் எனக் கூறாது, அமைவர் எனக் கூறினார். அமைவர் என்பதன் பொருள் சிறப்பர் என்பதே. இயேசு பெருமான் துன்பத்தை ஏற்று சிறந்தார். அவர் அடியவராகிய சான்றோரும் துன்பத்தை ஏற்றுச் சிலப்பரேயன்றி அழியார்.

இயேசு பெருமான் சிலுவை மரணத்திற்குத் தம்மை ஒப்படைத்தலுக்கு முன் நிகழ்ச்சியாகிய நஞ்சுண்டல், தமக்கு வேண்டியவர்களுக்காகவோ, அல்லது உலகின் ஒரு பகுதியினர்க்காகவோ, அல்லது எதிர்பாரா நிலையில் அரசாங்கத்தாரால் பிடிபட்டு, குற்றம் சுமத்தப்பட்டு மரண தண்டனையை நஞ்சுமூலம் நிறைவேற்றுவதை ஏற்றுக் கொண்டோ நடைபெற்றதல்ல. அவர் தாமே தம்மை மனமுவந்து, மரணத்திற்கு ஒப்படைத்துக் கருமம் சிதையாமல் மனுக்குலம் முழுவதன் மேலும் கண்ணோடிய செயலாகும்.

உலகமக்கள் யாவருக்காகவும் நஞ்சினையுண்ட அவரே 'நஞ்சுண்டையா', ஆலகாலமாகிய பாவ நஞ்சினை மேற்கொண்டு அழகுடன் விளங்கும் அவரே 'ஆலகால சுந்தரன்', தன்னையே தியாகம் செய்த அவனே தியாக ஏசுபரன் = தியாகேசுவரன், பாவத்தைச் சங்காரம் செய்யும் அவனே சங்கரன்.

மேலேகண்ட பெயர்கள் சிவபெருமானைக் குறிக்குமென எண்ணத் தோன்றலாம். இயேசு

பெருமான், வரலாற்று மனிதர் என்பதும, அவரைப் பற்றிச் சான்று கூறவந்த தோமையர் காலத்தில் 'சிவன்' என்ற பெயர் தமிழ்நாட்டில் இல்லை என்பதும், சங்கநூல் எதிலும் சிவன் என்ற பெயர் இல்லை என்பதும் அறிஞர் அறிந்தவையே. இதைப்பற்றி சைவசமயப் பெரியார் மறைமலையடிகளின் கருத்து :—

"இனி இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட பழைய பத்துப்பாட்டு எட்டுத் தொகை முதலிய நூல்களிலாதல், அவற்றிற்கும் முற்பட்ட தொல்காப்பிய நூலிலாதல் சிவன் என்னும் பெயர்ச் சொற் காணப்படாமையின், அது தென்னாட்டிலிருந்த பண்டைத் தமிழ்ச் சான்றோர் வழங்கிய சொல்லன்றென்பது அங்கையங்கனி போல் நன்கு விளங்கா நிற்கும்".

[தமிழர் மதம்—பக் 136 - மறைமலையடிகள்]

ஆகவே இதுவரை நாம் கண்டவைகளிலிருந்து, அன்பை அறிந்து, அன்பைப் பெற்று, அன்பாய் மாறி, தன் கருமத்திற்கும், பிறர் பழிக்கும் நாணி, ஒப்புரவையறிந்து, கண்ணோட்டத்தை யுணர்ந்தும், கொடுத்தும், பெற்றும் பிறர் பொருட்டு நஞ்சும் உண்டு அமையும் தன்மை பெற்றவர் எவரோ? அவரே சான்றோர் என அறிகிறோம்.

இச் சான்றோர்க்கு 'வழி'யாய் விளங்கியவர்,

1. அன்பால் என்னையும் பிறர்க்குக் கொடுத்தவர்.

2. மறத்திற்கும் அன்பே துணையானவர்.

3. மருந்தாகித் தப்பா மரமானவர்

4. தன்னை விற்று ஒப்புரவின் கேட்டைப் பெற்றவர்.

5. கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை உலகில் உண்டாகும்படி செய்த வர்.

6. நயத்தக்க நாகரிகத்தை விரும்பிப் பெயக் கண்டும் நஞ்சுண்டமைந்தவர்.

7. கருமஞ் சிதையாமல் கண்ணோடி உலகத்தை உரிமையாக்கியவர்.

'நானே வழி' எனக் கூறி இவ்வழியைக் காட்டிய, வரலாறு கூறும் ஒரே இறைமனிதர் இயேசு பெருமானே.

இயேசு பெருமான் காட்டிய இவ்வழியில் நடந் தால் மட்டும் போதுமா? தன்னளவில் போதுமா யினும் உலக அளவில் போதாது எனக் கூறுகிறார் வள்ளுவர். வள்ளுவர் வேண்டுவது என்ன? வாய்மை.

சால்பூன்றிய தூண்களுள் ஈற்றில் வாய்மை யைச் சுட்டுகிறார் வள்ளுவர்.

வாய்மை என்றால் என்ன?

## 5. வாய்மை

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்து சால்பூன்றிய தூண்.

வாய்மைக்கு விளக்கங்கூறுங்கால் பரிமேலழகர் 'வாய்மை = அஃதாவது மெய்யினது தன்மை' எனக் கூறுகிறார். வாயினது தன்மை எனக் கூறாதது ஏன்?

வாய்மையைப் பிரித்தால்

வாய் + மெய்

எனப் பிரியும். வாயால் சொல்லப்படும் மெய் எனப் பொருள்படும் என்பது பரிமேலழகர் கருத்தாக இருத்தல் வேண்டும். மெய் மூன்று வகையால் செயல்படுகிறது. மனோவாக்குக் காயம்.

மனம் 1. உள் + மெய் = உண்மை

வாக்கு 2. வாய் + மெய் = வாய்மை

காயம் 3. மெய் + மெய் = மெய்மை.

உண்மை, வாய்மை, மெய்மை ஆகிய மூன்று சொற்களும் பல வேளைகளில் ஒரே பொருளில் பலராலும் பயன்படுத்தப்படுவதை நாம் காண்கிறோம். ஆனால் மூன்று சொற்களுக்கும் அடிப்படை வேற்றுமை அதிகம் உண்டு.

மெய்யை,

உள்ளத்தால் எண்ணுதல் = உண்மை

வாயால் பேசுதல் = வாய்மை

மெய்யால் செயல்படுத்துதல் = மெய்மை.

மெய் என்றால் என்ன? மெய் என்பதற்கு உண்மை என்றோ, வாய்மை என்றோ, மெய்மை என்றோ இப்போது விளக்கம் கொடுக்க முடியாது. அது இந்த மூன்றின் வழியாகவும் செயல்படுவது. இந்த மூன்றினும் உயர்ந்தது.

இதைக் குறித்து வள்ளுவர்,

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை.

எனக் கூறுகிறார்.

உள்ளத்தோடு இணைந்து இந்த மெய்மையை வாயினுல் கூறினுல், சிறந்த தவத்தைச் செய்வ தோடு அமையாது தானமும் செய்பவர்களாகிய சிறந்தோரின் செயலைக் காட்டிலும் இது உயர்ந்தது.

'செய்வாரின், மொழியில் தலை' எனக் கூறு மிடத்து, சொல்லுவது செய்வதைவிட மிக உயர்ந்த தாகக் கூறப்படுகிறது. எதைச் சொல்லுவது? மெய்மையைச் சொல்லுவது.

இவ்வளவு உயர்வு தரும் மெய் எது? சொன்ன அளவிலேயே எல்லாப் பயனையும் தரும் மெய் எது? சாதாரணமாக நாம் நினைக்கின்றபடி 'நடந்ததை உள்ளபடியே சொல்லுவது' என்னும் பொருள் இதற்குப் பொருந்துமா? நடந்ததை நடந்தபடியே கூறினுல் இவ்வளவு பயன் விளையுமா?

நடந்ததைக் கூருமல் மறைப்பவன் யார்? மற்ற வர்களுக்குப் பயப்படுபவனே. அப்படியாளுல், மற்றவர்களுக்குப் பயப்படாதவன், பயப்படத் தேவையில்லாதவன் நடந்ததைக் கூறத்தயங்கான். அப்படிப்பட்டவன் நல்லவைகளையே செய்வான் என்பதற்கில்லை.

ஒரு நாட்டின் அரசன் வீரமிக்கவன்; யாருக் கும் அஞ்சாதவன்; தீமையைச் செய்பவன். தான் செய்தவைகளைச் செய்தபடியே கூறுபவன்; நடந் ததை நடந்தபடியே எடுத்துச் சொல்பவன் என வைத்துக்கொள்ளுவோம். அவனைக் குறித்து, தவத்தொடு தானம் செய்வாரின் தலை எனக் கூற முடியுமா? முடியாது.

ஆகவே வாய்மை மொழிதல், நடந்ததை நடந்தபடியே கூறுதல் அன்று. நடந்ததை நடந்த படியே கூறுதல் 'உள்ளது சொல்லல்' மட்டுமே ஆகும்.

அப்படியானால் வள்ளுவர் கூறும் வாயினால் சொல்லும் மெய் எது? அது என்றும் அழியா, எல்லாவற்றினும் உயர்ந்த, எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாக விளங்கும் மெய்ப்பொருளாகிய இறைவனே.

*அவ்விறைவனை உள்ளத்தால் எண்ணுதலே = உண்மை*

*அவன் புகழை வாயால் மொழிதலே = வாய்மை*

*அவன் ஏவலை மெய்யால் செய்தலே = மெய்மை.*

ஆகவே வாய்மை எனக் கூறப்படுவது யாதெனில், யாதொரு தீமைக்கும் இடமில்லாத இறைவனின் புகழை வாயினால் சொல்லுதலே யாகும்.

*வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்*
*தீமை இலாத சொலல்.*

சான்றோரின் குணங்களாக அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம் ஆகியவைகளைக் கூறிய வள்ளுவர் இறுதியாக இவ்வாய்மையை வைக்கிறார். உள்ளத்தால் இறைவனை உணர்ந்தவர்கள் தங்களுக்கே சொந்தமாக அந் நன்மையை வைத்துக் கொள்ளாது, உலக மக்கள் யாவருக்கும் பயன்படும் படி அதை வெளியே எடுத்துச் சொல்ல வேண்டும். இவ்வாறு அந் நற்செய்தியைச் சான்றாக அறிவிக்கும் நிலையே வாய்மை ஆகும்.

இவ்வாய்மையே கிறித்தவ மக்களால், சான்று கூறல் அல்லது சாட்சி சொல்லுதல் என்றோ, நற்செய்தி அறிவித்தல் அல்லது சுவிசேஷ ஊழியம் செய்தல் என்றோ அழைக்கப்படுகிறது.

மெய்யை வாயால் கூறுவதே வாய்மை எனப் பார்த்தோம். அப்படியானால் பொய்ம்மை என்பதன் பொருளென்ன?

பொய் = இல்லாதது
மெய் = இருப்பது
பொய்மை = இல்லாததை இருப்பதாகக் கூறுவது

எங்கே இல்லாதது?

உள்ளத்தில் இல்லாதது!

எவன் ஒருவன் தன் உள்ளத்தால் இறைவனை உணராமல், தன் உள்ளத்தில் இல்லாத இறைவனை வாயால் மட்டுமே மற்றவர்களுக்குக் கூறுகிறானோ, அவன் பொய்யன். அவன் கூறுவது பொய்மை.

இறைவனைப் பற்றிக் கூறும் திருக்கூட்டத்திடையே இறைவனையுணரா ஒருவன் இருப்பதாகக் கொள்வோம். இறைப்பணிக்காகக் கிடைக்கும் ஊதியத்தின் பொருட்டு அவன் அக்கூட்டத்திடையே வாழுகிறான். அவன் உள்ளத்தால் இறைவனை உணராவிட்டாலும் தான் பெறும் ஊதியத்தின் பொருட்டு இறைவனைப் பற்றிக் கூறுகிறான்.

இவன் கூறுவது பொய்மையா? வாய்மையா? இவன் கூறுவது நிச்சயமாக வாய்மை அல்ல. அப்படியானால் பொய்மைதானே. ஆம் இது நிச்சயமாகப் பொய்மையேதான். இயேசு பெருமானின் விடுதலைச் செய்தியாம் நற்செய்தியை அறிவிக்கும் திருக்கூட்டத்திடையே இப்படிப்பட்டவர்களும் இடம் பெற்று விடலாம்.

இவர்களும் கூறுவதும் பொய்மையே. இதன் விளைவு என்ன? பொய்யின் தன்மை தீமையை விளைவிப்பதே. தீமையை விளைவிக்காத பொய்மையுண்டா? இருக்க முடியுமா? தீமை ஏன்? தீமைக்குப் பதில் நன்மையை விளைவிக்கும் பொய்மை

யுண்டா? அதிலும் சிறப்பாகத் புரைதீர்ந்த நன்மை பயக்கும் பொய்மை உலகில் உண்டா? இருக்கு மெனில் அது பொய்மையே எனினும், புரைதீர்ந்த நன்மையைப் பயக்கும் காரணத்தால் வாய்மையின் இடத்தில் எண்ணப்படலாம்.

பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

உம் = இழிவுச் சிறப்பும்மை இடத்த = இடத்தில் எண்ணப்படலாம். ஆனல் வாய்மையாக மதிக்கப் பட்டுவிட முடியாது. வேற்றுமை வேற்றுமையே.

முன்பு நாம் கண்ட, உள்ளத்தால் உணராது இறைவனைக் கூறுபவனுடைய கூற்று பொய் மையே. எனினும் அது புரைதீர்ந்த நன்மையைப் பயக்குமெனின், வாய்மை இடத்ததே எனக் கூறு கின்றார் வள்ளுவப் பெருந்தகை.

இங்கே சொல்லப்படும் மெய், சொல்லுபவனின் உள்ளத்தின் தன்மையாகிய பொய்யின் காரண மாகப் பொய்மை ஆகிறது. இவ்விடத்தில் பொய் பேசுவது நன்மையை விளைவிக்குமெனக் கொண் டாலும், பொய் இழிவானது. அது எவ்விடத்தில் இருப்பினும் அவ்விடமும் இழிவானதே. அவ்விடம் நிச்சயம் பாதிக்கப்படும். இறைவனைப் பற்றிக் கூறும் அடியவரும் தாம் அறியாத, உணராத இறைவனைப் பற்றிக் கூறும் காரணத்தால் அவர் கூற்றும் பொய்யே அந்தப் பொய் வாய்மையிடத் திற் சிறப்புப் பெறினும் பொய், பொய்யே. பொய்யை வெளிப்படுத்திய நெஞ்சம் நிச்சயம் பாதிக்கப்படும். புறத்திலிருந்து அவனுக்குத் தீமை ஏற்படாமற் போயினும், அகத்திலிருக்கும் அவன் நெஞ்சே அவனை நிச்சயம் சுடும் ஆகவே தன் நெஞ்சு அறிவது எதுவோ அதைப் பொய்யாமல்

சொல்க. அவ்வாறன்றி நெஞ்சு நினைப்பது ஒன்று; வெளியே சொல்லுவது வேறொன்றாக இருக்குமானால் தன் நெஞ்சே தன்னைச் சுடும்.

தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

சொல்லுவதன் பயன் தீமையாக இல்லாவிடினும், சொல்லுவது பொய்யாக இருக்கும் காரணத்தால், அது தோன்றிய இடமான நெஞ்சே அவனைச் சுடும் தன்மையை அடைகிறது.

மொழி குறைபாடுடையது. வெளிப்படுத்த நினைக்கும் முழுக்கருத்தையும் எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் அது விளக்கி நிற்கும் என எண்ணமுடியாது. ஓரளவு மொழியைக் கடந்த நிலையில் மற்றவர்களுடன் உறவாடுகிறவர்களும் உண்டு. அவர்கள் உள்ளத்தால் இணைந்து ஒருவருடன் ஒருவர் உரையாடுகின்றனர். இங்கு உள்ளமும் உள்ளமும் உரையாடுகின்றனவேயன்றி மொழி என்ன பயத்தலும் இல. சிறந்த முனிவர்களின் நிலை இந்நிலையே. இந்நிலையே மோன நிலை என அழைக்கப்படுகிறது. இந்த நிலையடைந்தவர்கள், அவர்கள் விரும்பும் எந்த உள்ளத்துடனும் உறவாட முடிகிறது. ஆகவே மொழியினும் சிறந்தது உள்ளம். வாய்ச்சொல்லில் பொய் மட்டுமன்று, உள்ளத்திலும் பொய்யாது ஒருவன் ஒழுகக் கூடுமானால், அவன் உலகத்தில் உள்ளார் யாவரின் உள்ளத்திலும் உலவும் மேன்மையான தன்மையையடைகிறான்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.

உலகம் என்பது ஈண்டு உயர்ந்தோரைச் சுட்டிற்று. (தொல்காப்பியம்) 'உளன்' என்னும்

சொல்லால் ஐயப்பாடின்மையைச் சுட்டினர். இச் செய்யுளில் மெய்யை உள்ளத்தில் உணராமல் கூறுதலாகிய பொய், நீக்கப்பட வேண்டும் என்பது கூறப்பட்டது.

தீமையைச் செய்த ஒருவன், தான் செய்த தீமையை உள்ளத்தால் பொய்யாது கூறினல் மட்டும் எவ்வாறு உயர்ந்தோர் உள்ளத்தில் எல்லாம் இடம் பெறமுடியும்? அவன் அஞ்சாதவனேயன்றி உயர்ந்தோன் அல்லன்.

இறைவனை உள்ளத்தில் உணர்ந்து கூறலே உயர்ந்தோர் உள்ளத்தில் இடம் பெறுவதற்கான வழி. மெய்ப்பொருளாம் இறைவனை மனத்தொடு வாயினல் மொழியின், அதாவது கூறினல் அங்ஙனம் கூறுவோனே யாவரினும் சிறந்தவன்! எவரினும்? தவம் செய்ததுடன் அமையாது மேலும் தானமும் செய்த பெரியோரைக் காட்டிலும் சிறந்தவன் எவ்வாறு?

தவம் செய்தவன் தன் ஒருவனுக்கே நன்மையைத் தேடினன். தானம் செய்தவன் அழியக் கூடிய உலகப் பொருளேயே மற்றவர்களுக்கு ஈந்தான். அவை சிறிதுகால இன்பத்தைப் பயக்கக் கூடியனவேயன்றி பேரின்பம் பயக்கக் கூடியன வல்ல. ஆனல் தான் அறிந்து உணர்ந்த இறைவனை, இறைவனின் நற்செய்தியை, ஒருவன் மற்றவர்களுக்கும் வாயினல் எடுத்துக் கூறி அறிவிக்கும்பொழுது, அச்செய்தி அறிவிக்கிறவனுக்கு மேலும் நன்மையைப் பயப்பதுடன், கேட்கிறவனுக்கும் நிலையான நன்மையைப் பயந்து, பேரின்பத்திற்கு வழி நடத்துகிறது.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை.

ஆகவே தவத்துடன் தானம் செய்வாரைக் காட்டிலும், மனத்தோடு வாய்மை மொழிபவன் தலைசிறந்து விளங்குறான்.

இதனால்தான் இயேசு பெருமானின் நற்செய்தியை அறிவிக்கப் புறப்பட்ட அவரது அடியார்கள், தங்களுக்கு எத்தகைய துன்பம் வரினும், அவற்றைக் கண்டு அஞ்சாது, அத்துன்பத்தை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு, மனத்தொடு வாய்மை மொழிந்தனர். அதனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்ட, அறிவியலின் வியக்கத்தக்க முன்னேற்றத்தைக் கண்ட இந்நாளிலும், அந்நற்செய்தியைப் பின்பற்றும் அடியவர் உலகெங்கும் நிரம்பிக் காணப்படுகின்றனர். இறைத்தொண்டர் நற்செய்தியை அறிவிக்க, அதைக் கேட்பதன் மூலமே இயேசு பெருமானை அறிந்து ஆன்மீக விடுதலை அடைந்து மக்கள் மேன்மைப்படுங் காரணத்தால் வள்ளுவர் எல்லாச் செல்வங்களுள்ளும் சிறப்புடையதாகச் செவிச் செல்வத்தைக் கொண்டார்.

> செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
> செல்வத்துள் எல்லாம் தலை.

வள்ளுவப் பெருந்தகை இச்செவிச் செல்வத்தின் வாயிலாக, புனித தோமையரிடம் இயேசுபெருமானின் நற்செய்தி கேட்டுச் செவிச்செல்வத்தை எல்லாவற்றினும் சிறப்புடையதாகக் கண்டார்.

மெய்யாகிய இறைவனை வாயால் அறிவிப்பதே வாய்மை எனக் கொள்ளாக்கால், தவத்தொடு தானம் செய்வாரின் தலை என்னும் இக்குறள் பொருளற்றதாதல் கண்கூடு.

உள்ளதை உள்ளபடியே கூறுதலில், மனத்தொடு சொல்லாத நிலைக்கும், மனத்தொடு

சொல்லும் நிலைக்கும் வேற்றுமை என்ன? வேற்றுமை இல்லை.

உலகில் நிலைத்திருக்கும் உண்மையான புகழை யுடையவன் இறைவன் ஒருவனே. அவனுடைய புகழைக் கூறுதல் ஒன்றே நமக்குப் புகழைத் தரத் தக்கது. அத்துடன், நாம் தீவினையிலிருந்து விடு படும் வழியும் அதுவே.

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள் புகழ்புரிந்தார் மாட்டு.

இறைவன் பொருள்சேர் புகழினை உள்ளபடியே உணர்ந்து பொய்க்காது கூறுவதைக் காட்டிலும் ஒருவனுக்குப் புகழ்தரக்கூடியது வேறு இல்லை. அது மட்டுமன்று. அது எல்லா நன்மையையும் தரும்.

பொய்யாமை யன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.

பொய்யாமையைப் பொய்க்காமல் ஒருவன் செய்து வருவானானால் பிற அறங்கள் தாமே அதில் நடைபெறும்.

தேடவேண்டியது ஒன்றே. செய்ய வேண்டிய தும் ஒன்றே. மற்றவை யெல்லாம் இதன் தொடர் பாகத் தாமே நடைபெறும். மற்றவற்றை எண்ணிச் செய்ய வேண்டியதில்லை.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

ஆற்றின்—ஆற்ற வேண்டியது என்ன? சான்று கூறலே! சான்று கூறுதலை உள்ளத்தால் பொய் யாது, மனத்தொடு வாய்மை மொழியின் எய்யால் எல்லா அறமும் தரும் காரணத்தால் பிற அறம் செய்யாமை செய்யாமை நன்று. பிற அறம் செய்ய

நேரம் வேண்டுமே, பொருள் வேண்டுமே, இடம் வேண்டுமே என எண்ணி நாளை விணாக்காமல், சான்று கூறுக; அதுவே எல்லா அறத்தையும் தரும்.

வெளியே சொல்லுவதற்கு உன் உள்ளம் இன்னமும் பக்குவப்பட வில்லையே என ஏங்குகிருயா? இதுவே சிறந்த நிலை. இந்த ஏக்கமே உன்னைச் சுத்தப்படுத்தும். சான்று கூறத்தொடங்குக. சான்று கூறக் கூற நீ சுத்தமடைவாய். அகவக்கினி உன்னைச் சுத்தப்படுத்தும். வெளியே உன்னைச் சுத்தப்படுத்துவது தண்ணீர். வெளிப்படையாக உன்னைச் சுத்தமுள்ளவனாக நீ காட்டுவதற்குப் பயன் பட்டது ஞானமுழுக்கில் நீ மூழ்கிய நீர்.

ஞானமுழுக்குப் பெற்ற ஒருவன் வெளிப்படையாகச் சுத்தமுள்ளவனாக அங்கீகரிக்கப்படுகிருன். சுத்தமடைந்தவர் மந்தையில் சேர்க்கப்படுகிருன். ஆனால் உண்மையான அகச்சுத்தம் அவன் தன் வாயினால் மெய்யாகிய இறைவனைப் பற்றிக் கூறுவதாலேயே காணப்படும்.

அகத்தூய்மையை வெளிப்படுத்துங் கருவி நற்செய்தி அறிவித்தலாகிய வாய்மையே நற்செய்தி அறிவிக்கும் பணியில் ஈடுபட ஈடுபட ஒருவனுடைய உள்ளம் மேலும் மேலும் தூய்மை பெறும். ஆகவே அகத்தைத் தூய்மைப்படுத்துவது வாய்மை.

அகத்தூய்மையை அறிவிக்கும் கருவியாய் விளங்குவதும் வாய்மையே.

> புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
> வாய்மையாற் காணப்படும்.

வாய்மையையுடைய சான்ருேர், விளக்குக்குச் சமமாய் விளங்குகின்றனர். விளக்கு, தான் ஒளியாய் விளங்குவதுடன் தன்னைச் சுற்றியுள்ள

பொருட்களையும் ஒளிரச் செய்கிறது. அவ்வாறே சான்ருேர் தாங்கள் தூய்மையாய் விளங்குவதுடன் தங்களைச் சுற்றியுள்ளவர்களையும், வாய்மையினல் தூய்மையுடையவர்களாக்குகிருர்கள். ஆகவே, சான்ருேர் விளக்காக, அதாவது ஒளியாக விளங்கு கிருர்கள்.

> ''உலகிற்கு ஒளி நீங்கள். மலைமேல் உள்ள ஊர் மறைறவாயிருக்க முடியாது. மேலும், விளக்கைக்கொளுத்தி மரக்காலின் கீழ் வைக்க மாட்டார்கள்; மாருக, வீட்டிலுள்ள அனைவருக் கும் ஒளி தரும் பொருட்டு, விளக்குத் தண் டின் மீது வைப்பார்கள். அபபடியே, மக்கள் உங்கள் நற்செயல்களைக் கண்டு, வானகத்தி லுள்ள உங்கள் தந்தையை மகிமைப்படுத்தும் படி, உங்கள் ஒளி மனிதர் முன் ஒளிர்வதாக.''
>
> [மத் ௫:14-16]

ஒளியின் செயல்களாகக் குறிக்கப் படுபவைக ளுள் சான்ருேர்க் கேற்ற விளக்காக விளங்குவது பொய்யாதிருத்தலாகிய விளக்கே யாகும்.

> எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்
> பொய்யா விளக்கே விளக்கு.

உள்ளத்தில் இறைவனை உணராத ஒருவன் இறைவனைப் பற்றிச் சான்று கூறப்புகுந்தால் அது முழுப்பொய்யே யாகும். சான்று கூறுதலாகிய வாய்மெய் சிறந்ததே யெனினும் பொய் இருக்கு மானல் அதனல்பயன் இல்லை. ஆகவே விளக்காக விளங்கும் சான்ருேர்களுள், பொய்யாதவர்களாகிய சான்ருேராம் விளக்கே சரியான விளக்காகும்.

பொய்த்தலையுடைவர்கள் சான்ருேராகிய விளக் காக மற்றவர்களுக்குக் காட்சியளிப்பினும் அவர்கள் சரியான விளக்குகளாக ஆக மாட்டார்கள்.

ஆகவே எல்லாவற்றுள்ளும் சிறந்து விளங்குவது மெய்மையைப்பற்றி வாயினால் அறிவித்துச் சான்று கூறலாகிய வாய்மையே. சான்றோர் வாய்திறந்து கூறவில்லையானால், சான்றோர் தங்களுடைய சிறந்த குணங்களால், வணக்கத்திற்குரிய சிறந்த குணமுடையவர்களாகக் காட்சியளிப்பார்களேயன்றி, உண்மையில் உலகிற்குப்பயன் படார். அவர்கள் வாய்திறந்து சான்று கூறும் பொழுது மட்டுமே, அவர்களின் சிறப்பிற்குக் காரணத்தையறிந்து மற்றவர்கள் அவர்களைப் பின்பற்ற முடிகிறது ஆகவே உள்ளத்தில் தாங்கள் பெற்ற செய்தியை மறைக்காமல் மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும்.

திருவள்ளுவர் தாம் இயற்றிய 1330 குறட்பாக்களுள் மூன்று இடங்களில் மட்டுமே தம்முடைய அனுபவத்தை விளக்கிச் சொல்லுகிறார்.

யாம்மெய்யாய்க் கண்டவற்றுள் .........-300
பெறுமவற்றுள் யாம அறிவதில்லை.........-61
ஒப்பார் யாம் கணடதில்.........1071

எனக் கூறியுள்ளார்.

ஆகவே வள்ளுவர் எழுதிய 1330 குறட்பாக்களுள் தலைமை பெறுபவை மூன்று. அம் மூன்றனுள் ஒன்று குறட்பாவின் முதலிலும் அடுத்தது இடையிலும், மூன்றாவது கடையிலும் இடம்பெற்றுள்ளன. இவ்வாறு, வகைப்படுத்தி 1330 குறட்பாக்களுள்ளும் தலைமை இடத்தை ஏற்கும் ஓரே குறட்பாவே பின் வருவது. இதனுள் வள்ளுவர் அவர் கூறுவதாவது :—

இந்த உலகில் நான் மெய்யாய்க் கண்டவை பல உண்டு. மெய்யைப் பல கோணங்களுள் கண்டுள்ளேன். அவற்றுள் எல்லாம் வாய்மையைப் போன்ற நல்லது பிற எதுவும் இல்லை.

அது அன்பிலும் சிறந்தது. நாணிலும் சிறந்தது. கண்ணேட்டத்திலும் சிறந்தது. எல்லாவற்றிலும் சிறந்தது.

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

ஏன்? மற்றவை எல்லாம் தான் ஒருவனுக்கு மட்டுமே பயன்படுவது. இது ஒன்றே எல்லோருக்கும் பயன்படுவது. தான் அடையும் பேரின்பத்தை மற்றவர்களுக்கு மறையாது அறிவிப்பதே வாய்மை. மற்றவை யெல்லாம் இருப்பது இதன் பொருட்டே.

ஆகவே சான்று கூறலே தலைமையானது. சான்று கூருவிடில் 'சான்ருேர்' என்ற பெயர் எவ்வாறு ஏற்பட முடியும்? சான்று கூறி அறிவிப்பதே கிறித்தவத்தின் அடிப்படை.

"தாங்கள் விசுவசியாத ஒருவரை நோக்கி எவ்வாறு மன்ருடுவர்? தாங்கள் கேள்வியுருத ஒருவரை எவ்வாறு விசுவாசிப்பர்? அனுப்பப்படாமல் எவ்வாறு அறிவிப்பர்? இதைப் பற்றியே 'நற்செய்தி அறிவிப்பவர்களின் மலரடிகள் எத்துணை அழகானவை!" என எழுதியுள்ளது. ஆயினும் எல்லோருமே நற்செய்திக்குக் கீழ்ப்படியவில்லை. ஏனெனில், இசையாஸ், "ஆண்டவரே, நாங்கள் அறிவித்ததைக் கேட்டு எவன் விசுவசித்தான்?" என்று முறையிடுகிருர். அப்படியானல், அறிவிப்பதைக் கேட்பதால்தான் விசுவாசம் உண்டாகிறது என்பது தெளிவு. நாங்கள் அறிவிப்பதற்கோ கிறிஸ்துவின் வார்த்தையே ஊற்று"

[உரோமர் 10:14-17]

ஆகவே உலகம் முழுவதும் இயேசு பெருமானின் நற்செய்தியை அறிவதற்கும், நம்புவதற்கும்,

பின்பற்றுவதற்கும், வளருவதற்கும், மீட்படைவதற்கும் அடிப்படையாய் விளங்குவது, வாயினால் மெய்யாகிய இறைவனை அறிவித்தலாகிய வாய்மையாம் சான்று கூறலே.

இச் சான்றினைக் கூறி அறிவிக்கும் சான்றவர்களின் மற்றக் கடமைகளை இனி நோக்குவோம்.

## 6. சான்றோர் கடமை

சான்றோர் சிறந்த குணமுடையவர்களாகத் திகழ வேண்டும். அடுத்தவர்களிடம் தீமையைக் கண்டவிடத்து, அத்தீமைக்காக வருந்தி அவர்களுக்காக வேண்டுதல் செய்து அத்தீமை அவர்களை விட்டு நீங்கும்படியாக முயலவேண்டுமேயன்றி அவர்களை இழிவாக எண்ணவோ அல்லது இழித்துக் கூறவோ கூடாது.

"நீங்கள் தீர்ப்புக்குள்ளாகாதபடி தீர்ப்பிடாதீர்கள். எந்தத் தீர்ப்பு இடுகிறீர்களோ, அந்தத் தீர்ப்பையே நீங்களும் பெறுவீர்கள். எந்த அளவையால் அளப்பீர்களோ, அதே அளவையால் உங்களுக்கும் அளக்கப்படும். உன் கண்ணிலேயுள்ள விட்டத்தைக் கவனியாது, உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப்பார்ப்பதேன்? உன் சகோதரனை நோக்கி, 'உன் கண்ணிலிருக்கும் துரும்பை எடுக்க விடு,' என்று நீ எப்படிச் சொல்லலாம்? இதோ! உன் கண்ணிலே விட்டம் இருக்கிறதே. வெளிவேடக்காரனே, முதலில் உன் கண்ணிலிருந்து விட்டத்தை எடுத்து எறி; பின்பு உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுக்க நன்றாகக் கண் தெரியும்." [மத். 7:1-5]

தவத்திற்குக் கொல்லா அறம் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றம் சொல்லாக் குணம் சிறந்தது.

> கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
> சொல்லா நலத்தது சால்பு.

சான்ருேகிய ஒருவனுக்கு, மற்றவர் துன்பம் கொடுக்குங்காலை அவன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்? தீமைக்குப் பதில் தீமை செய்யலாமா? உலகினர் தீமைக்குத் தீமை செய்தலை வலிமை எனக் கருதுபவர். வலிமை அற்றவனே பதில் செய்ய முடியாதவன் என எண்ணுவர். ஆனல் உண்மையான ஆற்றல் எது? மற்றவர் நமக்குக் கொடுக்கும் துன்பத்திற்குப் பதில் செய்யாது, அதைப் பொறுத்துக்கொள்ளலே ஆகும். இதுவே நம் பகைவராகிய மாற்ருரை வெல்லும் படையாகும். வெற்றி எப்படிப்பட்டது? பகைவர் நமக்குப் பணிந்து உடன்பட்டு நண்பராவர்.

> ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்ஞேர்
> மாற்ஞரை மாற்றும் படை.

சான்ருேர் மாற்ருரை மாற்றும் படை இதுவே.

"தீயோனை எதிர்க்க வேண்டாம். ஆனல் யாராவது உன் வலக் கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு. யாராவது வழக்காடி உன் உள்ளாடையை எடுத்துக்கொள்ள விரும்பினல், அவனுக்கு உன் மேலாடையையும் கொடுத்துவிடு. யாராவது உன்னை ஒருகல் தொலை வரக் கட்டாயப்படுத்தினல், இருகல் தொலை அவனேடு செல்."

இவ்வாறு பணிந்து செல்லுவதே சான்ருேரின் ஆயுதம். பரிசுத்தாவியால் நிரப்பப்பட்டு எல்லா

நற்குணங்களாலும் நிறைந்த சால்பின் தன்மை ஒருவனுக்கு உண்டா? என்பதை அறியப் பயன் படும் உரைகல் ஒன்று உண்டு. அது என்ன? அதுவே தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடத்திலும் தனது தோல்வியை ஒப்புக்கொள்ளுதல் ஆகும். தன்னைவிட மிகக் கீழானவனிடம், அறியாது ஒரு சிறு தவறு செய்தவிடத்தும், அவனிடமும் தாழ்ந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும் தன்மையேயாகும். இதுவே சால்புடையார் குணத்தை அறியும் கட்டளைக் கல் ஆகும்.

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

சாதாரண மக்களுக்கு இது முடியாத குணம் ஆகும். தன்னைவிடச் சிறந்தவர்களிடத்தும், உயர்ந்தவர்களிடத்தும், பலவான்களிடத்தும் தோல்வியை ஒப்புக்கொள்வார்கள். ஆனால் தாழ்ந் தவரிடம் ஒப்புக்கொள்ள மற்றவர்களுக்கு மனம் வராது. சால்பிற் சிறந்த சின்னப்பர் கூறுவ தாவது :—

“கிறித்துவிற்காக நாங்கள் மடையர்கள். நீங்களோ கிறித்தவ விவேகம் கொண்டவர்கள். நாங்கள் வலுவற்றவர்கள். நீங்களோ வலு மிக்க வர்கள். நீங்கள் மாண்புள்ளவர்கள். நாங்களோ, மதிப்பற்றவர்கள். இந்நாள்வரை நாங்கள் பசியா யிருக்கிறோம். தாகமாயிருக்கிறோம். ஆடையின்றி யிருக்கிறோம், அடிபடுகிறோம், தங்க இடமின்றி இருக்கிறோம். எங்கள் கையால் உழைத்துப் பாடு படுகிறோம். பிறர் எங்களைப் பழித்துரைக்கும்போது நாங்கள் ஆசி கூறுகிறோம். எங்களைத் துன்புறுத் தும்போது நாங்கள் பொறுத்துக்கொள்ளுகிறோம். எங்களைத் தூற்றும்போது நாங்கள் உறவாடுகிறோம்.

நாங்கள் இவ்வுலகத்தின் குப்பைபோல் ஆனோம். இன்றுவரை அனைவரினும் கழிவடையானோம்.''
[1 கொரிந். 4:10-13]

ஆகவே தனக்குத் தீமை செய்தவர்களுக்கும் நன்மை செய்ய வேண்டியதே கிறித்தவ சால்பு ஆகும். அவ்வாறு தனக்கு இன்னா செய்தவர்களுக்கு இனியவே செய்யவில்லையானால் சான்றோரின் சால்பு என்ன பயன் உடையதாகும்?

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

"உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள். அவர்களுக்கு நன்மை புரியுங்கள்"
(லூக். 6:35)

இவ்வுலகில் ஒருவன் தேட வேண்டியதும் நாட வேண்டியதும் சால்பாகிய பண்பையே. பரிசுத்தாவியின் நிறைவாகிய சால்பு இருக்குமானால், பொருளற்ற வறுமை நிலை அவர்களுக்கு இழிவைக் கொடுக்கக் கூடியதன்று. ஆகவே சால்பாகிய வலிமையுள்ளவனுக்குப் பொருள் இன்மையாகிய வறுமை இழிவைத் தரக்கூடியதன்று.

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்.

"மண்ணுலகில் செல்வம் சேர்த்து வைக்க வேண்டாம். இங்கே பூச்சியும் துருவும் அழித்துவிடும், திருடரும் கன்னமிட்டுத் திருடுவர். ஆனால் விண்ணுலகில் செல்வம் சேர்த்து வையுங்கள். அங்கே பூச்சியும் துருவும் அழிப்பதில்லை; திருடரும் கன்னமிட்டுத் திருடுவதில்லை. உங்கள் செல்வம் எங்குள்ளதோ, அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும்.''
[மத்தேயு 6:19-21]

சான்றாண்மைக் குணம் நிரம்பியவர், சான்றாண்மைக் கடலாக விளங்குபவர், ஊழிக்காலத்தின் வேறுபாடே நிகழ்ந்தாலுங்கூடத் தாம் தமது தன்மையிலிருந்து மாறுதலடையமாட்டார்கள். அதாவது, அவர்களுக்கு எத்தகைய துன்பம் நேரிடினும் தமது கொள்கையில் இம்மியும் மாறார்.

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்.

"கிறிஸ்துவின் அன்பிலிருந்து நம்மைப் பிரிப்பவன் எவன்? வேதனையோ? நெருக்கடியோ? கலாபனையோ? பசியோ? ஆடையின்மையோ? இடர்களோ? வாளோ? எதுதான் நம்மைப் பிரிக்க முடியும்?

'உம்மை முன்னிட்டு நாள் முழுவதும் சாவுக்காளாகிறோம். கொல்லப்படக் காத்திருக்கும் ஆடுகளாய்க் கருதப்பட்டோம்'

என எழுதியுள்ளதன்றோ? ஆனால் நம்மேல் அன்பு வைத்தவரின் செயலால் நாம் இவை அனைத்திலும் மாண்புமிக்க வெற்றி அடைகிறோம்."

[ரோமர் 8:35-37]

ஆகவே சான்றோர் தம் கொள்கையில் உறுதியாக நின்று உலகுக்குப் பயன்படுவர்.

உலகம் உய்வதற்கு உறுதுணையாயிருக்கக் கடமைப்பட்டவர்கள் சான்றோர். சமையலை எவ்வளவுதான் சிறப்பாகச் செய்தாலும், அதற்குச் சிறப்பைத் தருவது கண்ணுக்குத் தெரியாத உப்பு. 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பது பழமொழி. அவ்வாறே உலக மக்களிடையே உப்புப் போன்று விளங்க வேண்டியவர்கள் சான்றோர். உப்பு, தான் அழிந்து அல்லது மறைந்து மற்ற

வற்றைச் சிறப்படையச் செய்கிறது. அவ்வாறே சான்ஞேர் தங்களுடைய சாரமாகிய நடத்தையால் உலக மக்களைச் சிறப்படையச் செய்ய வேண்டியது அவர்கள் கடமை.

"உலகிற்கு உப்பு நீங்கள்" [மத். 5:13]

"உங்களுக்குள் உப்பு இருக்கட்டும். ஒருவர் ஒருவரோடு சமாதானமாயிருங்கள்."

[மாற். 9:50]

ஆகவே மனிதர் ஒருவரோடொருவர் சமாதானமாயிருப்பதற்கு இன்றியமையாது இருக்க வேண்டியவர் சான்ஞேர்.

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்ஞேர் கடன்.

மனிதர் ஒருவரோடொருவர் உரிமை பாராட்டி நட்புடன் திகழ்ந்து சமாதானமாக வாழும்படியாக, அதற்கு உப்புப் போன்று விளங்க வேண்டியது சான்ஞேரின் கடமையாகும். சான்ஞேருக்குள்ள சிறப்பான கடமையே இதுதான்? ஏன்? உப்பைப் போன்று தான் அழிவுறினும் மற்றவர் உயர்வுக்குப் பயன்பட்டேயாகவேண்டும். இயேசுவைப் பின் பற்றும் வழி இவ்வாறு துன்பம் நிறைந்த வழியேயாகும்.

பின் தம் சீடரையும் கூட்டத்தையும் அழைத்து, "என்னைப் பின்செல்ல விரும்புகிறவன், தன்னையே மறுத்துத் தன் சிலுவையைச் சுமந்துகொண்டு என்னைப் பின்தொடரட்டும். ஏனெனில் தன் உயிரைக் காத்துக்கொள்ள விரும்புகிறவன் அதை இழந்துவிடுவான். என் பொருட்டும், நற்செய்தியின் பொருட்டும் தன் உயிரை இழப்பவனே அதைக் காத்துகொள்வான். ஒருவன் தன் ஆன்மா

விற்குக் கேடு விளைவித்து உலகமெல்லாம் தன தாக்கிக்கொள்வதனுல் அவனுக்கு வரும் பய னென்ன? ஒருவன் தன் ஆன்மாவிற்கு ஈடாக எதைக் கொடுக்க முடியும்'' [மாற். 8:34-37]

ஆகவே சான்ரேர் மற்றவர்களுக்காகத் தன் உயிரையும் கொடுக்கக்கூடியவர்களாக, உப்பாக விளங்கக் கடமைப்பட்டவர்கள்.

இந்தக் கடமையையுடைய சான்றவர் தங்கள் குணமாகிய சான்ருண்மையில் குன்றுவார்களாகில் பின் பயனென்ன? இந் நிலவுலகம் எவ்வாறு நிலை நிற்கும். அதற்குத் தன் பாரத்தைத் தாங்க முடியாது போய்விடும்.

சான்றவர் சான்ருண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னே பொறை.

''நீங்கள் உலகிற்கு உப்பு, உப்புசாரமற்று போனல் வேறு எதனுல் சாரம்பெறும்? இனி வெளி யில் கொட்டப்பட்டு மனிதரால் மிதிக்கப்படுமே யொழிய, ஒன்றுக்கும் உதவாது.'' [மத்: 5:13]

உப்பு சாரமற்று வெளியில் கொட்டப்படுவது மட்டுமன்று; அச்சாரமற்ற உப்பு சேர்க்கப்பட்ட பண்டமும் பயனற்றதாகிவிடுகிறது.

''உப்பில்லாப் பண்டம் குப்பையிலே''

ஆகவே சாரமற்ற உப்பு சேர்க்கப்பட்ட பண் டமும் குப்பைக்கே தகுதியுடையதாகிறது. உப்பு கெட்டுவிடுவதால் பண்டமும் கெட்டு விடுகிறது. சான்றவர் சான்ருண்மை குன்றுவதால், சான்ரேர் குறைவுபடுவதுடன் உலகமும் பொறை தாங்காது மன்னே!!

எனவே சான்றவர் சான்றாண்மைக்குச் சால் பூன்றிய தூண்களான அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை இன்றியமையாது வேண்டப்படுவதாகும்.

மேலே கண்ட குணங்களைப் பெறும் பொருட்டு ஒருவன் சமுதாயத்திலிருந்து, தனியே பிரிந்து சென்று காட்டில் வாழலாமா? அல்லது சமுதாயத்தில் இருந்து கொண்டே மற்றவர்களுடன், நெருங்கிய தொடர்பு கொள்ளாது விலகி வாழலாமா?

அதாவது, மற்றச் சமயங்களில் காணப்படும் சமுதாயத்தைத் துறந்து, தன் ஆன்மா ஒன்றையே முன்னேற்றுவதில் குறிக்கோள் கொண்ட, துறவு வாழ்க்கை சான்றோர்க்குப் பொருந்துமா? சான்றோர் கூட்டமாகப் பொது வாழ்வுதான் வாழ வேண்டுமா? அல்லது தனிமனித வாழ்வு வாழவேண்டுமா?

சான்றோர் கொள்கையில் தனிமனித வாழ்வுக்கே இடமில்லை என்பது வள்ளுவர் கொள்கை. எவ்வளவு சிறந்த மனத்தையுடையவராயினும் அவர்களும் மேலும் சிறந்த மனமடையக் காரணமாயிருப்பது கூட்டு வாழ்வே சான்றோர்க்கு எல்லா நன்மையையும் தரவல்லது.

மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப்புடைத்து.

ஆகவே அவர்கள், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் சேர்ந்த கூட்டு வாழ்க்கையே, அதாவது சான்றோர் சங்கத்தையே சேர்ந்து வாழவேண்டுமேயன்றித் தனிவாழ்வு சான்றோர் கொள்கையில் இல்லை. இந்நிலையில் சங்க காலத்தில் சான்றோர் சங்கங்கள் பல நம் தமிழகத்தில் இருந்தன என்பது வெள்ளிடைமலை.

இதுவரை வள்ளுவர் வழியில், சான்றாண்மை யைக் கிறித்தவத் திருமறையுடன் இணைத்து நோக்கி னோம். தமிழ் மறை உருவாக்கிக் காட்டும் சான் றோனுக்கும், கிறித்தவத் திருமறை உருவாக்கிக் காட்டும் கிறித்தவனாகிய சான்றோனுக்கும், எந்த அடிப்படை வேற்றுமையும் இல்லை. மாறாக நாம் வியக்கத்தக்க வண்ணம் இரண்டும் அடிப்படை யில் ஒன்றாகவே விளங்குகின்றன. ஆகவே திரு மறையும், தமிழ் மறையும் ஒரே மரத்தில் பழுத்த பழங்களே என்பதில் ஐயமில்லை. கிறித்தவத் திரு மறை அழகுக் கூடையில் ஒன்று சேர்க்கப்பட்ட நற்பழங்கள். தமிழ் மறையோ தனித்து மணம் வீசி நிற்கும் நற்கனி.

சான்றோனையும், சான்றாண்மையையும் அறிந்து கொள்ள முடியாத அல்லது அறிந்து கொள்ள விரும்பாத பிற்காலத்தவர், சான்றோனைச் 'சாணான்' என்றனர். சான்றாண்மையைக் 'கள்ளிறக் கும் தொழில்' ஆக்கினர். சான்றாண்மை என்பதற்குக் 'கள்ளிறக்கும் தொழில்' எனப் பொருள் கொண்ட, பிற்காலப்புலவர்களையும், அகராதித் தொகுப்பாளர் களையும் நாம் குறை கூற முடியாது. காலநிலை அவர்களை அவ்வாறு எண்ணும்படி தூண்டியது. சங்க காலச்சான்றோர் பிற்காலத்தில் அந்த நிலைக்கு ஒடுக்கப்பட்டு, ஒதுக்கப்பட்டமையையே, 'சான் றோன்' 'சான்றாண்மை' ஆகிய இரண்டு சொற்க ளும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அவை தங்கள் வரலாற்றைக் கூறுகின்றன.

'சாணார்' என்பவர் கீழானவர்களே என்ற கருத்தில் எழுதப்பட்ட அகராதியாகிய அபிதான சிந்தாமணியின் கூற்றின் ஒரு பகுதியை நோக்கு வோம்.

"இவர்கள் தங்களைச் சேர சோழ பாண்டிய வம்சத்தவரென்று கூறிக்கொள்வர். இவர்கள் தாங்கள் ஏற்படுத்திய கலா சாலைகளுக்கு க்ஷத்திரிய பாடசாலையெனப் பெயரிட்டிருக்கின்றனர். இவர்கள் நாங்கள் இந்தப் பூமியை யாண்ட ராஜவம்சத்தினர், சாணரக்காசு எங்களால் நிருமிக்கப்பட்டதெனபர். அதில் தென்னைமரம் போட்டிருப்பதே அதற்குச்சாக்ஷியென்பர். அது தவறு அதில் சிலுவைக்குறி உள்ளதென்பர் சில ஐரோப்பியர். இவர்களுக்கு ஏனாதிப்பட்டம் சைவ ஏனாதிநாயனரால் வந்தது போலும்."

—அபிதானசிந்தாமணி. பக். 614. 'சாணர்'.

மேலே சுட்டப்படும் சாணரக்காசும், சிலுவைக் குறியும் ஆயத்தக்கவை.

இங்கு சாணரின் பரம்பரையினராகக் குறிக்கப் படும் சைவ ஏனாதி நாயனாரை, சேக்கிழார் அடிகள் சைவ சமயப் பெருநூலான பெரிய புராணத்தில் கீழ்க்கண்ட வாறு கூறுகிறார்.

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியவப் பொற்பதியி
லீழக் குலச்சான்றா ரேனாதி நாதனார்.

ஏனாதி நாயனார் புராணம்-2.

திருத்தொண்டர் புராணச்சாரம் இயற்றிய சிவாச்சாரியாரும் இதை,

ஈழகுலக் சான்றா ரெயின னூர்வா
ழேனாதி நாதனார்... ... ...

ஏனாதி நாயனார் புராணம்-12.

எனவும், ஏனாதி நாதனார் சான்றார் குலத்த வரே எனக் குறிப்பிடுகின்றனர்.

சான்று, எனக்குறிக்கப்படும் தமிழ்ச் சொல்லும் சாட்சி, எனக் குறிக்கப்படும் வடமொழிச் சொல் லும், குறிப்பிடும் பொருள் ஒன்றே என்பதையும், இதனடிப்படையில், சாட்சிகள், சான்றோர் என, சான்று கூறும் மக்கள் முறையே, வடமொழியிலும் தமிழிலும் அழைக்கப்படுவர் என்பதையும் பார்த் தோம்.

ஐந்தவித்தானாகிய இயேசு பெருமானுக்குச் சான்று கூறுவாரான சான்றோர், பிற்காலத்தில், சான்றார்-சாணார் என ஒரு சாதியாக மாற்றப்பட் டனர் என்பதையும் நோக்கினோம். இவ்வாறு மாற்றப்பட்டவர்களே சான்றோர் என்ற உறுதிப் பாடு வேண்டுமானால் அவர்கள் எங்காவது 'சான்று கள்' என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளனரா? திருமறை கூறும் சாட்சிகளின் பரம்பரையினரே இச்சான்றோர் எனில் இச்சான்றார்களுக்கும் 'சாட்சி கள்' என்ற சொல்லுக்கும் தொடர்புண்டா? என் பதும் நோக்கத்தக்கது.

அவ்வாறு நோக்கும் பொழுது மேலே கண்ட ஏனாதி நாயனார் புராணமே நமக்குச் சான்றாக அமைகிறது. ஏனாதி நாயனாரின் குலம், சான்றார் குலமென, சேக்கிழாரடிகளும், சிவாச்சாரியாரும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

இச்சான்றார் குலத்தை, வடமொழியில் கூறினால் எவ்வாறு கூறுவது? சான்றாரைச் சான்றார் எனவே அழைக்க வேண்டுமேயல்லாது வேறு வகையில் மாற்ற முடியாது. ஆனால் உபமன்னியு ரிஷி அருளிய பக்த விலாசமாகிய பக்த மகாத்மியம், ஏனாதிநாதர் சரிதம் 3வது சுலோகத்தில்,

" தஸ்மின் னேஞுதிநாதாக்கிய ஆஸீத்
சாக்ஷி குலோத்பவ"

எனக் குறிக்கப்பட்டுள்ளது. சான்றார் குலம் என்பது சாட்சி குலமே என்பது இவ்வாசிரியரின் உறுதியான கருத்தாகிறது. அப்படியானுல்,

கிறித்தவத் திருமறை சுட்டும்—சாட்சிகள்
சங்க நூல்கள் கூறும் —சான்றோர்கள்
சாணூர் எனக் கூறப்படும் —சான்றார்கள்

ஆகிய மூவகைக் கூட்டத்தினரும், ஒரே கூட்ட மக்களே என்பதும், இவர்களின் பெயர் மட்டுமே உணருகிறவர்களின் உணர்ச்சிக்கேற்பத் திரிபடைந்துள்ளதென்பதும், உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கி நிற்கிறது.

நாம் முன்பு ஆய்ந்தபடி (பக். 38) முதலியார், செட்டியார் போன்ற பெயர்களும், பிற்காலத்து இம் மக்களுக்கு ஏற்பட்டனவென்பதை, 'தோமையரும் தமிழகமும்' என்ற தலைப்பில், வரலாற்றுச் சான்றுகளுடன் (பக். 109-பெருஞ்செட்டி, பக். 114-தானை முதலியார்) தெளிவாகக் கண்டோம்.

தோமையரைப் பின்பற்றிய சான்றோர் குழாம், சேரநாட்டிலும், சோழ நாட்டின் ஒரு பகுதியாகிய தொண்டை நாட்டிலும், கி.பி. முதல் நூற்றுண்டிலேயே ஏற்பட்டன என்பதை வரலாறு கூறுகிறது.

1. சேரநாட்டு அடியவர் கூட்டம் அங்குள்ள பிராமணர்களின் ஆதரவைப் பெற்றிருந்தது அங்கு தோமையரால் ஏற்படுத்தப்பட்ட ஏழு சபைகளும் தலைவர்களாக இக்கொள்கையை ஏற்றுக்கொண்ட பிராமணர்களே நியமிக்கப்பட்டனர். ஆனுல் சோழ நாட்டுச் சபையோ பிராமணர்களின் எதிர்ப்பைப்

பெற்றது. தோமையரைக் கொன்றவர்கள் பிராமணர்கள் என்றே சொல்லப்படுகிறது. ஆகவே பிராமணர்களின் ஆதிக்கம் தமிழ்நாட்டில் ஓங்கிய பிற்காலத்தில் சோழநாட்டுச் சபையே வன்மையுடன், பிராமணர்களால் எதிர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். இந்நிலையில் சேரநாட்டுச் சபைகளுக்கும் சோழநாட்டுச் சபைகளுக்குமிடையேயும் சரியான உறவு கொள்ள முடியா நிலை ஏற்பட்டிருக்க வாய்ப்பு உண்டு.

2. இடைக்காலத்தில் சேரநாடு மொழியாலும் வேறுபடுத்தப்பட்டுவிட்டது. தமிழின் சிறப்புக் குன்றி வடமொழியின் செல்வாக்கு அதிகப்பட்டதால், தமிழகத்தின் முதல் பிரிவாகிய சேரநாடு, தமிழிலிருந்து பிரிந்து, வேறு மொழி பேசும் நாடாகவே மாறிவிட்டது. ஆகவே சேரநாட்டிலுள்ளவர்களும், சோழ பாண்டிய நாட்டிலுள்ளவர்களும், மொழியாலும், இலக்கியத்தாலும், பண்பாலும் வேறுபட்டனர். இவ் வேறுபாடு இயேசுவின் அடியவர் கூட்டத்திடையேயும் உறுதியாக ஏற்பட்டிருக்க வேண்டும்.

3. பிரிக்கப்பட்ட சேரநாடு மேலைநாடுகளுடன் இடைவிடாத நெருங்கிய தொடர்புடன் விளங்கியிருக்கிறது. மேலை நாடுகளிலிருந்து வணிகத்தின் பொருட்டு மக்கள் வந்து தங்கியிருக்கின்றனர்.

இவ்வாறு வந்தவர்களுள் கிறித்தவர்களும் உண்டு. இயேசுவின் அடியவர்கள் மேலை நாடுகளில் 'கிறித்தவர்' என்ற பெயருடன் விளங்கி, சேரநாட்டு மக்களுடன் தொடர்பு கொண்டமையால், சேரநாட்டில் வாழ்ந்த சான்றோரும் மேலை நாட்டினரைப் பின்பற்றி 'கிறித்தவர்' என்ற

பெயராலேயே தங்களையும் அழைத்திருக்கக்கூடும். ஆனால் இவ்வாய்ப்பு, சேரநாட்டு மக்களுடன் தொடர்பற்று வாழ்ந்த, சோழ நாட்டு மககளுக்குக் கிடைத்திருக்க வாய்ப்பில்லை என்பது சிந்திக்கத் தக்கது.

4. சாதிகள் பல்கிப் பெருகிய இடைக்காலத்தில் பிராமணர்களின் ஆதரவைப் பெற்ற சேர நாட்டுச் சபை தன்னையும், பிராமணர்களுக்கு ஒப்பான ஒரு உயர் சாதியாக எண்ணிக்கொண்டு மற்றவர்களினின்றுப் பிரிந்து வாழ்ந்திருத்தல் கூடும். ஆனால் சோழ நாட்டில் பிராமணர்களின் எதிர்ப்பைப் பெற்ற தொண்டை நாட்டுச் சபையோ கீழான தென ஒதுக்கப்பட்டிருக்க வாய்ப்பு இருக்கிறது. தொண்டைநாட்டுச் சபையோ, அது விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தொடர்ந்து வருகின்ற அதன் பெயராலேயே 'சான்றோர்' என அழைக்கப்பட்டிருத்தல் கூடும். எனவே சேரநாட்டுச் சபையும் சோழ நாட்டுச் சபையும் சாதி என்ற பெயராலும் பிரிக்கப்பட்டிருக்க வாய்ப்புண்டு.

இன்றும் சேர நாட்டுச் சபை உலகில் வேறெங்குமே காண முடியாத முறையில், கிறித்தவத்திற்கு முரண்பட்ட கொள்கையில் தன்னை உயர் சாதி எனக் கூறிக்கொள்ளுவதுடன், இயேசுவை ஏற்றுக் கொண்ட மற்ற அடியவர்களையும் தன்னுடன் சேர்த்துக்கொள்ளுவதில்லை. இயேசுவைப் பற்றி மற்றவர்களுக்குக் கூறுவதும், மற்றவர்களோடு உறவு கொள்ளுவதும், தங்களுடன் இணைப்பதும் இச்சபையில் இல்லை என்பதும் நோக்கத்தக்கது.

"கிறித்தவர்கள் உயர்குலத்தவராக மதிக்கப் பெற்றமையால், அவர்கள் கீழினத்தவரை மிகவும் கேவலமாகக் கருதினதோடு, உயர்குல வைதீகர்கள் தாழ்த்தப்பட்டோரிடம் கொண்டிருந்த அதே

மனப்பான்மையை இவர்களும் கொண்டிருந்தார்கள் "'தங்கள் சமூக உரிமைகளைப் பாதுகாப்பதிலேயே இவர்கள் அக்கறை கொண்டிருந்தார்களே யொழிய, நற்செய்தியைப் பரப்புவதில் அவர்கள் சிறிதும் கவனம் செலுத்த வில்லை. பல நூற்றாண்டுகளாக அவர்களுடைய ஆன்மீக வாழ்வு மிகவும் குறைவு பட்டதாயிருந்தது.'' என்று 'கீயே' என்னும் ஆசிரியர் 'இந்தியாவில் சீரிய திருச்சபையின் வரலாறு' என்னும் நூலில் கூறியுள்ளார்''

சி. பி. மேத்யூ, எம். டபிள்யூ. தாமஸ் — 'புனித தோமையரின் இந்தியச் சபைகள்' பக். 20-22

தொண்டை நாட்டில் வாழ்ந்த இயேசுவின் அடியவரான சான்றோர், ஏற்றத்தாழ்வான சமுதாய மாற்றங்களுக்கு உட்பட்டபோதிலும், தங்களின் உயர்ந்த குணங்களிலிருந்து சிறிதும் வழுவாமல் வாழ்ந்து, நல்லோரின் பாராட்டைப் பெற்றிருக்கலாம்.

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே, சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்."

என்ற கருத்திற்கேற்ப அவர்கள் வாழ்க்கை இருந்திருக்கலாம். ஆகவே தொண்டை நாட்டில் வாழ்ந்த சான்றோரான இயேசுவின் அடியவர்களைப் பற்றி இலக்கியத்தில் குறிப்புண்டா என நோக்குவோம். சேரநாட்டுச் சான்றோர்கள், பிராமணர்களுக்கு நிகராகத் தங்களையும் ஒரு உயர் சாதியாக்கிக் கொண்டமையாலும், இடைக்காலத்தில் சோழ பாண்டிய நாடுகளிலிருந்து மொழியால் பிரிந்து வேற்று மொழி நாடாகிவிட்டமையாலும், பெயராலும், பண்பாலும், மொழியாலும், தொடர்பாலும் முற்றிலும் வேறுபட்ட தன்மையைக் கொண்ட அவர்களை இடைக்காலத் தமிழ் இலக்கி

யங்களில் காண்பது முடியாது. ஆகவே இடைக் காலத் தமிழ் இலக்கியங்களில் நமக்குக் காணக் கிடைக்கக் கூடியவர்கள் தொண்டை நாட்டுச் சான்றோர்களே. ஆகவே தொண்டை நாட்டுச் சான்றோர்களைப் பற்றிய குறிப்பு இடைக்கால, பிற்கால இலக்கியங்களில் உண்டா என நோக்கு வோம்.

உண்டு என்பதைத் தினகர வெண்பா கூறு கிறது.

> "தக்க தொண்டை நன்னாடு சான்றோருடைத்
> [தென்னும்சொல்
> திக்கறிய வந்தால் தினகரா—ஒக்குமே."
> —தினகர வெண்பா-103

தொண்டை நாடு சான்றோரிருந்தமையால் நன்னாடு ஆயிற்றாம். தொண்டைநாடு சான்றோ ராற் சிறப்புப் பெற்றமை திக்கறிந்த செய்தியாம்.

அடுத்த குறிப்பை நமக்குக் கொடுப்பது திருக் கழுக்குன்ற புராணமாகும். திருக்கழுக்குன்றம் தொண்டை நாட்டிலுள்ள ஒரு திருப்பதி. அத் திருப்பதியின் நாட்டுச் சிறப்பைக் கூறும் ஆசிரியர், அந்நாட்டிலுள்ள சோலைகளை வருணித்துப் பாடு கிறார். அச்சோலைகள் தங்களிடம் வருவார்க்கு, எல்லாச் சிறப்பும் சிறிதும் குறைவின்றிச் செய்கின் றனவாம். அவை செய்யும் அச் சிறப்பு எவ்வா றிருக்கிறதென்றால், தொண்டை நாட்டிலுள்ள பழமையான சான்றோர் குடியில் பிறந்தவர்கள் விருந்தினரை ஊட்டுவதைப்போல இருக்கிறதாம்.

கொய்தள வுகுத்த மெல்லென்
　　கொழுமலர்க் குப்பை நாப்பண்
பெய்தன கவரிப் பாலும்
　　பிரசமும் பழத்தின் சேறு
மொய்தரத் தொண்டை நாட்டு
　　முதுகுடிப் பிறந்த சான்ருேர்
ரெய்திய விருந்தை யூட்டு
　　மில்லெனப் பொலிந்த சோலை.

—திருக்கழுக்குன்ற புராணம்-நாட்டுப்படலம்-18.

வள்ளுவர் கூறும் வேள்வி, தொண்டை நாட்டு முதுகுடிப் பிறந்த சான்ருேர் இல்லங்களிலே சிறப்புற நடைபெற்றதாக இச் செய்யுள் சான்று கூறுகிறது. இந் நூல் தொண்டை நாட்டு முதுகுடி, 'சான்ருேர் குடியே' என்பதை ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறது.

மூன்ருவதாக, ஔவையார் தொண்டை நாட்டுச் சான்ருேரின் சிறப்பை, மற்றச் சிறப்பு களுடன் ஒப்பிட்டுக் காட்டுகிருர். இச் சான்ருே ரால் தொண்டை நாடே சிறப்படைந்ததாக ஔவையார் கூறுகிருர்

வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னுடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்ருெண்டை
நன்னுடு சான்ருே ருடைத்து.

இச் செய்யுளில் தமிழகத்தின் முப்பெரும் பிரிவு களைக் கூறி, அவற்றுடன் அமையாது, நான்காவ தாகிய தொண்டை நாட்டை விதந்து கூறிச் சிறப் பித்ததுடன், அதற்கு 'நன்னுடு' என்ற அடைமொழி யையும் கொடுத்துள்ளார் ஔவையார். அது நன்னுடு என்ற சிறப்பையடைவதற்குக் காரணம்

சான்றோரை அது பெற்றிருத்தலே எனவும் கூறுகிறார்.

சான்றோர் கூட்டம் ஏற்படக் காரணமான தோமையராகிய சான்றோர் கொல்லப்பட்டு இறந்ததும், வரலாற்றின்படி பரம்பரை பரம்பரையாக இயேசுவின் அடியவர் வாழ்ந்து வந்ததும், உலகின் மறு கோடியான இங்கிலாந்திலிருந்த மன்னர்களாலும் அதிகப் புனிதமாக எண்ணப்பட்ட இடமாக விளங்குவதும், திருவள்ளுவர் போன்ற அறிவிற் சிறந்தவர், சான்றோர் கொள்கையை ஏற்று வாழ்ந்து மக்களுக்கு பயன்படும்படி எடுத்துக்கூறிய இடமும், தொண்டை நாடே யாகையால் அது சான்றோரால் சிறப்பைப் பெற்றது என்பதில் எவ்வித ஐயமும் இருக்கக் காரணம் இல்லையல்லவா ?

ஔவையார் கூறும் சான்றோர் இயேசு பெருமானின் அடியவரே என்பதில் ஐயங்கொள்ளுவாருண்டெனில் அவர்கள் சிந்தனைக்கு :—

1. தமிழகத்தின் முப்பெரும் நாடுகளுக்கும் மூன்று சிறப்புப் பொருட்களை, வேழம், சோறு, முத்து எனக்கூறிய ஔவையார், தொண்டை நாட்டை வலிந்து இழுத்ததுடன், அதற்கு நன்றுடை என்ற அடைமொழியும் கொடுத்து அதன் சிறப்பிற்கு மட்டும் மனிதர்களைக் கூறக் காரணம் என்ன?

2. சான்றோர்–சிறந்தவர்கள் அல்லது உயர்ந்தவர்கள் என்ற பொருளை மட்டுமே உடையதாக இருப்பின், மற்றச் சேர சோழ பாண்டிய நாட்டில் சிறந்தவர்களே கிடையாது என்பது பொருளா?

3. சிறந்தவர்களின் எண்ணிக்கை, தொண்டை நாட்டில் அதிகம் என்றால், மற்ற மூன்று நாடுகளிலும் இழிந்தவர்களே மிக அதிகம் என்பது பொருளா ?

இதுவரை நமக்குக் கிடைத்துள்ள குறிப்புகளி லிருந்து, ஒப்பற்றவனாகிய கடவுளின் நற்செய்தி யைச் சான்றாகக் கூறி அறிவிக்கும்படியாக, அலை கடலைச் சிங்கமெனக் கடந்து வந்து, நம் தமிழகத் தின் தொண்டை நாட்டில், தன் தலைவனைப் பின் பற்றித் தன்னுயிரைக் கொடுத்தார் தோமையர் என்பதும், அவரைப் பின்பற்றிய அடியவர் 'சான்றோர்' என்ற பெயருடன் வழிவழியாகத் தொண்டை நாட்டில் வாழ்ந்தனர் என்பதும் விளங்குகிறது.

ஒப்பற்ற கடவுளாகிய ஐந்தவித்தானுக்குச் சான்றாக நின்று, நற்செய்தியை இந்நாட்டு மக்க ளுக்கு ஆண்மையுடன் அறிவித்த சான்றாண்மை யுடையோர், சங்ககாலத்தில் நம் தமிழகத்தில் வாழ்ந்தனர் என்பது எவ்வித ஐயத்திற்கும் இட மின்றி விளங்குகிறது. ஆலத்தூர்க்கிழார் சுட்டும் ஒப்பற்ற கடவுளாகிய "ஒருவன் செய்தி"யையும், ஐந்தவித்தானுக்குச் சான்று கூறும் சான்றோரை உருவாக்கிக் காட்டும் திருக்குறள் சுட்டும் 'செய் நன்றி'யையும் ஒப்பிட்டு மேலும் நோக்குவோம்.

# 7. செய்தி

செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லை —புறம்.

செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை —குறள்

செய்தி என்றால் என்ன?

செய்ந்நன்றி என்றால் என்ன?

செய்தியும், செய்நன்றியும் ஒன்றா?

செய்நன்றியே செய்தியாகுமா?

'கொன்றமகற்கு உய்வில்லை' என்ற அளவில் இரண்டும் ஒன்றானால், அதாவது செய்நன்றியே செய்தியானால், செய்நன்றியாகிய செய்தியைக் கொன்றோர்க்கு உய்தியில்லை என்பது நிலைநாட்டப் படுவது எங்கே? விளக்கம் பெறுவது எங்கே? மக்களுக்கு அறிவிக்கப்படுவது எங்கே?

சான்றோர் பின்பற்றிய சமயமே கிறித்தவம் என்ற முடிவு தோன்ற வேண்டுமாயின், சான்றோர் கொள்கை விளக்கத்தில் நமக்குத் தோன்றும் ஐயங்களை விவிலியம் தீர்க்கிறதா? என்பதை நோக்குவோம்.

செய்தி

" நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்."

என்ற நீத்தார் பெருமைச் செய்யுளிலுள்ள, 'மறை மொழி' என்ற தொடருக்குப் பன்மொழிப்புலவ

ரவர்கள், எல்லையற்ற மறை உட்பொருள் வளம் உடைய தெய்விக இன நற்செய்தி (Gospel, God-Spell, Good-Spell) எனப் பொருள் கூறுவதுடன்,

> "கிறித்தவத் திருமறை ஏட்டில் ஆதி பகவன் நிலையுடைய இயேசு பெருமான் வாய் மொழிச் செய்தி அடங்கிய பிரிவுகள் இன்றும் இப்பெயராலேயே அழைக்கப்படுவது காண லாம்" எனவும் விளக்கம் கொடுக்கிறார்.

(மணிவிளக்கவுரை I பக். 703)

ஆகவே பன்மொழிப்புலவர் கருத்துப்படி, 'செய்தி' என்பதும், 'மறைமொழி' என்பதும், 'கிறித்தவத் திருமறை' என்பதும் ஒன்றே என்று கிறது. அதாவது கிறித்தவத் திருமறை, 'மறை மொழி' எனவும், 'செய்தி' எனவும் அழைக்கப் படும் என்பது விளக்கம்பெறுகிறது.

மற்றச் சமயங்களுக்கும் கிறித்தவத்திற்கு மிடையேயுள்ள தலையாய வேற்றுமை இங்கு நோக்கத்தக்கது. 'மறை' என்னும் சொல் பொது வாக எல்லாச் சமயங்களின் சிறப்பு நூல்களையும் குறிப்பினும், 'மறை' என்ற சொல்லால் குறிக்கப் படும் 'செய்தி' என்னும் சொல் கிறித்தவத் திரு மறை ஒன்றையே குறிக்கும் என்றாகிறது.

ஆகவே 'செய்தி' என்று புறநானூற்றுப் பாட லால் சுட்டப்படும் சொல், கிறித்தவத் திருமறை யைக் குறிக்க ஏதுவுண்டு என்றாகிறது. புறநானூறு 'செய்தி' என்று மட்டும் தனியாகக் கூறாது, அதை விளக்கும் முகத்தான் 'ஒருவன் செய்தி' என, 'ஒப் பற்றவனாகிய தனக்குவமை யில்லாக் கடவுளின் செய்தி' எனக் கடவுளுடன் தொடர்பு படுத்திக் கூறுகிறது. 'கடவுளுடன் இணைந்த செய்தி' என்ற

பெயரால், மறைமொழியாகிய திருமறையை யுணர்த்தும் ஒரே சமயம் கிறித்தவமே. ஆகவே இது கிறித்தவம் ஒன்றையே குறிக்கிறது எனக் கொள்ள நேரிடுகிறது. புறநானூறு கூறும் 'செய்தி'யை மேலும் நோக்குவோம். செய்தியின் விளக்கம் என்ன?

செய்தியின் பகுதி—செய். செய்யப்பட்ட ஒன்றைக் கூறுவதே செய்தி. அதாவது நடைபெற்ற ஒரு செயலைத் தான் உணர்ந்து பின் மற்றவர்களுக்கு அறிவித்தலே செய்தி.

செய்தியை வெளிப்படுத்துவதற்குத் தேவையானது எது? வார்த்தை:

வார்த்தை இல்லையானால் செய்தி இல்லை.

வார்த்தையின் பிறப்பிடம் எது? எண்ணம், கருத்து. ஆகவே அதை நிரல்பட வைத்தால்,

1. கருத்து. 2. வார்த்தை. 3. செய்தி.

கருத்திலிருந்து வார்த்தையும் வார்த்தையிலிருந்து செய்தியும் வெளிப்படுகின்றன. இவற்றை ஆராயின்;

1. கருத்து — அருவம்.
2. வார்த்தை — அருவ உருவம்.
3. செய்தி — உருவம்.

1. ஒருவர் உள்ளத்தே, செய்தியானது, கருத்தாக இருக்கும்பொழுது நமக்குத் தெரிவதில்லை. நாம் அதை உணர்வதில்லை. அருவம்.

2. அவர் அச்செய்தியை நமக்கு அறிவிக்கத் தொடங்கி, செய்தி வார்த்தையாகுங்கால்,

வார்த்தையை நாம் காதால் கேட்டு, நம் உள்ளத்தே அதற்கு உருவம் கொடுக்கத் தொடங்குகிறோம்—அருவத்திலிருந்து உருவம் தோன்றும் நிலை—அருவஉருவம்.

3. அவர் செய்தி முழுவதையும் அறிவித்து முடிக்குங்கால், அச்செய்தி முழுவதும் செய்யப்பட்ட ஒன்றைப்பற்றிய முழு உருவம் பெற்று, நம் உள்ளத்தே நிலை நிற்கிறது. நாம் அதை முழுவதுமாக உணர்ந்து, அனுபவிக்கிறோம்—உருவம்.

வார்த்தை வெளிப்படுதலாகிய இரண்டாம் நிலை ஆழ்ந்து நோக்கத் தக்கது.

கருத்தாகிய அருவத்திலிருந்து செய்தியாகிய உருவம் தோன்றுவதற்குக் காரணமாய் இடைநின்று அருவத்தையும் உருவத்தையும் இணைக்கும் அருவ உருவமே வார்த்தை.

வார்த்தையை இரண்டு நிலைகளில் நாம் அறிகிறோம்.

1. ஒலி வடிவம்

2. வரி வடிவம்.

குறிப்பிட்ட காலத்தில் தோன்றிய ஒலி, என்றும் உணர்ந்துகொள்ளும்படியாக வரிவடிவத்தில், அமைக்கப்படுகிறது.

நம் காதில் விழும் பல்வகை ஒலிகளிலிருந்து பிரித்தறிந்து, அவ்வொலி வெளிப்படுத்தும் கருத்தை அறியும்பொழுது, செய்தியின் உருவம் நம் உள்ளத்தேத் தோன்றுகிறது. அவ்வாறே, நாம் காணும் பல்வகை வரிவடித்திலிருந்து, ஒன்றைப்

பிரித்தறிந்து ஏற்குங்கால், செய்தியின் உருவம உள்ளத்தே தோன்றுகிறது.

ஆகவே செய்திக்குக் காரணமான வார்த்தை, கருத்தாகிய அருவத்திலிருந்து எழுந்து, உருவ மடைந்து, செயலாக வெளிப்படும் பொழுதே 'செய்தி' பிறக்கிறது.

செய்தி பிறக்கக் காரணமாயிருப்பது அருவத்திலிருந்து எழுந்து உருவ மடையும் வார்த்தையே என்பது தெளிவு.

புறநானூறு குறிப்பிடும் 'ஒருவன் செய்தி' கிறித்தவத் திருமறையே என நாம் கொள்ள வேண்டுமானல், மேலே நாம் கண்ட. செய்தியைப் பற்றிய குறிப்புகள் சிறப்பாக வாத்தையைப் பற்றிய குறிப்புகள் விவிலியத்தில் உண்டா? என்பதை நோக்கவேண்டும்.

'ஒருவன்' என்பது ஒப்பற்றவனுகிய தனக் குவமையில்லாக் கடவுளைக் குறிக்கின்றதென்பதைப் பார்த்தோம். கடவுள் எல்லாவற்றையும் கடந்த வர். அருவமானவர்; ஆனல் எல்லாவற்றையும் கடவும் அதாவது நடத்தும் கருத்தாகவும், கருத்தா வாகவும் விளங்குபவரும் அவரே.

கருத்தாக இருந்து, எல்லாவற்றையும் கடந்து, கடவி நிலைபெறும் கடவுள், ஒரு 'செய்தி'யை மனி தருக்கு அனுப்ப உள்ளங் கொண்டார். அருவத் திலிருந்து அருவ உருவமானுர் கருத்தோடிணைந்த வார்த்தையானவர், பின்னர் வெளிப்பட்டுக் கடவு ளின் செய்தியானுர். அருவ உருவத்திலிருந்து உருவ மானுர். உருவமான 'செய்தி'யை மக்கள் உணர்ந் தனர். கடந்து நிற்கும் அருவமான கடவுளின் 'செய்தி' அருவுருவமான வார்த்தையானவர் வழி

யாக, உருவம் பெற்று, பூமியிலே தோன்றியது. 'ஒருவன் செய்தி'யை மக்கள் உணர்ந்தனர்.

''ஆதியிலே வார்த்தை இருந்தார்:
அவ்வார்த்தை கடவுளோடு இருந்தார்,
அவ்வார்த்தை கடவுளாயும் இருந்தார்.
வார்த்தை மனுவுரு வானார்;
நம்மிடையே குடி கொண்டார்.
யாவரும் கடவுளை என்றுமே கண்டதில்லை;
தந்தையின் அணைப்பிலுள்ள ஒரே பேறுனவர் தான்
அவரை வெளிப்படுத்தினார்.

(அருளப்பர். 1:14,18)

கடவுளின் செய்தி மனிதருக்கு வெளிப்படுத்தப் பட்டது. வெளிப்படுத்தப்பட்ட 'செய்தி'யின் தன்மை என்ன? 'செய்தி' என்ன?

''அஞ்சாதீர், இதோ! மக்களுக்கெல்லாம் மாபெரும் மகிழ்ச்சியூட்டும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று தாவீதின் ஊரிலே உங்களுக்காக மீட்பர் பிறந்துள்ளார். அவரே ஆண்டவராகிய மெசியா''

(லூக்கா 2:10-11)

செய்தியின் தன்மை— மக்களுக்கெல்லாம் மாபெரும் மகிழ்ச்சியூட்டுவது.

செய்தி — மீட்பர் பிறந்திருப்பது.

(மீட்பர் = விடுதலை செய்பவர். அடிமைப்பட்டிருக்கும் மக்களை, அடிமைத் தளையை நீக்கி, விடுதலை செய்பவரே மீட்பர் ஒருவரால் அடகு வைக்கப்பட்ட பொருளை, அவர் மீட்க முடியாத போது வேறொருவர் அடகுக் குரிய விலையைக் கொடுத்து மீட்டு விடுவிப்பது இங்கு ஒப்பிடத்தக்கது)

மேலே கண்ட செய்தியை முதன் முதல் அறிவித்தவர்கள் அகல் விசும்புளாராகிய தேவதூதர்கள். 'ஒருவன் செய்தி' உருவமாயிற்று. அதுவே,

இன, மொழி, நாடு கடந்து மக்களுக்கெல்லாம் மாபெரும் மகிழ்ச்சி யூட்டும் நற்செய்தியாயிற்று.

செய்தியும் செய்நன்றியும் ஒன்று என்ற நமது முந்தைய கேள்விக்கு இப்போதுவிடை காண்போம்.

புறநானூறு கூறுவது 'செய்தி'
வள்ளுவர் கூறுவது 'செய்ந்நன்றி'

செய்ந்நன்றியைக் கூறி அறிவித்தலே செய்தி. எவ்வாறு ?

மனிதர்களை மீட்டுக்கொண்டது— செய்ந்நன்றி
அதைக்கூறி அறிவிப்பது — செய்தி
எப்போது மீட்டார் ?

வார்த்தை உருவமாவதற்கு முன்பே, கருத்தாக இருக்கும் அருவ நிலையிலேயே மீட்பின் எண்ணம் உருவாயிற்று. அது நிறைவேறியது எவ்வாறு ?

அக்கருத்து, வார்த்தையாகிய அருவுருவம் அடைந்து, குழந்தையாகப் பிறந்து மறு உருவாகிச் சிலுவையில் பலியாகி உயிர்த்தெழுதலில் முற்றுப் பெற்றது. இதுவே கடவுள் மனிதனுக்குச் செய்தது. மனிதனுக்கு அதுவே அவர் செய்த நன்றி.

அந்த நன்றி அன்றும் அதற்கு முன்னரும் வாழ்ந்த மக்களுக்கு மட்டுமே செய்யப்பட்டதன்று. இன்று வாழும் மக்களுக்காகவும், இனிவாழ இருக்கும் மக்களுக்காகவும், செய்யப்பட்ட, செய்யப்படுகின்ற, செய்யப்படும் நன்றியாகும். ஆகவே அந்த ஒருவனாகிய இறைவனுடைய நன்றி முக்காலத்திற்கும் பொருத்தமான ''செய்ந்நன்றி'' யாகும் (வினைத்தொகை).

அதை மக்கள் உணர்ந்து அடைந்து கொள்ளும்படியாக வெளிப்பட்ட வெளிப்பாடே 'செய்தி' யாகும்.

ஆகவே செய்தியாக விளங்கும் ஐந்தவித்தானின் செய்ந்நன்றியைக் கொன்றவர்க்கு நிலம் புடை பெயர்வதாயினும் உய்தியில்லை. ஆனால் சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடுவாழ்வார்.

> "விசுவாசத்தினால் இறைவனுக்கு ஏற்புடையவனாக்கப்பட்டவனே வாழ்வு பெறுவான்' என எழுதியுள்ளதன்றோ? இவ்வாறு ஏற்புடையவர்களாக்கும் இறையருட் செயல் முறை அந்த நற்செய்திலேயே வெளிப்படுகிறது." உரோமர் 1:17.

இந்நற்செய்தி கடவுளுடைய மகனைப் பற்றியதாகும். உரோ 1:5

கடவுளின் நற்செய்தியை அறிவிப்பதே நான் செய்யும் திருத்தொண்டு. அதுவே என் குருத்துவப் பணி. உரோ 15:16

> "இயேசு கடவுளின் மகனாகிய மெசியா வென்று நீங்கள் விசுவசிக்கும் படியும், விசுவசித்து அவர் பெயரால் வாழ்வு பெறும் படியும் இந்நூலிலுள்ளவை எழுதப்பெற்றன. அருளப்பர் 20:31

> உலகெங்கும் போய்ப் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியினை அறிவியுங்கள். விசுவசித்து ஞானஸ்நானம் பெறுபவன் மீட்புப் பெறுவான். விசுவசியாதவனுக்குத் தண்டனை கிடைக்கும்." மாற்கு 16:15-16.

செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லை — புறம்
செய்ந்நன்றி கொன்றமகற்கு உய்வில்லை — குறள்

இதுவரை நாம் நோக்கியவைகளிலிருந்து தமிழகச் சான்றோர் கூறியுள்ள செய்தியும் கிறித்தவத் திருமறைகூறும். நற்செய்தியும் ஒன்றே என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை என்றுகிறது.

## புறநானூறு சுட்டும் 'அறம்' எது?

புறநானூறு சுட்டும் 'செய்தி' கிறித்தவர்களின் திருமறையாகிய நற்செய்தியே என்பதைக் கண்டோம். இப்போது புறநானூறு சுட்டும் 'அறம்' என்பது எதைக் குறிக்கிறதென்பதைப் பார்ப்போம்.

முன்பு இதற்கு விளக்கம் கொடுத்தவர்களின் கருத்தின்படி, புறநானூறு சுட்டும் அறம் திருக்குறளே என்பதை நோக்கினோம். இப்போது அது சரிதானா? என்பது ஆயவேண்டிய ஒன்று ஆகிறது. அறமாகிய நூல், எதைக் குறிப்பிடுகிறது என்பதைப் புறநானூறு தெளிவாக விளக்குகிறது.

> ''எத்தகைய குற்றத்திற்கும் மன்னிப்பு உண்டு. ஆனால் உலகமே தலைகீழாக மாறினாலும் 'ஒருவன் செய்தி'யைக் கொன்றவர்க்கு உய்தி இல்லை என்று 'அறம்' பாடியுள்ளது''

திருக்குறள் அறமாகிய நூலானால் திருக்குறள் இவ்வாறு பாடியுள்ளதா? திருக்குறள் கூறியிருப்பதெல்லாம்:—

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

என்பது மட்டுமே. இதில் கூறப்பட்டிருக்கும் எந்நன்றி, செய்ந்நன்றி என்பதைக்கூட நாம் புறநானூற்றுப் பாடல் கொண்டே விளங்கிக் கொள்ள வேண்டியதிருக்கிறது. செய்ந்நன்றியும், செய்தியும் ஒன்று என்பதையும், அதுவே 'ஒருவன் செய்தி' என்பதையும் விளக்குவது புறநானூறே.

இவ்வகையில் திருக்குறளுக்கு விளக்கம் புறநானூற்றில் கிடைக்கிறதேயன்றிப் புறநானூற்றுக்கு விளக்கம் திருக்குறளில் கிடைக்கவில்லை. ஆகவே புறநானூறு சுட்டும் 'அறம்' திருக்குறளாக இருக்க வாய்ப்பில்லை எனலாம். இருப்பின் கருத்து முழுமைக்கும் விளக்கம் இருந்திருக்கும். ஒருவன்

செய்தியைப் பற்றிய விரிவான விளக்கமும் நமக்குக் கிடைத்திருக்கும் ஆயினும் ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிகிறது. புறநானூறும், திருக்குறளும் ஒரே மரத்தில் தோன்றிய இரு கிளைகள் எனலாம். ஏனெனில் ஒன்றின் விளக்கம் மற்றதில் இருப்பதோடு, இரண்டின் அடிப்படைக் கருத்துக்களும் ஒன்ருக இணைந்தேயுள்ளன.

அப்படியானல் இவ்விரண்டு கிளைகளையும் தாங்கும் அடிமரம் எது? திருக்குறளின் செய்நன்றியும், புறநானூற்றின் செய்தியும் அடங்கிய, நிலம்புடை பெயர்வதாயினும் கொன்ரேர்க்கு உய்தியில்லெனத் தெளிவாகக் கூறும் 'ஒருவன் செய்தி'யாகிய 'அறம்' எது?

ஒருவன் செய்தியாகிய 'அறம்' நிறைமொழி மாந்தராகிய ஐந்தவித்தானும் அறவாழி அந்தணன் அருளிய, 'அந்தணர் நூலில்' கூறப்பட்டுள்ள மறைமொழியே ஆகும்.

இது வரை இந்நூலில் நாம் ஆய்ந்தவைகளைத் தொகுத்துப் பார்த்தால்:–

1. இயேசு பெருமானின் அடியவர் விவிலியமாகிய திருமறையில் 'சாட்சிகள்' என்று குறிக்கப்படுகின்றனர். அப் 1:8
2. 'சாட்சிகள்' என்ற பெயரால் தமிழகத்தில் ஒரு தனிக்கூட்டமக்கள் அழைக்கப்பட்டனர் என்பதை உபமன்யுரிசி உறுதிப்படுத்துகிருர். —(ஏனுதிநாதர் சரிதம்-சுலோ. 3.)
3. 'சாட்சிகள்' என்ற வடமொழிச் சொல் குறிக்கும் சான்று கூறுவோரே 'சான்ரேர்' என்பது மறைமலையடிகளாரால் உறுதிப்படுத்தப்படுகிறது.
—மாணிக்கவாசகர் வரலாறு-பக்–79

4. திருக்குறளின் 133 அதிகாரங்களும் உரு வாக்கிக் காட்டுவது 'சான்றோனையே' என் பது வான்மீகிநாதன் அவர்களின் முடிவு.
—மொழிபெயர்ப்பு—முன்னுரை-பக்-8

5. சங்ககாலத்தில் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் கூட்டம் வடமொழி அந்தணரின் கொள்கைக்கு மாறாக மக்க ளுக்கு அறிவுரை கூறியுள்ளனர் என்பது டாக்டர் இராசமாணிக்கனார் அவர்களின் கருத்து.—(தமிழ். மொழி இலக்கியவரலாறு சங்ககாலம் பக் 247–249)

6. சங்க இலக்கியங்களும், வள்ளுவமாகிய தமிழ் மறையும் உருவாக்கிக் காட்டும் 'சான்றோர்களும்', விவிலியமாகிய திரு மறையினால் உருவாக்கப்படும் 'சாட்சிக ளும்' ஒரே கொள்கையினரே என்பதை, சான்றாண்மை, 'செய்தி' என்ற இரு அதி காரங்களும் எவ்வித ஐயத்திற்கும் இட மின்றித் தெளிவுபடுத்துகின்றன என்பதை இந்நூலில் நோக்கியுள்ளோம்.

ஆகவே சங்க இலக்கியங்கள், சிறப்பாகத் தமிழ் மறை, உருவாக்கும் 'சான்றோர்களும்', திருமறை உருவாக்கும் 'சாட்சிகளும்' ஒரே கூட் டத்தினர் அல்லவா? மறுப்பதற்கு இருக்கும் குறிப்புக்கள் யாவை?

## சான்றோர் யார்?

இதை மேலும் ஆயும் உங்கள் சிந்தனைக்கு:-

1. சங்க காலத்தில் நாம் காணும் வடமொழி அந்தணரின் பரம்பரையினர் நம்மிடையே யுள்ளனரா?

2. அவர்கள் நம்மிடையே இருப்பார்களா னால், அவர்கள் கொள்கைக்கு எதிர்க்

கொள்கையினராகச் சங்க நூல்கள் கூறும், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோரைப் பின்பற்றியவர்கள், அவர்களின் பரம்பரையினர் என்ன ஆயினர்?

3. சங்க நூல்களுடன் இணைத்தெண்ணப் படும் திருக்குறள் 'மறை' என வழங்கப் படுகிறது. இது எச்சமயத்தைச் சார்ந்த மறை. சமயம் சாரா நூல்களுக்கு மறை என்ற பெயர் உண்டா?

4. வரலாறு தெளிவாகக் கூறும் தோமையரின் அடியவர் தமிழ் நாட்டில் என்ன பெயர் பெற்றனர்? அவர்கள் கொள்கை என்ன ஆயிற்று? தோமையரின் அடியவர் வழி வழியாகத் தொண்டை நாட்டில் இருந்தும் அவர்கள் இலக்கியத்தில் பெற்ற இடம் யாது?

5. இன்று வரை, 'பொதுமறை' எனப்பெயர் பெறும் திருக்குறள், வடமொழி அந்தணர் களால் எதிர்க்கப்படுகிறதே ஏன்?

6. வடமொழியாளர்களால் எதிர்க்கப்படும் திருக்குறள், அவ்வட மொழியாளரின் கொள்கைக்கு முரண்பட்ட, தோமையரு டன் இணைந்த கிறித்தவர்களால் பெரிதும் விரும்பிப் பாராட்டப் படுகிறதே ஏன்? "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ் நாடு" எனப் பாரதி பாடுவதற்குக் காரணமாக, வள்ளுவர் புகழை உலகறியச் செய்து தமிழுக்கு வான் புகழைக் கொடுத்தவர் கள் கிறித்தவர்களே ஏன்?

7. திருக்குறளின் 133 அதிகாரங்களும் சேர்ந்து உருவாக்கும் 'சான்றோன்'

விவிலியம் உருவாக்கும் சாட்சியுடன் மட்டுமே இணைந்து காணப்படுகிறானே ஏன்?

8. 'சான்றார்' என்னும் தமிழ்ச் சொல்லுக்குச் 'சாட்சி' என வடமொழியில் உபமன்யுரிசி கூறுவது பொருந்துமா?

9. 'தொண்டை நாடு சான்றோருடைத்து' என்னும் ஔவை வாக்கில், 'சான்றோர்' பொருளென்ன? சான்றோர் உயர்ந்தவர்களே எனில் மற்ற நாடுகளில் உயர்ந்தவர் இல்லை என்பது பொருளா? பொருந்துமா?

10. வள்ளுவர் கூற்றில் 'எந்நன்றி'க்கும் 'செய்ந்நன்றி'க்கும் உள்ள வேற்றுமை யாது? எந்நன்றி கொன்றாலும் செய்ந்நன்றி கொல்லலாகாது என்னும் கருத்து எவ்வாறு பொருந்தும்?

11. புறநானூற்றுப் பாடல் சுட்டும், ஆன், மகளிர், பார்ப்பார் இவர்களைவிட மிகமிகச் சிறந்த அந்த 'ஒருவன்' யார்? அவன் 'செய்தி' யாது? அதைக் 'கொல்லுதல்' என்றால் பொருள் என்ன? 'நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன் செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லை'—எவ்வாறு பொருந்தும்?

12. அப்புறநானூற்றுப் பாடலின் இறுதியில் சுட்டப்படும் 'சான்றோர் செய்த நன்றுண்டாயின்' என்பதிலுள்ள 'நன்று' யாது?

## சான்றோர் யார்?